# உத்தராயணம்

லா. ச. ராமாமிருதம்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# மா ஸு

—மா ஸு, நினைவிருக்கிறதா? நாம் சந்தித்த புதுசு. எனக்கு ராயப்பேட்டையில் ஜாகை. நீங்கள் டவுன். இரவு எட்டுமணி வாக்கில் வருவீர்கள்— நீங்கள், தாத்து, செல்லம், ரங்கநாதன். எல்லோரும் பேசிக்கொண்டே மரீனா வழியே நடந்து, தங்கசாலைத் தெருவில் ஒரு குஜராத்தி பவன்— பூரி, பாஜி; சேறாட்டம் பால்; அதன்மேல் கணிசமாக மிதக்கும் ஏடு. அப்படியே பேசிக்கொண்டே கோவிந்தப்ப நாய்க்கன் தெரு; விளக்கு வெளிச்சத்தில், இரவு பகலாகியிருக்கும். மார்வாரிப் பெண்டிர், வளையல்களும், பாதங்களில் தண்டையும், கொலுசும் குலுங்க, விதவிதமான வர்னங்களில் மேலாக்குகள் சுழல, தெருவில் கும்மியடிக்கையில்— இது சௌகார்பேட்டையா, பிருந்தாவனமா?

—அப்படியே பேசிக்கொண்டே, கோட்டை ரயில்வே ஸ்டேஷனுக்குக் குறுக்கே வெட்டி, காந்தி- இர்வின் சாலை வழியே பேசிக்கொண்டே மீண்டும் மரீனா பீச்; நள்ளிரவில் பட்டை வீறும் நிலா. பேசிக்கொண்டே, பைக்ராப்ட்ஸ் ரோடு, விவேகானந்தர் இல்லம், ஐஸ்ஹவுஸ் ரோடு, பெஸண்ட் ரோடில் என் வீட்டில் என்னை விட்டுவிட்டு, மணி இரண்டாகிவிடும். பிரியாவிடையில் டவுனுக்குத் திரும்புவீர்கள். நம் அத்தனை பேருக்கும் அதென்ன பைத்யக்காரத்தனமோ?

ஞாயிறு, சிந்தாதிரிப்பேட்டையில் 'பீஷ்மன்' வீட்டுக்குச் செல்வோம். அடை டிபன். அதன் விறைப்பான மொறமொறப்பின் மேல் எண்ணெயின் நக்ஷத்திர மினுக்கு. நல்ல உணக்கை; காரம் சற்று கூடத்தான்.

பேசுவோம். பேசுவோமோ, என்னதெல்லாம் பேசுவோம், இலக்கியம், சினிமா, ஆண்டாள், நியூ தியேட்டர்ஸ், ஸெய்கல், கம்பன், 'துனியா ரங்க ரங்கே', ஆழ்வாராதிகள், தேவகிபோஸ் தேவதாஸ், வித்யாபதி, பாரதி, ராஜாஜி, நேரு, அத்வைதம்,

வசிஷ்டாத்வைதம். ஆவாரா- பேச்சு எங்கெங்கோ தாவி, நம்மை இழுத்துச் செல்லும் தன் வழியில். பலகணிகள் ஏதேதோ திறக்கும். புது வெளிச்சம், புது திருஷ்டிகள். புதுக் கூச்சங்கள். வியப்பாயிருக்கும், ஆனந்தமாயிருக்கும், சில சமயங்களில்—

—பயமாயிருக்கும்.

ஆதியப்ப நாய்க்கன் தெருவில் ஒரே வீட்டில், பதினெட்டு குடித்தனங்களில், உங்களதும் ஒன்று. "அது ஒரு Community life; நன்றாய்த்தானிருந்தது" என்பீர்கள். உங்களுடைய சுபாவமே அப்படி. ஆயிரம் சோதனைகளுக்கு நடுவில், எனக்குத் தெரிந்து நீங்கள் உங்களை வெறுத்துக்கொண்டோ, பிறரைச் சுளித்தோ ஏதும் சொன்னதில்லை.

மா ஸா, நினைவிருக்கிறதா, ஆதியப்ப நாய்க்கன் தெருவில், நீங்கள் இலவசமாக நடத்திய ஹிந்தி வகுப்புக்கள் நடந்த, ஓலைக்கூரை வேய்ந்த மொட்டை மாடியில்தான் ஜனனீ—என் முதல் கதைத் தொகுதிக்கு வித்திட்டவர் நீங்கள்தான்.

நானும் முப்பது வருடங்களில் பார்க்கிறேன், உங்களிடம் அசைக்க முடியாத சில திடங்களும் கொள்கைகளும் இருக்கின்றன. உடல் பூஞ்சையானாலும், நீங்கள் பலவான்தான். உங்கள் செயல்படலில் ஓசை கேட்பதில்லை. ஆனால் காரியம் முடிந்தபின், அதைவிடச் செவ்வென அது இருக்க முடியாது.

நம் 'ஜமா' எப்பவோ கலைந்துவிட்டது. அவரவர் எங்கெங்கேயோ. 'பீஷ்மனை' அபூர்வமாகச் சந்திக்கிறேன். ஆனால், தருமபுத்ரனின் சத்யரதம்போல், பூமியில் பாதம் பாவாத அந்தப் பரவச நாட்களின் அடையாளமாக நீங்கள் எனக்குத் திகழ்கிறீர்கள்.

மா ஸா, நினைவிருக்கிறதா?— இந்த அடியெடுப்பு என் சமுத்ரம் தாண்டலுக்கு எனக்கு ஹனுமத் பலம்; என் ககனத்துக்கு என் இறக்கை விரிப்பு, மா ஸா—

**லா. ச. ராமாமிருதம்**

# புண்ய காலம்

வானதி பதிப்பகத்தின் ஆதரவில் மீண்டும் சந்திக் கிறோம்.

நாலு தலைமுறைகளின் காலவீச்சுகள் அடங்கிய இக் கதைகளை, அவை தோன்றிய வரிசையில் கிரமப் படுத்தவில்லை. இந்தக் கலவை. இப்படியும் ஒரு ருசி இருந்துவிட்டுப் போகட்டுமே! வாயுள்ள பிள்ளை எங்கிருந்தாலும் பிழைத்துக்கொள்ளும்.

ஆனால் இரண்டு கதைகளை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். அவை தோன்றிய வழியில் அல்ல. அவை என்னை கிளர்ந்த வழியில்.

உத்தராயணம் என்றாலே எனக்கு முன்னால் நினைவுக்கு வருவது பீஷ்மன்தான். பீஷ்மனின் தனிமை. தனித்தன்மை வாய்ந்தது. பிறக்கையிலேயே ஆதர்ஸ புருஷன். தன் பிரம்மசரிய சபதத்தினால், மனிதப் பிறவியிலேயே கடவுள் தன்மையை எய்து விட்டான்.

சாதாரணமாகவே. லோகாதயமான செல்வங் களிலேயே, அல்லது ஆத்மகதியில் சற்று முன்னேற்றம் கண்டுவிட்டால் முதலில் உணருவது தன் தனிமை தான். அந்த நிலையில், பிறறின் தன்மைக்குத் தக்க,

தான் குனிய முடிவதில்லை. பிறரின் பக்குவ நிலை யும் விதிப் பயனும் வெவ்வேறுபடுவதால் அவர்களா லும் புரிந்துகொள்ள முடிவதில்லை. கடவுள் தன்மை யென்பதே இதுதானோ?

தன் சோதனைகளுக்கு மேலோங்கி, ஆலமரத் தின் தன்னந் தனியன் யமனே அணுக அஞ்சும், தேவரும் வணங்கும் தவத்தினன். ஆனால் பிதாக மரின் அந்திம காலம் அவல காலம். சொன்ன பேச் சைக் கேளாத பேரன்மார்கள். நியாயம் இருக்குமிடம் தெரிந்தும், தான் எடுத்துச் சொன்னால் செல்லாது என்கிற தலைகுனிவில், அடைத்துப்போன வாய். கடைசிப் போரில், கிழட்டுச் சிங்கத்தின் வீரத்துக்கு, பாண்டவர் உள்பட யாருமே எதிர்நிற்க முடியவில்லை. ஆனால் அத்தனை சௌரியமும் என்ன வாயிற்று? ஒரு பேடியின் கணையால் சரப்படுக்கையில் வீழ்ந்ததுதான் கண்ட மிச்சம். இதற்கு விளக்கங்கள், புதைந்த பொருள்கள், ஆயிரம் உண்மைகள்—அத்தனையும் வேறு தடம். ஆனால் நாம் மனிதர், நம் திகைப்பு; பீஷ்மனின் கதியே இப்படியென்றால் நாம் எந்த மூலை? இந்தத் திகைப்பு ஒய்ந்தபாடில்லை. ஏனெ னில் பாரத யுத்தம் ஓயவில்லை. நாம் இன்னும் குரு க்ஷேத்திரத்தில்தான் இருக்கிறோம். காங்கேயர்கள் வீழ்ந்தவர்கள் வீழ்ந்தபடி; சரப்படுக்கை அன்று விரித் தது இன்னும் விரித்தபடி, வாழ்க்கையின் லக்ஷியம், நடப்பு, முடிவு எல்லாமே சரப்படுக்கையில்தானோ? இந்தக் கேள்வி திரும்பத் திரும்பத் தன் கடையலில் இதுவே ஒரு நியாயமாக ஸ்தாபனமாகிறார்போல் தோன்றுகிறது.

அகிலா, உண்மை நிகழ்ச்சியின் அடிப்படையில் நெய்த கதை. என் நெசவுகூட சொல்லும்படியாக இல்லை. யதார்த்தத்தின் விபரீதம், கொடுமை, மண்

மையினின்று அதன் காவிய சோகத்தைப் பிரிப்பதற்கு, என் கலையின் உரிமையில் சமபவங்களின் முன்பின் னைச் சற்று மாற்றியிருக்கிறேன். மற்றபடி பெயர்கள் உள்பட அப்பட்டம் காப்பாற்றப்பட்டிருக்கிறது.

எழுத்தைச் சாதகம் செய்துகொண்டிருப்பதில், எனக்குக் கிடைத்த பெரும் பேறு, மனித மாண்பை அதன் தருணங்களில் அவ்வப்போது தரிசனம் காண் பதுதான். இது விஷயத்தில் நான் கொடுத்து வைத்தவன்.

புண்ய காலம் என்று ஒன்று தனியாக உண்டா என்ன? இவைகளைப்பற்றி எனக்குச் சொல்லக் கிடைக்கிறதே, சொல்வதில் ஒரு ஸ்னான துல்லியம் ஏற்படுகிறதே, இதுதான்.

புண்ணிய காலங்கள் நேர்ந்துகொண்டே இருக்க வேணும்.

லா. ச. ராமாமிருதம்

# உள்ளடக்கம்

# உத்தராயணம்

அஜந்தா கொண்டைக்கு எல்லாருக்கும் கூந்தல் கொடுப்பனை இருக்காது.

நெற்றியிலிருந்து பின்னுக்கு இழுத்து, அழுந்த வாரி, இறுகப் பிணைத்து எழுப்பிய கொண்டையின் கோபுரம் நெஞ்சை முட்டுகிறது. ஸ்தூபிபோல் உச்சியில் ஒரு குமிழ் வேறே; சிப்பைத் தப்பிவிட்ட பிடரிச் சுருள்கள் நினைவில் குறுகுறுக்கின்றன.

பிறப்போடு வந்துவிட்டாற்போல் உடலோடு ஒட்டி வெள்ளை ரோஜா நிறத்தில் கடல் நுரையில் நெய்தாய ஆடையினூடே மார்க்கச்சு விண்ணென்று தெறித்துத் தெரிகின்றது. ரவிக்கை பூணாது. திரண்ட பனித்தோள் குமிழ்கள், கழுத்தின் விலாசம், யார் இவள் முகம் பார்க்கு முன்—?

"வயதானவர் மொட்டை மாடியில் படுக்கக்கூடாதுன்னு எத்தனையோ தடவை சொல்லியாச்சு. கேக்கமாட்டேன் கறேள் அப்பா—!"

தோளைக் குலுக்கும் கையைத் தூக்கக் கலக்கத்தில் திமிரப் பார்க்கிறேன். தூக்கம் கலையவில்லை, கனவு கலைந்துவிட்டது.

"எழுந்திருங்கோ அப்பான்னா!"

முடியை அள்ளிச் செருகிக்கொண்டு சாந்தா முகத்தில் தான் இன்று முதல் முழி. வெட்டுக்கிளிபோல் லேசாக ஆகாயத்தைப் பார்த்து அஞ்சலி செய்யும் நாசி நுனியில், குந்துமணி, மண்ணைப் பிசைந்தவன் கிள்ளியெறிந்துவிட்ட தால் மூக்கு சற்று மொண்ணை. முகத்தில் வெண்ணெய் பளபளக்கிறது. அவளும் பாவம் மாற்றி மாற்றிச் சந்தனத்தை அரைத்துப் போடுகிறாள். மனமில்லாமல் மஞ்சளைப் பூசிக் கொள்கிறாள். விக்கோ-டர்மரிக் கிளியர்ஸில் அப்பப்போ வர்த்தக ஒலிபரப்பில் என்னென்ன விளம்பரம் கேட் கிறாளோ அத்தனையும் வாங்கியாகிறது. இன்று அமுங்கி னாற்போல் இருந்தது. நாளைக் காலை எழுந்து கண்ணாடி யில் பார்த்தால் கிளைத்திருக்கிறது; உடனே உற்சாகம், அடுத்து உடனே அயர்வு. கொஞ்ச நாட்களாய் அவள் காலம் இப்படித்தான் தள்ளுகிறது: ஆயினும் பரந்த முகத் தில் பேரழகு ஒன்று உண்டு.

விடிவேளையின் அயர்த்தலில் கண்டது தோற்றம்!

இதன் தெளிந்த நிழல்தானோ?

கையை ஆட்டிவிட்டு சாந்தா இறங்கிப் போயாச்சு.

கீழ்வானத்தில் பெரிய யாகம் நடந்துகொண்டிருக்கிறது. மேகப் பாறைகள் நெகிழ்ந்து உடைந்து கரைந்து ஆஹுதி யில் கவிழ்கின்றன. தழல் ஆட்டம், வான் பூரா பரவுகிறது. சூடு உரைக்கவே நானும் எழுந்து இறங்குகிறேன்.

ஏணியிலிருந்து கால் தரையிறங்கினதுமே 'சுருக்' பல் லுக்கிடையில் தோன்றிய சாபத்தைக் கடித்து விழுங்கு கிறேன். சேகரின் உபயம். பொழுது போகவில்லை. சொல்லச் சொல்ல வேளையோடும், வேளையில்லாமலும் முள் வேலிக்கு முடி வெட்டி (அவன் முடி சொல்லச் சொல்லத் தோளில் புரள்கிறது) மீசை ஒதுக்கி, வெட்டி வீழ்த்திய முள்ளை வென்னீரடுப்புக்காக, ஏணியடியில் சுவரோரம் சேர்த்து வைத்திருக்கிறான். வெய்யிலில் காய்வதற்காகத்

தட்டிக் கொட்டிப் பரப்பி வைத்திருக்கிறான். வென்னீரடுப் புக்கும் அதை எரிக்கப் போவதில்லை. எனக்குத் தெரியும். முள்ளைக் கையில் குத்திக்கொள்ளாமல் எரிக்கத் தனிப் பொறுமை சிரத்தை, Knack வேண்டும்.

கிணற்றடியில் வாழை இலைகள் காற்றில் நர்த்தனமாடி வரவேற்கின்றன. சத்தியமா (விட்டேன்) அவை என்னை அடையாளம் கண்டுகொண்டுதான் அப்படிச் செய்கின்றன, மாலையில் ஒன்றிரண்டு வாளிகள் நான் இழுத்துக் கொட்டு வதைக் கொண்டு. இலை ஒவ்வொன்றும் ஆள் படுக்கலாம். அல்ல பாவாடை கட்டிக்கலாம். என்ன ஜாதியோ தெரிய வில்லை. தாருக்கு இன்னும் எத்தனை நாள் போகணுமோ?

எங்களை இலையைத் தொடக்கூடாதுன்னு பழியா நிக்கறேள். மத்யானம் பாருங்கோ பாளம் பாளமாக் காத்து கிழிச்சுடறதே, என்ன சொல்றேள்?

காற்றுக்கு அலங்கோலமாக அதற்கு இஷ்டம். அதற்காக உன் கத்திக்கிரையாகக் காத்திருக்குமா?

—நான் சொல்லவில்லை, வாய் திறந்து சொல்லிவிட் டால் பந்து என் மேலேயே திரும்பி வந்து மோதும்.

''பிராம்மணனுக்கு வயசுக்கேத்த பேச்சா இருக்கா பாரு!''

கண்ட கனவுக்கேற்ற வயது கடந்து எத்தனையோ வயதாகிவிட்டபோதிலும் வயதுக்கேற்ற கனவு என்று காண வருமோ?

நடுப்பிள்ளையும் அடுத்தவனும் பல் தேய்த்துக்கொண் டிருக்கிறான்கள்.

''இந்த வீட்டில் ஒரு பேஸ்டா, மண்ணா, ஒண்ணு உண்டா? எப்பவும் மாசக் கடைசிதானா?''

''ஏன், மண் இருக்கே!''

இவனுக்கு அவன், அவனுக்கு இவன், சமயத்துக்கேற்ப ஒருவனுக்கு ஒருவன் உடுக்கடி; இவர்கள் பாஷையில் Boss.'

Tommy வாலையாட்டிக் காலை வந்தனம் தெரிவித்துக் கொள்கிறது. எங்கிருந்தோ, என்றோ வந்தது. எங்கோ போகிறது வருகிறது. திடீரென்று நினைத்துக்கொண்டு கனகாரியமாக ஓடுகிறது. எங்கு போனாலும், வந்தாலும் இரவு இங்குதான். எல்லாம் பகல் பத்துமணிக்கும், இரவு பத்துமணிவாக்கிலும், கிணற்றடியில் வைக்கும் ஒரு கவளம் சோறு பண்ணும் வேலை. ''தொதோ'' கூடக் கொட்ட வேண்டாம். எங்கிருந்தாலும் பறந்தோடி வந்துவிடுகிறது. சொறி பிடிக்கறது, சொறி உதிர்கிறது. ஆனால் கண்களில் மட்டும் உள்ளொளியின் அழகு மங்கவில்லை. வாலை யாட்டிக்கொண்டு நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு, 'நான் இருக்கிறேன் உனக்கேன் கவலை? என்று கண்கள் பேசுகின்றன.

''சனியனே எட்டிப்போ! காலைச் சுத்திண்டு!''

உதையை வாங்கிக்கொண்டு, குரைக்கக்கூட இல்லை. தென்னை மரத்தடியில், தான் ஏற்கெனவே பறித்து வைத் திருக்கும் பள்ளத்துக்குப் போய்ப் படுத்துக்கொள்கிறது.

''டேய், ரொம்பப் பொறுமையா இருக்குடா!''

''Yes, Yes. முன் ஜன்மத்தில் ஸ்வாமிஜியா இருந்திருக்கு மோடா?''

ஈதெல்லாம் நாயைக் குறிப்பிடுவன அல்ல. என் காது கேட்க என்னைக் கேலி பண்ணுகிறார்களாம். தனிப்பட்ட முறையில் அப்பாவை அல்ல. தலைமுறையைத் தலைமுறை யின் பழிப்பு. எங்களை அவர்கள் பங்கப்படுத்துகிறார்கள்.

நடுப்பிள்ளை என்னைக் கேட்கிறான்: 'என்ன அப்பா வாரம் ஒருநாள் மௌன விரதம் என்று வாயை அடைச் சுட்டு. கண்ணால் பேசிக்கொண்டிருக்கிறாய். பேசுகிறாயா சுட்டெரிக்கிறாய். ஒரு கதவை மூடிவிட்டு இன்னொரு

கதவைத் திறந்துவிடுகிறாய். அவ்வளவுதானே! இப்படிக் கண்ணால் கரிப்பதற்குப் பதிலாக வாயைத் திறந்து எங்களைத் திட்டிவிடலாம். ஆமாம் நாங்கள் கொம்மாளம் தான் அடிப்போம். ரேடியோ சிலோன்தான் கேட்போம். முழு வால்யூமில்தான் முடுக்கிவிடுவோம். சினிமாப் பேச்சுத் தான் பேசுவோம். நீ பொறுத்துண்டு தானிருக்கணும். இல்லாட்டி இதென்ன மௌனம்? உனக்கு 'ததரினன் னா'ன்னா எங்களுக்கு லலலலா.'' நாங்கள் நீயா? வேலையும் கிடைக்க மாட்டேன்கிறது. எங்களுக்குப் பொழுது போக்குக்கு என்னதான் வழி? வீட்டுக்கு வீடு போய்ப் பாருங்கள். சத்தம் உங்களுக்கு B.P. எங்கள் பீதிக்கு அதுதான் மறதி, வழித்துணை. கடன் வாங்கியோ, திருடியோ கலகலப்பாய் இன்னிக்கு இன்றையோடு போச்சா? நாளையை நாங்கள் எங்கே கண்டோம்? உங்களுக்கு நாளை இருந்தது.'

நான் பதில் பேசவில்லை. பேசுவதில்லை, பேச்சு நியாயம் எப்பவோ தாண்டியாச்சு.

கண்ணன் அந்த நாளிலேயே செல்லம், கொடுத்த சலுகை களுடன் தானாக எடுத்துக்கொண்ட உரிமைகளும் இப்போ சேர்ந்துவிட்டன. அவன் தம்பி மௌனமாய் எனக்கு விழும் சாட்டையடியைப் பார்த்துக்கொண்டு நிற்கிறான் Boss இன் Hatchet Man

நான் இன்னும் வெறுக்கவில்லை. ஆனால் இவர்கள் உலகத்தை வெறுத்தாச்சு.

நட்ட பயிர் அம்புகளாய்க் காய்க்கிறது. சரப்படுக்கையில் படுத்து, உன் உத்தராயணத்துக்குக் காத்திரு.

''கிருஷ்ணா!'' அது எங்கே கிருஷ்ணா என்று கத்து கிறது? அருவருப்பான, அபஸ்வர அழுகையின் தேம்பல் போன்ற ஒரு சத்தம். ஆனால், அதைக்கேட்டதும் ஹரிணி பாதி பேசும் படத்தை, மார்பில் கவிழ்த்துக்கொண்டு படுத்த

வண்ணமே கன்னத்தில் போட்டுக்கொள்கிறாள். உண்மையி லேயே பக்தி சுபாவம் உள்ளவள்தான். அதுவும் இது போன்று நோகாமல் புண்ணியம் சம்பாதிப்பதில் பலே கெட்டிக்காரி.

காலைக்கும் மதியத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்!

இங்கேயே தெளித்தாற்போல் எட்ட எட்டத்தான் வீடு கள். மனைகளை வாங்கிப் போட்டவர்களுக்கு வீடு கட்ட இன்னும் வசதி கிட்டவில்லை, உச்சிவெய்யிலில் பூமி பாளம் பாளமாக வெடித்திருக்கிறது. தூரதூரக் கட்டடங்கள் கானலில் நடுங்குகின்றன. இதுவரை இரண்டு தடவை கிணற்றிலிருந்து மொண்டு மேலே கொட்டிக்கொண்டாச்சு. காய்ஞ்சாச்சு, ஆனால் உடல் வாணலியாய்ப் பொரிகிறது. இனிமேல் ஈரம் பட்டால் இந்த வயதுக்கு மார்பில் கொலுசு தான். ஒரு தினுசான மயக்கமா? மதிய உறக்கமா?

அந்தந்த நாளுக்கு அதன் போக்கை நடாத்த தேவதை உண்டோ? உண்டெனில் அவள்தான் இன்று காலை எனக்குத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டனளோ?

சூரியனிடமிருந்து லகானை வாங்கிக்கொண்டா? பிடுங் கிக்கொண்டா? ரதத்தை அவள்தான் நடத்துகிறாளோ? இவன் பொக்கை வாயை இளித்துக்கொண்டு பக்கத்தில் உட்கார்ந்திருப்பான். ஒருவேளை, இந்த வேளைக்கு ட்யூட்டி மாறி, தேவதையே வேறோ? நமக்குத்தான் காலடி யில் இடறும் கூழாங் கல்லெல்லாம் சாமியாச்சே! அதனால் தான் வெய்யில் இப்படிக் காய்கிறதோ? இல்லை. நான் தப்பாய் நினைக்கிறேன். காயத்தானே வெய்யிலே.

வாழையடியில் ஒரே அமளி. எட்டிப் பார்க்கிறேன்.

இரு கழுத்துகளும் ஒரு கழுத்தாய்ப் பின்னிக்கொண்டு ஈருடல் இரு தலையில் ஒரு புதுப்பட்சியை உருவாக்கிக் கொண்டு இரு வான்கோழிகள் சண்டையில் உருள்கின்றன. கழுத்துகளை லேசில் விடுவித்துக்கொள்ள முடியவில்லை

போலும்! அந்த உருவிலேயே புரண்டு புரண்டு முள்வேலியில் ஒரு சந்தின் வழி வெளியேறி. அப்பாடா! எப்படியோ ஒன்றி னின்று ஒன்று விடுபட்டு உருவம் பிளந்து, தொப்பைப் பாட்டிகள்போல் லொங்கு லொங்கென்று ஓடுகின்றன.

பின்னால் ஒரு குடிசையில் ஒரு ஸாஹிபா வளர்க்கிறாள். ஆனால் அவற்றிற்கு வேட்டைக்காடு இங்கேதான். மல்லிச் செடியை மிதித்துக்கொண்டு, கொத்தமல்லி விதையைக் கொத்திக்கொண்டு, கறிவேப்பிலைக் கன்றை வேரோடு சாய்த்து—ஹரிணி வாய்விட்டு அழுதேவிட்டாள்—கண்ட சேற்றை மிதித்துக்கொண்டு ஏமாந்தால் சமையலறைவரை நீளும் கால்கள்.

Tommy தென்னங்கன்றடியில் அதுவே பறித்துக்கொண்ட குழியில் படுத்திருக்கிறது. வெய்யில் தாங்காது வயிறு, கொல்லன் துருத்திபோல் குபுக் குபுக். என்றைக்கு ஒருநாள் மண்டை கலங்கி வெடுக்கென்று பிடுங்கப்போகிறதோ? இப் போது அதற்குக் கோழிகளைத் துரத்தக்கூடத் தெம்பு இல்லை. எனக்குத் தெரிந்தவரை இது குரைக்கிற நாயு மல்ல, கடிக்கிற நாயுமில்லை. நாய்களில் ஊமை உண்டோ? அப்போ இதன் பிறவிப் பயன்தான் என்ன? ஒரு காரியமு மில்லாமல் கனகாரியமாக குடுகுடுவென்று ஓடுவதும்...ஓடு வதும்...ஓடுவதும்... அவ்வளவுதானா?

அலமாரியிலிருந்து கைக்குத் தட்டுப்பட்ட புத்தகத்தை இழுத்துப் புரட்டுகிறேன் மத்வாசாரியரின் "சங்கர திக் விஜயம்." வயதுக்கேற்ற புத்தகம்தான். ஆனால் இந்த வேளைக்கு மண்டையில் ஏறுமா? ஏதாவது ஜேம்ஸ் பாண்ட் வரும் என்று நினைத்தது போக தோல்வி காணாத பாண்ட் அடி, வெட்டு. குத்து சுடு, 007 சட்ட பயமில்லாமல் யாரை வேணுமானாலும் கொல்லலாம், சூப்பர்மேன் பாண்ட்.

மண்டை இடிக்கிறது. பெருமாள் எப்பவோ வந்து தயாராக வைத்திருந்த ஏனத்தில் பாலை ஊற்றிவிட்டுப் போய்விட்டான். ஹரிணி தயவு பண்ணனும். ஆனால் அவள் அயர்ந்து தூங்குகிறாள்!

பிற்பகல் வாடைக்காற்று கிளம்பிவிட்டது. வாசலுக்கு வெளியே புல் தரையில் சாய்வு நாற்காலியைக் கொணர்ந்து போட்டுக்கொள்கிறேன். வானத்துக்கும் வெய்யிலுக்கும் காற்றின் மத்யஸ்தம் நடந்துகொண்டிருக்கிறது. வெறிச்சிட்டுக் கிடந்த வான வீதியில் போக்குவரத்து தொடங்கி விட்டது. மேகங்களின் பவனி. பட்சி ஜாலங்களின் விதவித மான வரிசைக் கட்டுக்கள். ஆட்டத்தில் கையிலிருந்து துள்ளிக் கம்பளத்தில் விழும் சீட்டில் காண்பதுபோல பட்சிக் கூட்டங்கள் மேகத்தின் பின்னணியில் விதவிதமான பொட்டு கள் வைக்கின்றன. மேற்கு, மணக்கோலம் பூணுகிறது. பெண்ணுக்கு எந்தப் புடவையும் பிடிக்கவில்லை. அவிழ்த்துப் போட்ட புடவைகள், விதவிதமாய் போர் போராய்க் குவி கின்றன. ஜரிகைகள், கலர்கள், மோஸ்தர்கள் மினிர் கின்றன.

வானத்தின் கவானில் லேசாய் ஒரு தேமல் படர்ந்திருக் கிறது.

கிணற்றடியிலிருந்து, வாய் குழறியபடி எங்கேயோ சுட்டிக் காட்டிக்கொண்டு ஹரிணி ஓடி வருகிறாள். பதறிப் போய்ப் பார்க்கிறேன். தோய்க்கிற கல்லின்கீழ் விட்டிருக்கும் சந்தில் பாம்பு சட்டை.

ஹரிணி குதிக்கிறாள், துள்ளுகிறாள், துடிக்கிறாள், முற்றுப்புள்ளியில்லாமல் கத்துகிறாள். "அத்வானம் பிடிச்ச இந்த இடத்தில் வீட்டை வாங்கிப் போட்டுட்டு, ஒரு நாளைப் பார்த்தாப்போல் நான் வயத்தில் நெருப்பைக் கட்டிண்டு... ஐயையோ என்னால் இனிமேல் முடியாது. உங்கள் வீட்டை நீங்கள் காவல் காத்துண்டு கிடங்கோ. எங்களை எங்காணும் மயிலாப்பூரில் குடி வெச்சுடுங்கோ"— மூச்சு விடாமல் வார்த்தைகளின் கோவைகூட சரியாகப் புரியாமல் இன்னும் ஏதேதோ குளறுபடி.

"ஆமாம் அதென்ன மயிலாப்பூர் கணக்கு? மாம்பலம், சைதாப்பேட்டை, வடபழனி, சாலிக்ராமம், நங்க நல்லூர், வேளச்சேரி—பேர்களுக்கா குறைச்சல்? இடம்தான் ஊசி முனைக்குக்கூட வழியில்லை.

"நான்தான் லப லப லபன்னு அடிச்சுக்கிறேன். ஆனால் அழுத்தமா உங்களுக்கு எல்லாத்துக்கும் ஒரு பதில்தானே! மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்—"

தைரியத்துக்கு அவள் முதுகில் ஒரு 'ஷொட்டு' கொடுக்கிறேன். அவளுக்கு முகக்கடுப்பு இதற்குமேல் சாத்தியமா? என் கையை உதறுகிறாள்.

"காடு வாவா என்கிறது. என்ன வேண்டிக் கிடக்கு?" ஹரிணிக்கு என்றைக்குமே ஒரு வழிப்பாதைதான் வீட்டுக்கு வந்த புதிதில், அந்த முகக்கடுப்பே அவளுக்கு ஒரு களை கொடுத்தது. அவள் வீட்டில் ஆறு அண்ணன் தம்பிகளுக்கிடையில் அவள் ஒரே பெண், உடன்பிறந்தான்கள் எல்லாம் நல்ல நிலையில் இருக்கிறார்கள். அந்தச் செல்லம் அவளுக்கு இன்னமும் செல்கிறது. அந்தக் கோபத்தின் அழகே என் நெஞ்சை எத்தனை முறை அள்ளியிருக்கிறது! ஆனால் இப்பவோ—

தோளை வியர்த்தத்தில் தூக்குவதைத் தவிர என்னிடம் வேறு பதில் இல்லை. வெய்யிலடித்தால், மழை பெய்தால். பாம்பு சட்டையுரித்தால், அசல் வீட்டுக்கோழி இங்கு மேய்ந்தால், Tommy—க்கு என்றேனும் பைத்தியம் பிடித்தால் சைக்கிளைப் போட்டுக்கொண்டு கறிவேப்பிலைக் கொத்துக்குக் காய்கறிக் கடைக்குப் போனால் அங்கு கடைக்காரன் கைவிரித்தால், வழியில் சைக்கிள் பங்க்ச்சர் ஆனால், வேலைக்காரி ஒரு வேளைக்கு வராவிட்டால், சினிமாவுக்குக் கிளம்பிப் போய்ச் சேருவதற்குமுன் படம் ஆரம்பித்து விட்டால், தையல் மெஷின் ரிப்பேர் ஆனால், திடீரென்று மின்சாரம் தோற்றுவிட்டால், எல்லாமே என் குற்றம்தான்.

"'அத்வானம் பிடித்த'—பல்லவிக்கு ஈதெல்லாம், இன்னும் சொல்ல விட்டுப்போனதெல்லாமே சரணங்கள்தாம்.

''மொட்டை மாடியில் காத்து வாங்கலாம்னா படி கிடையாது. என்ன வீடு கட்டி வாழறோமோ?''

மாடிப்படி கட்டுவதற்குள், பணம் போண்டி. அப்படியும் விடவில்லை. ஏணி வைத்து ஏறுகிறோம்.

''பிராமணன் bar விளையாடற வயசைப் பார்!'' ஹரிணிக்கு ஏணியில் ஏறமுடியாத எரிச்சல். என்றுமே அவளுக்கு எல்லாரைக் காட்டிலும் உசிர் வெல்லம். உடம்பு வேறே தடித்துவிட்டது.

ஆனால் அவள் பயங்களை மறுப்பதற்கில்லை. இங்கு இயற்கை, தன் ஆட்சியை பட்டண வாசத்தின் தடங்க லின்றிச் செலுத்துகிறது. வீட்டைச் சுற்றி முள்வேலி. பூமியில் வளைகள். எதிலிருந்து எது வேண்டுமானாலும் இருக்கலாம். என்னைக் கேட்டால்? பூமியென்றிருந்தால், வளைகள், குழிகள், வெடிப்புகள். ஏன் இங்கிருந்து மயிலாப்பூரில் அப்பர்சாமி கோவில் தெரு. பழைய நெ. 20, அடுக்குள் தொட்டி முற்றத்தில் ஜலதாரை வரை சுரங்கமே ஓட வழியுண்டு. நான் என்ன செய்ய?

பாட்டி. ஆசையாகப் பேரக் குழந்தைகளுக்கு, வடாம், வற்றல் வறுத்து பொட்டலங் கட்டி அங்கு போட்டால், அந்தப் பக்கம் மேடாயிருந்தால், அந்த மேடு ஒரே சீராய் இந்தப் பக்கம் தாழ இறங்கினால்—எந்த மூஞ்சூரைக் கேட்பேன்? உஷ், வேண்டாம். தமாஷுக்கு அங்கும் லாயக் கில்லை. இங்கும் லாயக்கில்லை! சிரிக்கத் தெரிந்திருப்பது எவ்வளவு பெரிய பாக்கியம்?

சென்ற மூன்று வருடங்களாக சென்னைக்கும் லண்டன் வெதர் வந்துவிட்டது, 'திடீர்' கோபம் திடீர் அழுகை, திடீர் மூக்கைச் சிந்திப் போடு, உடனே சிரி எல்லாம் நம் மாதிரிதான்.

நெற்றி கொப்பளிக்கிறது. இந்த திடீர் மூட்டம் எப்படி வந்தது? புழுக்கம் எனக்கு மூச்சுத் திணருகிறது. காற்றின் ஓட்டத்தை ஆகாயப் போலீஸ்காரன் 'ஹோல் ஆன்' பண்ணி விட்டு என்ன கேஸ் எழுதுகிறான்?

தரையிலிருந்த குப்பை எல்லாம் வாரி, முகத்தில் தூவிக் கொண்டு ஒரு பெருமூச்சுக் கிளம்பி, சுழல் காற்றாக மாறு கிறது. ரஸகுண்டுபோல் நீர் கோர்த்துக் கொண்ட மேகங்கள் ஒன்றுடன் ஒன்று இடித்துச் சீர்குலைகின்றன. ஒன்றிரண்டு பாஷ்பங்கள்கூட மேலே உதிர்கின்றன. வானம் ஒரேயடி யாய் இருள்கின்றது. இதோ ஆகாச கங்கை அவிழப் போகிறாள். ஈஸிச்சேரை மடக்கிட வேண்டியதுதானா?

இல்லை. ஆர்ப்பாட்டத்துடன் சரி, எண்ணெய் கடைச் செட்டியார் சத்தம் போடாத சிரிப்பில் முகம், தோள், தொந்தியெல்லாம் பிசைந்த மாவாய்க் குலுங்குவதுபோல், தனக்கே உரிய ரகசிய சிரிப்பில் மூட்டம் கலைந்துவிட்டது. வானத்தில் இங்குமங்குமாய்ப் பிசுபிசு பஞ்சு மிட்டாய்ப் படர்ச்சிகள். புலு புலு ரோஜா மொக்குகள். கசங்கிய மாலியங்கள் சிதறிக் கிடக்கின்றன. இருளை இதமாய், நல்ல வார்த்தை சொல்லி ஒதுக்கிவிட்டு மலர்ந்த மினுமினு வெளிச்சம், இடத்துக்கே தண்ணொளியை வர்ணமாய்த் தீட்டுகிறது. ஏதோ ஒரு apstract ஓவியம் உருவாகிக்கொண் டிருக்கிறது.

பகல் கனிந்து பழம்போல் நழுவி இருளின் திறந்த வாய்க்குள் விழப்போகும் ஒரு தினுசான அச்சம் தரும் இசை கேடான முகூர்த்தம். கயிறுமேல், கழைக்கூத்தாடியின் கர்ணத் தருணம் எனக்குச் சொல்லத் தெரியவில்லை. சமயங்கள் ஒருங்குகின்றன. சாமக்ரியைகள் சேர்கின்றன. காத்திருந்த ஓரையும் வருகின்றது, நேர்கிறது, கடக்கிறது. கழிகிறது. இருளும் ஒளியும் கலந்த வேளை, ஆனால், இதோ இரவு தோன்றிவிட்டேன் எனும் அந்தக் கலவை நேர்ந்த அந்த அசல் சமயம், அந்த ரஸவாதம்; நம் இத்தனை காவலையும் நழுவிவிடும் ஜாலம் என்ன?

ஆனால், இதெல்லாம் என்ன அசட்டு யோசனை? யாருக்கு என்ன பயன் எனச் செவிட்டில் அறைந்து விளக்கு வதுபோல் புறப்பாடுகள் ஆரம்பமாகிவிட்டன.

கண்ணன் Bond box உடன் நிற்கிறான். எப்போ கையில் பெட்டியைத் தூக்கிவிட்டானோ இரவு வீடு திரும்பப் போவதில்லை என்று அர்த்தம். பாட்டி வீடோ, மாம்பலத்தில் ரவியோ—மூன்றாம் காட்சி பார்த்துவிட்டு மிச்சம் போதுக்குத் தலைக்கு அணை பெட்டியை வைத்துக்கொண்டு ப்ளாட்பாரத்தில் தூங்கினால்—எனக்கென்ன? அவர்களும் அதைத்தான் விரும்புகிறார்கள். தங்களுடைய சந்தோஷம் தங்களுக்குச் செலுத்திக்கொள்ளும் முதல் கடமை, மிச்சமெல்லாம் துச்சம் எனப் பாவிக்கும் அவர்கள் தத்துவத்தில் "எங்கே போகிறாய்? எப்போ வருவாய்?" எனும் கேள்வியே அவர்களுடைய அல்வாத் துண்டில் அவர்களுக்கு மயிர் சிக்கினாற்போல் எனக்கும் வயிற்றைக் குமட்டுகிறது.

கண்ணன் என் எதிரே நின்றுகொண்டிருக்கையிலேயே, சேகர் அவனைத் தாண்டி அவசரமாகப் போகிறான். Boss அவனுக்கும் சேர்த்துச் சொல்லிவிட்டதாக அவனுடைய அர்த்தம். ஆகையால் அவன் தனியாகச் செலவு பெற்றுக் கொள்ளத் தேவையில்லை.

இப்போ எனக்கு நினைவு வருகிறது. எல்லாம் ஏற்கெனவே நினைப்பிலிருப்பவைதான். படங்கள் திடுக்கென்று எகிறுகின்றன.

இப்போதான் மூன்று வருடங்களுக்கு முன் என் தாய் காலமானாள்.

நான் வழக்கமாய் வீடு திரும்பும் வேளைக்குச் சற்று நேரம் தப்பி வந்தாலும் வாசற்படியில் வந்து உட்கார்ந்து விடுவாள்.

"என்னம்மா இங்கே உட்கார்ந்திருக்கே?"

"ஒன்றுமில்லே. உள்ளே ஒரே புழுக்கமாயிருந்தது. ஏதோ காத்து சில்லுனு வரதேன்னு..."

நானும் பக்கத்தில் அமர்கிறேன். பாஷையே பரிபாஷை. உண்மைக் காரணம் எங்களுக்குத் தெரியும். ஆனால் வெளிப் படுத்திக் கொள்ளமாட்டோம். உள்ளேயிருந்து குரல்கள் வேணுமென்றே எங்களுக்குக் கேட்கும்படிக் கிசுகிசுக் கின்றன.

''அம்மாவும் பிள்ளையும் பேசிக்கறா பார்த்தையா?''

நாங்கள் எங்கே பேசிக்கிறோம்? எங்களைப் பிணைக்கும் மௌனச் சரடே எங்கள் பேச்சென்றால் நாங்கள் நிறையப் பேசுகிறோம்.

'அம்மாவும் பிள்ளையும்' என்கிறார்கள். ஆனால் அவர்கள் பொருள்படுத்துவது வேறு, பல்லைக் கடித்துக் கொண்டு 'கிழங்கள்! அசடுகள்!''

அட இங்கே இன்னொரு செட் கிளம்புகிறதே!

சாந்தா, தோள்பட்டையில் மேலாக்கு மடிகளைச் சீண் டியவண்ணம், ''அப்பா, கட்டை தொட்டி நாடார் டி.வி. செட் புதுசா வாங்கியிருக்கார். எங்களை வரச்சொன்னார். போயிட்டு வரோம்.''

என் புருவங்கள் என்னையுமறியாமல் கேள்வியில் உயர்ந் திருக்க வேண்டும். ஏனெனில், காட்சி முடிந்து திரும்பப் பத்து, பத்தரை ஆகிவிடுமே! தனி வழி, பெண்டுகள், இரவு வேளை...

''அதெல்லாம் ஒண்ணுமில்லை.''—வெடுக்கென்கிறாள். இத்தனைக்கும் நான் வாய் திறக்கவில்லை. ஆனால் சாந்தா இந்த வருடம் $10+1$. ஏற்கெனவே நிறைய மார்க்கு வாங்கு வாள். ஆகையால் நான் வாய் திறக்குமளவுக்கு அவள் மக்கு இல்லை. என் வாயை அடைக்கவும் அவளுக்குத் தெரியும். பக்கபலம் வேறு இருக்கிறதே!

''முன் நிலாத்தான். நியூஸ் வரைக்கும் இருக்கமாட் டோம். மெயின் முடிஞ்சவுடனே திரும்பிடறோம். அப்பா, நீங்கள் டி.வி. வாங்கியிருந்தால், பிறத்தியார் வீட்டில் எங்களுக்கென்ன வேலை?''

ஹரிணி, கொண்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே ""மோருஞ் சாதம் கரைச்சு, பழையது மூலையில் வெச்சிருக்கேன். வீடு ஜாக்கிரதை!""

இப்போ வீட்டில் நான் மட்டும்தான். அரணை ஒன்று என் காலில் உராய்ந்து விழுந்தடித்துக்கொண்டு ஓடுகிறது ஒன்று திடீரெனப் புலனாகிறது. மனிதனைத் தவிர மற்றெந்தப் பிராணியும் எப்பவும் ஏதோ ஒரு ஜோலியில் ஈடுபட்டுத்தானிருக்கிறது. பொழுது போகவில்லையே எனும் நிலை அதற்கில்லை, காலப்ராமாணத்தில் மிகச் சிறிய அளவைக்கூட அதன் முழுமைக்கு வாழ்வதனால், அதற்குப் பொழுது போதவில்லை. மனிதன்தான், மோவா யைக் கைக்கிண்ணத்தில் ஏந்திக்கொண்டு, காலைக் கால் மேல் மடித்துப் போட்டுக்கொண்டு, அல்லது, ஒடுக்கிக் கொண்டு Rodin அப்படியே ஒரு சிலை வடித்து, அதையே காயமான நியாயமாகச் சாதித்துக்கொண்டு...

நான் இப்போது உணர்வது என் தனிமையையா! வெறுமையையா!

வானத்துத் தேமல் நிலவாகப் பூத்துவிட்டது. ஆனால் என் கண்ணில் சதையால், பார்வையின் சிதையில், எட்டாய் விண்டு தெரிகிறது. பூசனி பத்தைகள்.

முள்வேலியில் காட்டாமணிச் செடி, இடையிடையே பூவரசு, நுணா, ஒதிகை மரங்கள் நெருக்கமாக இலை பின்னிக்கொண்டு, நான் ஒரு குஞ்சுபோல், ராக்ஷஸக் கூட்டில் காத்திருக்கிறேன். எதற்கு?

கொஞ்சநேரம் மொட்டைமாடியில் காற்று வாங்கலாமா!

என் கனத்தடியில் ஏணி படிக்குப்படி முனகுகிறது.

மாடியில் உடம்பை நீட்டுகிறேன். ஆ! இஸ் திஸ் பியூட்டிபுல்!

தோள்மேல் சுதந்திரமாய்ப் போட்ட கைபோல், தண்ட வாளம் எட்ட தொடுவானை அணைத்து ஓடுகிறது.

திடீரென வானத்தில் பூக்கள் மண்டிக் கிடக்கின்றன. மொட்டுக்கள், மலர்கள், பிய்ந்த இதழ்கள், மூச்சுவிடும் விண் மீன்கள், சின்னதும் பெரிதுமாய்ச் சீனாக்கற்கண்டு கட்டிகள் வைரச்சிதறல்கள், உறைந்துபோன கண்ணீர்த் துளிகள்— இதய உதிரிகள் இவற்றிலிருந்து இழுத்த ஜிகினாச்சரடுகளில் ஏதேதோ நினைவுகள், தோற்றங்கள் சம்பந்தா சம்பந்த மில்லாமல் கோவிலில் விதவிதமான காய்கறிகளைக் கட்டித் தொங்கவிட்டு ஒரு உற்சவமாமே! அதுமாதிரி—

—என் பையல் பருவத்தில், நான் வளர்த்த ஒரு குச்சு நாயின் சடைமறைத்த முகம்;

—இளம் வயதில் மரித்த என் தம்பி;

—ரீதி கௌளையின் ஒரு சொகுஸு வளைவு;

—ஹரிணி கொடியாயிருந்த நாளில் அவள் கூந்தலி லிருந்து பிய்த்தெறிந்த தாழம்பூ மடல்;

—இரவு வேளை கடலோரம் அலைகள் மோதி மீள்கை யில் விட்டுச் செல்லும் நுரைத் துளிகள். பொரி யும் முத்துக் கொதிகள்;

—டெலிபோன் மணியோசை;

—தச்சன் இழைப்புளியிலிருந்து கூடம்பூரா சிதறும் மரச் சுருள்கள்;

—குப்பையில் மாணிக்கக் கற்கள்;

—கண்ணீரும் கம்பலையுமாக அம்மாவின் முகம்; (ஏன்?)

—கன்யாகுமரியின் மூக்குத்தி—

இன்னும் ஏதேதோ சொல்லுக்குள் அடங்கினவை, அடங்காதவை. திடீரென இதுவரை எப்படியும் தோன்றாத எண்ணம் ஒன்று அதன் பெருமிதத்தில் நானே உடல் விம்மு வதாகத் தோன்றுகிறது. இந்த மொட்டைமாடியின் அடைப்பில் அடங்கிய வானவரைக்குள் அடங்கிய இத்தனை சொத்துக்களும் என்னுடையதுதானே?

சரி, என்ன செய்யப்போகிறாய்! அத்தனை நட்சத்திரங் களையும் வாரிக் கூடையில் அள்ளிப் போட்டுக்கொண்டு, பீச்சில் சுண்டல் விற்கப்போகிறாயா! அல்லது நட்சத்திரப் பூக்கள் தொடுக்கப்போகிறாயா!

இந்த எண்ணத்தின் மிதப்பே அரை மயக்கம். கால் தூக்கம். கால் நினைவில் எல்லாம் ஒன்று குழம்பி விழித்துக் கொண்டிருந்தேனா! மயங்கிக்கிடந்தேனோ! தூங்கியே போய்விட்டேனோ?—திடீரென Brindavan Express இன் அறை கூவலில்தான் நினைவின் இயக்கம், தடுத்த நீர்வீழ்ச்சி போல் தடதடவென என்மேல் இறங்கிற்று.

புகைப்போக்கியின் வழி சமையலறையில் ஏதோ பண்டம் உருளும் சப்தம்.

ஒரு மஞ்சள் பூனையின் நடமாட்டம் இருக்கிறது என்று எனக்குத் தெரியும்.

ஏணிப்படியில் கால் வைத்ததும்—

ஏணிதான் தரையில் சரியாகப் பதிந்தில்லையோ,

ஏற்கெனவே நைந்து, கட்டு முறிந்ததோ,

இசைகேடாய், தூக்கக் கலக்கத்தில் நான்தான் ஒரு பக்க மாய்ச் சாய்ந்துவிட்டேனோ?—

ஏணி நிலை பிசகி, ஏணியோடு, சேகர் வெட்டிச் சுவரோரமாய்ப் பரப்பி வைத்திருக்கும் முள் படுக்கையில் சுமார் இருபது அடி உயரத்திலிருந்து—

முட்கள் வாழைப்பழத்தில் குத்துவதுபோல் முதுகில், பின் மண்டையில், சப்பையில் நுழைகையில் என்னை யறியாமல் வீறலில் வாய் திறந்தது. ஆனால் சத்தம் வர வில்லை. ஒருக்களிக்க முயன்றேன். முடியவில்லை. இடது பக்கம் மறுத்துவிட்டது. Oh my God! வாய் பொத்திய நிசப்தம். பயத்தில் இலைகூட அசையவில்லை. எனக்கு என்ன நேர்ந்துவிட்டது? No, No, No.

பல்லிவாயில் தும்பிபோல், வார்த்தைகள், அலறல்கள் தொண்டைக்குள் இறக்கையடித்துக்கொண்டன.

இனி என்ன?

சாந்தியும் ஹரிணியும் வரும்வரை இங்கேதானா?

வந்தாலும் அவர்கள் என்னை அவர்களிடையே தூக்கிக் கொண்டு போய் உள்ளே சேர்க்க முடியுமா?

முடியாவிட்டால், இரவு பூரா இங்கேயே இப்படித் தானா?

Tommy எங்கிருந்தோ ஓடிவந்து என் முகத்தை ஓரிரு தடவை முகர்ந்து பார்த்து பிறகு தலைமாட்டில் உட்கார்ந்து மூக்கை வானத்துக்கு நீட்டி ஒரு நீண்ட ஊளை—

இதுவேதான் என் உத்தராயணமா?

தூரத்தில் சிரிப்பு கேட்கிறது.

# விடைபெறநில்

குருக்கள் திடுதிப்பென ஆரம்பித்தார்: 'அதோ அந்த வீட்டைப் பார்த்தியா?'

பார்த்தேன். அவர் சுட்டிக் காண்பித்த பக்கம் ஒரே வயற்காடு. ஒட்டி ஏரிக்கரை. கரைமேட்டில் காவல் காக்கும் பனைகள். பனங்குலைகளுக்குக் காவல் யார்? வான விளிம்பில் சாயும் வெய்யிலில் அதற்குமப்பால், ஆற்று மணல் மின்னிற்று. ஒன்றிரண்டு பம்பு செட்டுகள் 'ஜக் ஜக் ஜக்' ஒட்டுக் கேட்டால் சத்தம் எட்டும். ஆனால் வீடு? ஏதும் காணோம்.

''அதாண்டா! அதோ அந்த மூணு மெத்தை வீடு! மெத்தை வீடு தெரியல்லே? என்னடா கண் அது? கண்ணுக்கு வேறே கண்! மெத்தை வீடு தெரியாமல் நேற்றுப் பையன் முளிக்கறியே!''

இருந்தாலல்லோ தெரியும்? ஆனால் நான் மறுத்துப் பேச வில்லை, தெரிந்ததைப்போல் தலையைப் பலமாக ஆட்டி னேன். 'நேற்றைப் பையனுக்கு' நடப்பது அறுபத்தி நாலு. ஆனால் நாலு வருடங்களாக குருக்களுக்கு அவர் வாயா லேயே தொண்ணூறு. அவரை மறுக்க எனக்குக் கட்டுபடி ஆகாது. கண்ணாடிக் குருக்கள் கதைச் சுரங்கம். ஒரு பக்கம் கயிறு கட்டி காதில் சுற்றிச் சரிந்த கண்ணாடியில் ஒரு ஃப்ரேம் ஒட்டை, எனக்குத் தெரிந்து பதினைந்து வருடங்களாக வீம்பாக இதே அலங்காரம்தான். ஒருமுறை கண்ணாடியை

மாற்றித் தர ஜாடையாக முன் வந்து வாங்கிக் கட்டிக் கொண்டேன். அப்புறம் அந்த வழிக்குப் போவதில்லை. ஆனால் இல்லாததைப் பார்ப்பவருக்குக் கண்ணாடி எதற்கு? ஆனால் கண்ணாடியை மாட்டிக்கொள்ளா விட்டால் திண்டாடுவார்.

''என்ன ஒப்புக்குத் தலையாட்டறே?'' அட போடா மண்டு! உடனே பதறிப்போய், ''ராமாமிருதம், ராமா மிருதம், என்னை மன்னிச்சுடு! பழைய நினைப்பில் ஏதோ உளறிட்டேன். மன்னிச்சிடப்பா, வயஸாச்சு. மனசு ஒரு நினைப்பில் இல்லே!''

''மாமா, நான் பழைய ராமாமிருதம்தான்!''

''அதெப்படி? நல்ல உத்தியோகம் பார்த்திருக்கே! எவ்வளவு படிச்சிருப்பே? உலகத்தை எத்தனை சுத்திப் பாத்திருப்பே! பழைய ஞாபகத்தை வெச்சிண்டு எங்களைப் பாக்க வரதே பெரிசு! கதை கிதை வேறே எழுதறியாம்! எங்களுக்கு எவ்வளவு பெருமை தெரியுமா? எனக்குக் கண் போச்சு. எனக்குப் பகல் ராத்திரி ரெண்டும் ராத்திரிதான். சங்கரன் படிச்சுக் காண்பிச்சால் உண்டு. உன்னைவிட அவன் நாலு வயது கூடுதல் இல்லே? நீ நளா அவன்—'' விரல்கணுக் களில் எண்ணி ஏதோ ஒரு பேர் சொன்னார். எனக்கு மறந்துபோச்சு.

''நீ அவன்கிட்ட சொல்லாதே!''

''என்னத்தை மாமா?''

''உன்னை ஏகவசனமா பேசினதை எனக்கு வார்த்தை பிரண்டு—போனதை.'' எழுந்து சாஷ்டாங்கமாக மாமா காலில் விழுந்தேன்.

'தீர்க்காயுஷ்மான்பவா!' குருக்கள் உச்சந்தலையைத் தடவிக் கொடுத்தார். அவர் விரல் நுனிகளில் அன்பு சொட் டிற்று. குருக்களுக்கு உள்ளூர சந்தோஷம்.

குருக்கள், மடியிலிருந்து காயிதப் பெட்டலத்தை எடுத்துப் பிரித்து, தாம்பூலத்தை உரலில் போட்டு இடிக்க ஆரம்பித்தார். அவருக்கு இடித்துத் தருவதற்காக, இரண்டையும் அவர் கைகளிலிருந்து கழற்ற முயன்றேன்.

"வேணாம்; வேணாம்! உனக்கு இந்தப் பக்குவம் தெரிய நியாயமில்லே. நீங்கள்ளாம் உத்தியோக ரீதியிலேயே அக்னி ஹோத்ரம் பண்ணறவாள்!"

நான் மருந்துக்குக்கூடப் புகை பிடிப்பதில்லை, அது எப்படி யிருக்குமென்றுகூட எனக்குத் தெரியாது. அது அவருக்கும் தெரியும் என்று எனக்குத் தெரியும். ஆனால் இப்படியெல்லாம் இடிப்பது குற்றமாக குருக்களுக்குப் படவில்லை. ஆனால் நானும் மறுக்கவில்லை. பெரியவர்களின் அற்ப சந்தோஷத்தைக் கெடுப்பானேன்! என் பிள்ளைகளையும், நானும் இதேபோல், என் கொடுமையை அனுபவிப்பதற்காக கொட்டிக் கொட்டி, அந்தக் கற்கண்டு குயில்களைக் கடுவாம்பூனைகளாக்கி, பிறகு பதிலுக்கு ஒரு முறையேனும், அவர்கள் திருப்பிக் கடித்தால், வலி பொறுக்காமல் சகட்டுக்கு இளைய தலைமுறையையே சபிக்கிறேனோ என்னவோ?

"யாரு, கூனப்ப முதலியாரா? வாங்க!" வந்த ஆள் ஆறடி இரண்டங்குலம். ஆஜானுபாகு. அப்பளக்குடுமி. குருக்கள் வழங்கிய விபூதியைப் பக்தியாய் வாங்கி நெற்றியில் உடம்பில் பூசிக்கொண்டான். அப்படியே நான் யார், அவ்விடத்தில் எனக்கென்ன ஜோலி என்று கண்ணால் வினாவினான்.

"இவர் யாரு தெரியுதா? தெரியல்லே? எட்மாஸ்டர் பிள்ளை! சப்தரிஷி ஐயர் குமாரன்." அப்போ பள்ளிக் கூடத்தில் ஆறாவது வரைதான்! இப்போத்தான் பத்துக்கும் மேலே போவுதே! இப்போ எட்மாஸ்டர், இவர் நினைப்பிருக்கணும். எனக்கிருந்து என்ன பிரயோசனம்?

"ஐயரே, நாளைக்கு சஷ்டி!" மூணு ஒற்றை ரூபாய் நோட்டுக்களை அவர் கையில் திணித்தான். "ஊசி போட்டுக்க ஆஸ்பத்திரிக்கு நாளை காஞ்சிபுரம் போவணும். விடி காலையிலேயே அபிஷேகத்தை முடிச்சுக் கொடுத்துடுங்க!"

"அப்படியே செய்துட்டாப் போவுது!"

அவன் என்னைக் கண்டு கொண்டதாவே காட்டிக் கொள்ளவில்லை. போய்விட்டான். கண்ணாடியின் பின்னாலிருந்து, குருக்களின் திரைபூத்த கண்கள், பின்னுக்கு வாங்கிக்கொண்டே போகும் அவன் முதுகின்மேல் விஷம் கக்கின.

"தந்து! தந்து" பல்லைக் கடித்தார். "மூணு தலை முறையா இதே மூணு ருவாதான்! அன்னிக்கு வெள்ளி விக்டோரியா! இன்னிக்குக் காயிதச் சிங்கம்—ஒண்ணுக்கு மூணு. அதில் குறைச்சலில்லை. அந்தப் பொம்மனாட்டி தலைக்கு இவன் கேட்டது, ஏன், அதுக்குமேலேயே மூணு ரூபாய்க்குக் கிடைச்சுண்டிருந்தது!

இன்னிக்கு இவள்மேல் அடுக்கக் கால்வரைக்கும் வரட்டி மூணுரூபாய்க்குக் கிடைக்குமா? மூணு ரூபாய் கொடுக்கறான். பொங்கலில் முந்திரிப்பருப்பு இல்லை என்கிறான்! முருகப்பெருமான் வேணுமானால் இவனை ஆசீர்வதிக்கட்டும். 'முதலியாரே, கையைப் பிடிங்க'ன்னு அர்ச்சனைக்குத் தத்தம் குத்தறப்போ எனக்குச் சபிக்கத் தான் வரது! ஆனால் நான் எங்கே இப்போ பூஜை, அர்ச்சனையெல்லாம் பண்ணறேன்? சங்கரன் பென்சின் கொடுத்துட்டானே! சம்பளமில்லாத பென்சின். "ராமாமிருதம் உனக்குப் பென்ஷனா? மொத்தமா வாங்கிட்டியா? ?

குருக்கள் இஷ்டப்பட்டால் ஒழுங்காய் உச்சரிப்பார் என்று தெரிகிறது. பென்ஷனுக்கும் பி.எஃப்-க்கும் வித்தியாசம் தெரியும் என்று தெரிகிறது.

"இந்தக் கோயிலுக்குக் காலையில் ஒரு கால பூஜை. அந்தத் தண்ணியை அவன் கொட்டிடறான். சாயங்காலம் ஏதோ கொஞ்சம் காத்தாட இங்கே ஒக்காந்துட்டு விளக்கைப் போட்டுட்டுப் போறேனே அத்தோடு சரி. அதுவுமில்லாட்டி உக்காந்து உக்காந்து மரத்துப்போன கால் விழுந்துடுமோனு பயமாயிருக்கு. விழுந்துட்டா கொள்ளுப் பேரன்மாருக்கு வந்திருக்கறவா வென்னீரடுப்புக்கு வெச்சிடுவா! அவாளைச் சொல்லிக் குத்தமில்லே! குழந்தைகள்தானே; வெளியிடம் வேறு! சதையா, ரத்தமா தானாட!"

இடித்ததை உரலிலிருந்து எடுத்து, இடது உள்ளங் கையில் வைத்து, வலது கையால் பிள்ளையார் பிடித்து, பிறகு பிள்ளையாரை உருண்டையாக்கினார், அந்தச் சடங்கு நேரம் பிடித்தது. அதுவரை மௌனம். உருண்டையை உள்வாயுள் வைத்துக்கொண்டார்.

"ஏன் ஊரிலிருக்கிற வியாதியெல்லாம் பிடுங்கித் தின்னாது?" குருக்கள் தொடர்ந்து பொரிந்தார். "உடம்பில் சர்க்கரை, ரத்தக் கொதிப்பு, வயிற்றுவலி! பார்க்கத்தான் பகட்டு. மாத்திரையை பக்ஷணமா தின்னுண்டிருக்கான். ஊசி போட்டு போட்டு ரெண்டு தோளும் கையும் சல்லடைக் கண். எங்கெங்கோ வெளிநாட்டிலிருந்து வரவழைக்கிறான். ஏழை வயித்தை அடிச்சு மிச்சம் பிடிச்சால்? இப்பிடித்தான் போகும். ஆனால் இவனுக்குப் போமாட்டேன்கறதே! விழுந்து விழுந்து தவங்கிடக்கோம். அந்தச் சண்டாளியும் நம்மைக் கண்ணெடுத்துப் பாக்கறாளா? இவன் மாட்டுக் கொட்டிலைப் பெருக்கிண்டேனும் இவன்கிட்டத்தான் இருப் பேங்கறா!"

மறுபடியும் சற்று நேரம் மௌனம். சிவபுரி நெடி சுகம் உள்ளே வேலை செய்யத் தொடங்கியிருக்கிறது.

"அம்பி!—(இது யார்?)—போட்டுக்கற மாதிரி பிடிக் கிறது இருக்குமோ?"

"நான் போட்டுண்டதில்லியே!"

"Ncver mind" அட! குருக்கள் இஷ்டப்பட்டால் பல்லவி யில்...என்னென்ன அடங்குமோ? கோவில் குளத்தின் மேல் (குட்டை! அந்த நாளிலேயே வருடத்துக்கு ஆறு மாதம் வறட்சி. மழுங்கப் பெருக்கி நெல் உலர்த்தி என் பையன் பருவத்தில் நானே பார்த்திருக்கிறேன்.) ஒரு மீன் கொத்தி அந்தரத்தில் அதே நிலையில் பாதம் மாற்றி மாற்றி நர்த்தன மாடிற்று. அதற்குமேல் ஒரு பருந்து நீந்திற்று. பின்னணி யில் மேகப் பொதிகள் கம்பீரமாகச் சாய்ந்தன.

"இந்த தந்து யார் தெரியறதா? தெரியல்லே? ஓர்ஜினல் கூனப்ப முதலியின் கொள்ளுப் பேரன்!"

"ஒரிஜினல் கூனப்பன் யார்?"

"இப்பத்தானே காட்டினேன். அதுக்குள்ளே மறந் துட்டியே." இப்போ காட்டின திசை வேறு. ஆனால் அதுவும் மேற்படிதான். "அதோ! அதோ!—"

மூன்றாவது அடுக்கு மொட்டை மாடியில் மூலைக்கு மூலை கட்டியிருந்த சிவப்புப் பட்டுப் புடவை காற்றில் பட படத்தது. அப்படிப் பார்த்தால்தான் குருக்களுக்கு திருப்தி. பெரியவாள் மனசைப் புண்படுத்தப்படாது.

"ஆனால் அப்போ மனைதான் உண்டு. மனையில் இவன் குடிசை, கிணறுகூடக் கிடையாது. அவன் பெண் டாட்டி, வாசலுக்கு சாணி தெளிக்கக்கூட கோவில் கிணற்றில்தான் மொண்டு வரணும் என்று போவாள். அப் போல்லாம் வேலையை வேலையாப் பாவிக்கிறதில்லே. நாம் விடற மூச்சைக் கவனிச்சா விடறோம். கவனிச்சால் மூச்சு தடைபடும். திணறும். அதுபாட்டுக்கு செய்துண்டேயிருக்க வேண்டியதுதான். இப்போத்தான் தொட்டதெல்லாம் வேலை. வேலைக்காரி தேச்சுப் போட்ட பாத்திரத்தை கவிழ்க்கிறது ஒரு வேலை. தோச்சிப் போட்ட காஞ்ச

துணியை எடுத்து மடிக்கிறது ஒரு வேலை. படுத்த படுக்கையைச் சுருட்டறது ஒரு வேலை. எத்தனை அக்ரமங்களுக்கு கண்ணை மூடிண்டு போக வேண்டியிருக்கு தெரியுமா? அதே சமயத்தில் இன்னிக்கு டி.வி யில் மனோகரான்னு சொல்லு. குடல் தெறிக்க ஓடுங்கள்- லுங்கியிலிருந்து கொசாம் வரைக்கும் நாய் தோத்தது. நாளடைவில் பல் தேய்க்கறது ஒரு வேலை, அநாகரிகம் விட்டுத் தள்ளு. மிருகங்கள் பல் தேய்க்கறதுகளா? அதுகளுக்குப் பல் வெளுப்பு கெட்டுப் போச்சா? அப்யஞ்ஞன ஸ்னானம் அவசியமான்னு ஒரு சர்ச்சையாமே!''

பேஷ்! குருக்கள் ஃபார்முக்கு வந்திருக்கார்.

—''எனக்குக்கூட என் அம்மா வயிற்றில் இருக்கறப்போ கனாக் கண்டமாதிரியிருக்கு. ஏதோ ஏதோ ஊமக்கோடுகள் மட்டும் லேசாய்...அப்பவே வயசானவன்தான். ஆட்டுக்குத் தாடி வளர்ந்தாப்ல மோவாய்க்கட்டையில் மயிர் பிசிர் பிசிராத் தொங்கும். பெரிய கூன். ஆமாம். அந்த நாள் தறியில் கை நாடா அப்படியும் இப்படியுமா குறுக்கே நாடாவைக் கையாலயே தள்ளிப் பாய்ச்சி ஒவ்வொரு நூலா முடைஞ்சாகணும். தறிமேல் குனிஞ்சு குனிஞ்சு ஆளுக்கு இடுப்பே வளைஞ்சுபோச்சு. குமரப்ப முதலி கூனப்ப முதலி ஆயிட்டான். கொள்ளுப்பேரனும் கூனப்ப முதலி. இவன் வெட்கப்படறான். என்ன பண்றது? பேர்ராசி விட்டுப் போகப் பயப்படறான்.''

குடிசை. நாலு சுவர் மேல் ஓலைக் கூரை. அடுக்களையைப் பிரிக்க குறுக்கே இடுப்பளவுக்குக் குறுக்குச் சுவர். அடுக்களையில் ஒரு மூலையில் நெல் குதிர். காலி அடுப்பு குளிருக்கு அடக்கமா. ஆளே அதன்மேல் படுக்கலாம். அடுக்காய்ப் பானைகள் இத்தியாதி! இந்தப் பக்கம் தறியும் தறிக் குழியும் பாதிக்கு மேல் அடைத்தது. இதற்கிடையில் இடத்தில்தான் படுத்து பெத்து பெருகி—ஈயத்தைப் பார்த்துப் பித்தளை சிரிச்சதாம்! நான் என்ன வாழ்ந்தேன்?

இந்தத் தொண்ணூறு வயதுக்குள் மூணு தாரம். அதற்கேற்ற படி புத்ரசந்தானம். அது அது பிழைக்க எங்கெங்கேயோ நாலா திக்கும் சிதறியாச்சு.

குருக்கள் இஷ்டப்பட்டால் பதஸா—பதஸாரிகஸா—ஆலமரமும் கிள்ளுக் கீரை.

"ஏழைக்குப் பொழுதுபோக்கு ப்ரஜா விர்த்தி!"

ஒண்ணு. இரவு எந்நேரமானாலும் ஒருநாள் கூட தவறாது, கூனப்ப முதலி கோட்டம் வந்து திருநீறு வாங்கிப் போவான். பேசமாட்டான். வாய்விட்டு வேண்டமாட்டான். நாடக பாணியில் கருடாழ்வான் போல் சாமிக்கெதிரே இரண்டு கைகளையும் ஏந்தி எதுவும் தோத்தரிக்க மாட்டான். அவனுக்காகவே கதவைத் திறந்து வைத்துக் கொண்டு காத்திருப்பதும் உண்டாம். அது காலம் வேறப்பா. பூஜை ஆபீஸ் வேலையா மாறல்லே. ஓ.டி. கிடையாது! நேரத்தைப் பற்றி அக்கறையா யாருக்கும் யாராலும் ஆக வேண்டியதில்லே. ஒரு நியதி தானாகவே ஏற்பட்டு விட்டாலும்கூட அதைக் காப்பாற்றியாகணும். அதுதான் பிரதானம். வேலையும் நேரமும் வேள்வி. கடிகார முள் அல்ல. ஸர்வே ஜனா சுகினோ பவந்து:

குருக்களுக்கு ஸம்ஸ்க்ருதம் என்றால் ரொம்பப் பிரியம்.

"அத்தனைகளுக்கும் அவன் ஒருவன் சம்பாதனையில் எப்படிப் பண்ணிப் பண்ணிப் போட்டாளோ மஹராஜி. ஆனால் இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை சொல்லி வைத்தாற்போல் அந்த அம்மாவுக்கு வயிறு சாய்ந்துவிடும்.

கூனப்ப முதலி முதுகோடு வயிறு ஒட்டி தறிமேல் கவிழ்ந்து நாடாவைத் தள்ளுவான்.

ஒரு வெள்ளிக்கிழமை காலை பத்து, பத்தரை இருக்கும். வீட்டில் அவனைத் தவிர யாருமில்லை, சாதாரணமாக அப்படி நேராது. ஒரு வாண்டேனும் அழுதுகொண்டிருக்கும். ஆனால் அன்றைக்கில்லை. அழகம்மை அடுப்பில்

உலையைப் போட்டுவிட்டு, தண்ணி மொள்ளப் போயிட்டாள். பேறுகளில் ஒண்ணு ரெண்டு கொடுக்காப்புளிக்காய் அடிக்கப் போயிருக்கும். ரெண்டு மூணு எங்கேனும் எருமை மாடு சவாரிக்குப் போயிருக்கும். மூணு, நாலு பள்ளிக்கூடமே போயிருக்கும். நாலு, அஞ்சு எனக்குத் தலை சுத்தறது. இது என்ன கணக்கோ விடப்பா!''

'வாசற்பக்கம் நிழல் தட்டிற்று. தறியிலிருந்து நிமிர்ந்து பார்த்தால் ஒரு பொம்மனாட்டி, முப்பத்தி அஞ்சிலிருந்து அறுபதுக்குள் இருக்கும்.'

வெடுக்கென எனக்கு முதுகு நிமிர்ந்தது. இந்த மனுஷன் என்ன குத்து மதிப்புப் போடறான்? எதிராளியைச் சதாய்க்கிறானா? யார் கேட்கிறது?

'செக்கச் செவேல்னு நிறம். சிவப்புப் புடவை உடுத்திண்டு, சிரிச்ச முகம்.'

''ரொம்ப நாக்கை வரட்டுது.'' குரலில் சற்று ஆண் கலப்பு—இரட்டைத் தந்தி. சௌடய்யா பிடில்.

கூனப்பன் அடுக்களைப் பக்கமாகத் தலை சாய்த்தான். தறியிலிருந்து எழுந்து வருவதற்கில்லை. இக்கட்டான கட்டம் இழை யறுந்து நுனியைத் தேடித் தவிச்சிண்டிருக்கான். கேட்டவளுக்கு அவனே தண்ணி யெடுத்து தரல்லியேன்னு யாரும் குற்றம் சொல்லமாட்டார்கள். நெசவுத் தொழில் அப்படி, பிராணாவஸ்தை. மூச்சு இழையோடிண்டிருந்ததுன்னு வசனமே பின் எப்படி வந்தது?

ஆனால் அவள் அடுக்களைக்குள் நடந்து சென்ற விதம் வேடிக்கையாக இருந்தது. பிறகு வியப்பு. அவனுக்கு முதுகைக் காட்டாமல், அவனுக்கு நேர்முகமாக, பக்கவாட்டில் நகர்ந்துகொண்டே போய், அவன் மேல் வைத்த கண் மாறாமல், பானையிலிருந்து மொண்டு குடித்தாள். பார்வைக்கு இவ்வளவு நல்லா இருக்கா, பாவம் வலிப்பா, வாதமா?

இல்லை. தாகம் தணிந்தபின் அவனை நோக்கி வந்தாள். ஆண் பிள்ளை நடை. வாட்டசாட்டமான தேகவாகு. "அந்த...அந்த."

குருக்கள் தடுமாறித் தவித்தார்.

—"ஹும் ஹும் வேண்டாம் சிறுபிள்ளைத்தனமா நான் உன்னிடம் பேசப்படாது. ஆனால் இந்தக் காலத்தில் உள்ளது அந்தக் காலத்திலும் உண்டு. எந்தக் காலத்துக்கும் இருக்கும், இருக்கணும். ஆனால் அப்போ, பேச்சு நடை முறை எல்லாவற்றிலும் ஒளிவு மறைவு. நிழல் காட்டிய தோடு எதிலும், அதிலும் ஆத்மார்த்தமான தேடல். கிட்டும் ஆனால் தெரிவதில்லை. கண்டு கொண்டதோடு சரி. பார்த்துவிட்டேனே! இல்லை. நான் சொல்றதை, சொல்ல வரதை நீ புரிஞ்சிண்டால் சரி. புரிஞ்சுக்காட்டாப் போ"—

குருக்களுக்குத் திடீரென்று ஏன் கோபம்?

தறியண்டை நின்றாள்.

"வந்திருக்கேன்!"

விழித்தான்.

'உன்னோடு இருக்கப்போறேன்.'

விழித்தான்.

சிரித்தாள்.

"நல்லாயிருக்கா. உயர்ந்த ஜாதியாத் தோணுது, என்ன பினாத்தறா? மரை லூஸா? அடைச்ச இடத்தி லிருந்து தப்பிச்சு ஓடியாந்துட்டுதா? தொப்புளைக் கொடி சுற்றி, சுருள் கலைந்தது.

திட்டியவண்ணம் அழகம்மை குரல் குடிசையை நெருங்கிக் கொண்டிருக்கிறது. முருகா! அவனுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. வந்தவளுக்கும் கேட்டுவிட்டது.

அழகம்மைக்கென்ன சின்னக் குரலா? வேலைப்பாடு போகவர அவளுக்குக் கத்திண்டே இருக்கணும். அவள் வந்த வளம், வாழ்க்கைப்பட்ட வழி; குடும்பத்தின் அவலம், இதற்லாம் காரணம் யார்?

குருக்கள் எழுந்து எட்டப் போய் புகையிலைச் சாற்றைத் துப்பிவிட்டு வந்தார்.

"பெண்களுக்குக் கலியாணமான புதுசில் ஆம்படையான் மேல் ஆசை. நாள் ஆக ஆக வெறுப்பு. இருவருக்கும் வயசு முற்ற முற்ற அவன் ஒரு வஸ்து. 'இப்போத்தான் திண்ணையில் உட்கார்ந்திண்டிருந்தது. எப்பவோ குளத்தங் கரைக்குப் போச்சு—' செத்துப்போன பிறகு பேசுவதற்கு ஒரு விஷயம். அதிலும் அவள்தான் ஹீரோயின். அப்புறம் அதுவும் இல்லை. "ஆண்டவனே! இன்னும் எத்தனை நாள் இங்கே பிடிச்சுப் போட்டிருக்கையோ?" தன்னை மறந்து கன்னத்தில் போட்டுக்கொண்டாள். கண் கலங்கிற்று. இடுப்புத் தவலையில் ஜலம் தளும்ப, வைதுகொண்டே நுழைந்தாள். "உலை சுண்டுதே தெரியல்லே? நான்தான் இல்லியே. களைஞ்சு போட்டால் உன் மீசைக்குப் பங்கம் வந்துடுமோ?—" அடுப்பண்டை வந்ததும் அழகம்மை அலறினாள். குரல் VIBGYOR ஆக உடைந்தது.

"ஐயோ வாயேன்! இங்கே வந்து பாரேன்!"

கூனப்பன் சிரமத்துடன் அவசரமாக, தறியினின்று தன்னைக் கழற்றிக்கொண்டு வந்தான். சோற்றுப்பானையில் விளிம்பு கட்டி பால் பொங்கிக்கொண்டிருந்தது. ஆனால் ஒரு சொட்டுக்கூட வழியவில்லை.

வீடு பூரா, பால் மணத்துடன், சந்தனம், புஷ்பம் 'கம்' குழறிக்கொண்டே அழகம்மை வெளியே ஓடினாள்.

கூனப்பன், நெற்றிக் கொப்புளிப்பை வழித்தபடி, தற்செயலாகத் தறிப்பக்கம் திரும்பினான். தறியில் 20 நெ

மோட்டா நூலில் வளர்ந்துகொண்டிருக்கும் துணியில் கட்டான்களில் திடீரென்று பளிச்சென்று முகம் துடைத்த ஒரு மினுக்கல். அத்தனையும் பட்டு.

அதென்னவோ கூனப்பனுக்கு இப்போ அதிசயமா யில்லே. சினிமாக் கொட்டாயில் உருவங்கள் ஆடிக்கொண் டிருக்கும் திரை சட்டென வெறும் திரையாகி இடை வேளைக்கு லைட் வந்த மாதிரியிருந்ததோ என்னவோ?

வந்தவள் நெல் குதிரிலிருந்து இறங்கி, பக்கத்தில் வந்து நின்றாள்.

''வந்திருக்கேன்.''

தலையசைத்தான்.

''அவளை வெளியில் அனுப்புவதற்காக என்னைக் காட்டிக் கொள்ளும்படி ஆயிட்டுது.''

''அவள் இருந்தால் என்ன?''

''அவள் பதில் பேசவில்லை. புன்னகை புரிந்தாள். என்ன அர்த்தமோ?

''இதோ வந்திடுவா, கும்பலைக் கூட்டிண்டு.''

''அவள் வருவதற்குச் சற்று நேரமாகும். அந்த பாட்டில்தான் அவளை அனுப்பியிருக்கிறேன்.''

''கூனப்ப முதலி தலையை ஆட்டினான்.

''நான் உன்னோடு இருக்கப் போறேன்.''

''இரு. இரு. எப்பவுமே நீ இங்கே இருக்கணும். கையடிச்சுக் கொடு.'' கையை நீட்டினான்.

''அதெப்படி? நான் உன்னைத் தொட முடியாது. எனக்குப் புருஷன் இருக்கான். என் வாசம் என்னவோ வேளைக்கு வேளை வீட்டுக்கு வீடு மாறிக்கொண்டிருந் தாலும், இங்கேயே நிலைச்சிருப்பது நடவாத காரியம். இடம் மாறிக்கிட்டேயிருப்பதுதான் என் வாழ்வே.''

"சரி ஒண்ணு செய். போறப்போ என்கிட்ட சொல்லிக்கிட்டுப் போவணும்."

"ம்-ம்-ம்"-சற்று யோசித்து "சரி அதில் உனக்கென்ன லாபம்? கேக்கப்போனால் முன்கூட்டித் தெரிஞ்சால் கஷ்டமாயிருக்குமே!"

"அதைவிடு. போறப்போ சொல்லிட்டுப் போற மரியாதை கிடையாதா?"

"அதுவும் சரி, அப்படியே ஆகட்டும். உன் பெண்டாட்டி குரல் கேக்குது." முதுகு காட்டாமல் பின்பக்கமாகவே ஓடி அரிசிப் பானைக்குள் புகுந்துகொண்டாள்.

"அவ்வளவுதாம்பா. கூனப்ப முதலிக்கு திடீர்னு செல்வம் அப்படி எப்படிக் கொழிச்சுது. என்னைக் கேட்காதே. யாரைக் கேட்டாலும் சொல்லமுடியாது. வீட்டில் ஈசானிய மூலையில் புதையல் கிடைச்சுதா? அலாவுதீன் பூதம் கொண்டுவந்து கொடுத்ததா? யாரேனும் உறவு ஆஸ்தியை எழுதி வெச்சுட்டு மண்டையைப் போட்டானா? அவன் நெய்த துணிக்குத் திடீர்னு மவுசு வந்துடுத்தா?

"அத்தனையும் கேள்விகள்தான். அத்தனைக்கும் பதில்கள் உண்டு. ஆனால் நமக்குத் தெரியாது. நமக்குப் புரியாது. அது கூனப்ப முதலிக்கே தெரியாது புரியாது." எல்லாவற்றையும் மீறி எல்லாக் கேள்விகளுக்கும் ஒரே பதில் ஒண்ணு உண்டு. 'கொடுக்கிற தெய்வம்—'

"கூரையைப் பிய்ச்சுண்டு கொடுக்கும்" என்று நான் முடித்தேன்.

"ஆ! அதுதான் அது இரண்டே வருஷத்தில் குடிசை மறைஞ்சு கட்டடம் எழும்பிடுத்து.'

கூனப்பன் இரண்டு பிள்ளையார் கோவில் கோபுரத்தைப் புதுப்பிச்சுக் கும்பாபிஷேகம் நடத்தி இந்தக் கட்டளையை ஏற்படுத்தினான். மூணு ரூபாயில் அப்போ வாண வேடிக்கை

கூட நடத்தியிருப்பார்கள். இப்போ பொங்கலுக்கு வெல்லமே தகறார். வெல்லம் இல்லாமல் பொங்கல் செய்வது எப்படி? இப்போ பெட்ரோலுக்கு மாத்து தேடறாங்களாமே, அத்தோடு இதையும் ஒரு விஞ்ஞான பிரச்னையாகச் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். பாரத நாடு ஆஸ்திக நாடு. பொங்கல் போட்டே ஆகணும்.

கூனப்ப முதலியின் பிள்ளைகள், பேரன்மார்கள் எல்லோரும் உட்கார்ந்து தின்று தின்று, தொந்தியும் தொப்பையுமாய், குண்டப்ப முதலிகளாகி விட்டார்கள்.

ஆனால் கூனப்பன் மட்டும் சுக்கங்காயாய் வற்றி வயிறோடு முதுகு ஒட்டி.

ஒருநாள் கூடத்தில் ஊஞ்சலில் படுத்திருந்தான். பிற்பகல் மணி மூன்றிருக்கும். வீட்டில் ஒருவருமில்லை. ஆனால் அது இப்போதெல்லாம் புதுசில்லை. வீட்டிலிருப்பவருக்கு (பெண்கள் உள்பட) வீட்டுக்கு வெளியேதான் ஜோலி. காலம் மாறிண்டே வரதோன்னோ?

தூக்கமல்ல; ஒரு தினுசான மயக்க சுகம். அரைக் கண் செருகல். ஒரு பொம்மனாட்டி—சிவப்புப் புடவை, சிரிச்ச முகம், வயது அறுபத்தி அஞ்சிலிருந்து முப்பதுக்குள் (ஓஹோ, இதுதான் Left Hand ஆக்கும்) எதிரே நிற்கிறாள்.

"நான் போற வேளை வந்தாச்சு. சொன்னபடி உன்னிடம் சொல்லிக்கொள்ள வந்திருக்கேன்."

கூனப்பனுக்கு வெடுக்கென விழிப்பு வந்துவிட்டது. அவசரமாக எழுந்து இடுப்பில் நெகிழ்ந்திருந்த வேட்டியைச் சரியாகச் சொருகிக் கொண்டான்.

"இரு, இதோ வந்துட்டேன். அவசரம்" வாத்தியாரிடம் பையன் மாதிரி, ஒற்றை விரலைக் காட்டிவிட்டு வேகமாக வாசலுக்கு வந்து தெருவைக் கடந்து, எதிர்வீட்டுக்குள்

நுழைந்து அந்தப் புழக்கடை வழி அடுத்த தெரு, மறுபடியும் இன்னொரு புழக்கடை, இன்னொரு தெரு அப்படி, இப்படி அங்கே திரும்பி இங்கே திரும்பி, குமரன் கோவிலுக்கு வந்து கதவா, மண்ணா—மண்டபத்தில் உட்கார்ந்துவிட்டான். மூச்சு வாங்க யோசிக்கக் கொஞ்ச நேரம் வேண்டாமா?

கூனப்ப முதலி வீட்டில், அவன் திரும்புவதற்காகக் காத்திருப்பவள் சற்று நேரம் சுவரில் காலண்டர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். அப்பவே காலண்டர்களில் ஸ்டார்கள், சுவாமிகள் இடத்தைப் பிடிக்க ஆரம்பிச்சாச்சு.

வாசலில் பெண்கள் குரல் கேட்கவும் உக்கிராண உள்ளில் ஓடி, பழைய ப்ரகாரம் அரிசிப் பானைக்குள் புகுந்து கொண்டாள்.

மறுநாள் விடிகாலை யாரோ குமரன் கோவில் கிணற்றில் ஜலம் மொள்ள வந்தபோது கூனப்ப முதலி வெற்றியுடன் இளித்தபடி கிணற்றில் மிதந்து கொண்டிருந்தான்.

'இரவில் யாரும் தேடவில்லையா என்று கேட்கிறாயா? அதெல்லாம் அந்தக் காலம்.

''கிழம் எங்கானும் இன்னொரு கிழத்தோடு பேசப் போய் அப்படியே திண்ணையிலே முடங்கியிருக்கும்.''

அரைகுறை அவனைத் தேடியிருக்கக் கூடியவளைத் தான்—வையறத்துக்கானும் அவளுக்கு ஆள் வேணும். எப்பவோ கட்டின தாலியும் மஞ்சளுமாய் உச்சிவேளைக்குக் கொண்டுபோய் பாலாற்றங்கரை மணலில் வெச்சாச்சே!''

கவனம் சற்று ஏமாந்திருந்தால், ''உயிரோடவா?'' என்று கேட்கும்படியிருந்தது குருக்கள் சொன்ன விதம்.

''அட, இருட்டிப் போச்சே. சித்தே வீட்டில் கொண்டு போய் விட்டுடிறியா? சாயங்காலம் வந்தால் பார்வை சுத்த சூன்யம்.''

''ஒரு சந்தேகம்.''

''என்ன?''

''தந்து தந்து என்றால் என்ன?''

''பேஷ்! நான் கதை சொன்ன லக்ஷணம், நீ கண்ட மிச்சம் இதுதானா? முன்னாலே 'வி' சேர்த்துக்கோ. சரி, போவோமா?''

# சப்த வேதி

குரலோசை—இல்லை சப்தங்களின் சோதனையில் என் வாழ்க்கை அழிந்தது.

சங்கீதமல்ல—வாழ்க்கையின் தினசரி ஓசைகள்—பண்டங்கள் உருளல்—கதவுகள் திறத்தல்—எச்சிலின் துப்பல்—இருளில் ஒரு தும்மல்—இம்மாதிரி சப்தங்கள் என் வாழ்க்கையை அப்போதைக்கப்போது, அவைகளின் இஷ்ட உருவாக்கி என்னைக் குட்டிச்சுவராக்கிவிட்டன.

கற்பனை என்பது ஆபத்து. கட்செவி போன்று, அதிஸன்னமான ஓசைகளைப் பெறும் செவியையும் படைத்து, பிறகு அவ்வோசைகளின் உள்ளர்த்தங்களைக் கண்டுபிடிக்க அவ்வழியே கற்பனையையும் ஓட்டிவிட்டால் அப்புறம் தசரதனின் 'சப்த வேதி' சமாசாரம்தான். அவன், புனலில் அமிழும் குடத்தை புலியின் தாகமெனத் தப்பாக அர்த்தம் பண்ணி அழிந்தான். நான் சரியாக அர்த்தம் பண்ணி அழிகிறேன். இதுதான் வித்தியாசம். இறுதியில் இருவரும் கண்ட பலன் ஒன்றுதான்.

சப்தங்களின் அர்த்தம் என் மனதில் முதன்முதலில் உறைத்த பொழுது எனக்கு ஒன்றும் பிரமாதமாய் வயதாகிவிடவில்லை. பதிமூன்று, பதினாலு இருக்கும். இரண்டுங்கெட்டான் வயது. ஒரு நாளிரவு எல்லோரும் சாப்பாடாகி, படுக்கையுமாகி, விளக்கை அணைத்துவிட்டு, தூக்கம்

வராமல் பேசிக்கொண்டிருந்தோம். வீட்டில் ஒரு விருந்தாளி. அன்று மாலைதான் ஊரிலிருந்து வந்திருந்தார். பேச்சுக்குக் கேட்பானேன்? என்னென்னவோ ஆரம்பித்து, எங்கெங்கோ சென்று எது எதுவோ ஆகி, பிறகு, அவர் எப்பவோ, பட்டணத்திலிருந்து திருச்சினாப்பள்ளிக்குச் சென்ற ஒரு ரயில் பிரயாணத்தில் போய் முடிந்தது.

அவருக்கே ஒரு தனி மிருதுக் குரல். தாழ்ந்த சுருதியில் 'கனகன'வென நெருப்பில் வைத்த பக்குவத்தில், அவ் விருளில், அவ்வறையை நிறைந்து, செவியில் மோதும் பொழுது, அவர் சொல்வதெல்லாம் கண்முன் வந்து நின்றது. அப்பொழுது வைகாசி மாதம் இருந்தும், ஐப்பசி மாதக் குளிரில் விறைத்தாற்போல், நான் படுக்கையில் அக்குரலின் வசப்பட்டுக் கட்டையாய்க் கிடந்தேன்:—

"நீங்கள்கூடப் பேப்பரில் படித்திருக்கலாம்:—நானும் அதே ரயிலில் அதே வண்டியில் உட்கார்ந்திருந்தேன். என் நல்ல காலம் எனக்குத் தூக்கம் வரவில்லை. அவர்களுக்கு வேளைக்காலம் தூங்கி வழிந்துகொண்டிருந்தார்கள். ஆனால் அப்படியும் நேரமாகி விடவில்லை.

இன்னும் கொள்ளிடம் பாலம், தண்டவாளம் போட்டு ரயில் ஓடிக்கொண்டிருந்தாலும் கட்டி முடியவில்லை. வண்டி ஸ்ரீரங்கத்தை விட்டு 'பாஸ்' ஆகிவிட்டது. ஆடி மாதம் நேரமாகாவிட்டாலும் முன்னிருட்டு. காவேரி பிரமாதமான பெருக்கிலிருந்தாள். அவ்வெள்ளத்தை எப்படி வர்ணிப்பது?

நானிருந்த பெட்டியில் அவ்விருவர்தான் இருந்தனர். கூலியாட்கள் போலும் அவனவன் கையில், சரியாய், கால் படி மோருஞ் சாதம் பிடிக்குமளவில் ஒரு டிபன் டப்பாவை அமுக்கிக் கொண்டிருந்தான். இப்பொழுதுகூட, இதோ என் கண் முன் நிற்கிறார்கள், அவர்கள்—கன்னம் முண்டி கடை வாயில் புகையிலைச் சாறு வழியத் தூங்கிக்கொண்டு.

திடீரென்று நடுப்பாலத்தில் வண்டி நின்றது. இன்னமும் கைகாட்டி சாயவில்லையோ என்னவோ? 'வீல்' என்று வண்டியின் ஊதல் அலறியது. அவ்வலறல், அப்பரந்த வெளியில் ஆகாயத்தைக் கிழித்துச் சென்றது. அதைக் கேட்டதும், உடனே விழித்துக்கொண்டு விட்டார்கள். அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்று எனக்கெப்படித் தெரியும்? ஸ்டேஷன் வந்துவிட்டதென்று நினைத்துக் கொண்டு விட்டார்கள். அவசர அவசரமாய், டிபன் டப்பாவைத் தூக்கிக்கொண்டு கதவைத் திறந்துகொண்டு ஒருவன் இறங்கினான். அவனை ஒட்டினாற்போல், மற்றவனும் இறங்கிவிட்டான்.

நான் என்ன பண்ணிக்கொண்டிருந்தேன்? எனக்குத் தெரியாது. இன்னமும் தெரியவில்லை. மூளையைச் சுரண்டி யோசனை செய்கிறேன், இன்னமும் தெரியவில்லை. இந்த பயங்கரம். என் மனதில் ஊறி, நான் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுக்குமுன், கைகாட்டி சாய்ந்து வண்டி வேகமெடுத்துவிட்டது. நிறுத்தியும் என்னபயன்? அந்நள்ளிரவில், நடுவெள்ளத்தில், எதைத் தேடுவது? கரையோரமாய்த் தான் தேடவேண்டும், காலையில் முதலை விழுங்காமலிருந்தால்—ஐயோ உனக்கென்ன?—

நான் 'வீல்' என்று அலறிவிட்டேன். எல்லோரும் என்னைச் சுற்றிக்கொண்டார்கள், எனக்கு மூன்று நாள் சரியான ஜுரம் அடித்தது. வேளை வந்ததும், காலத்தை முடிக்க, எவ்வளவோ கணக்காய் ஏற்பாட்டைச் செய்து, காரியத்தை முடிக்கும், விதியின் வெல்ல முடியாத் தன்மையை, ஆணி அறைந்தாற்போல், அவ்விருளில் அழுத்தமாய் உணர்த்திய அக்குரலின் பயங்கரத்தை என்னால் ஸகிக்க முடியவில்லை. அன்று முதல் என் உடலில், பழைய துணிச்சலும், ஆரோக்கியமும் ஒருநாளும் இருந்ததில்லை.

ஒருவேளை காலையில், இந்தக் கதையை கேட்டிருந்தால், அவ்வளவு பயந்திருக்க மாட்டேனோ?—இருளில்

கேட்டதால் வந்த விபத்தோ? ஆம், இரவில்தான் சப்தங்களின் சக்தி வலுக்கிறது. ஒளி மங்கியதும், ஒலி ஓங்குகின்றது.

ஆனால் அன்று முதலே என்னை அறியாமலே சப்த சோதனைக்கு ஆரம்பித்துவிட்டேன். அதில் அசரீரி... அநுபவமும் ஒன்று. நம் நினைவின் ஓட்டத்தில், திடீரென்று எங்கிருந்தோ, சம்பந்தமில்லாத ஒரு தனிகுரல் கல்லெறிந்தாற்போல் விழுந்து கலக்குவதை?—இதைச் சகுனம் பேசுதல் என்பதா சப்தஜாலம் என்பதா?—

எனக்கு ஒரு பிராண சிநேகிதனிருந்தான், அவனைப் பற்றி நினைக்கவும் கஷ்டமாயிருக்கிறது. அவன் என் வாழ்க்கையில், புகுந்து, இருந்து, மறைந்தது, ஒரு இன்பக்கனவு கண்டு விழித்தது போலேயாகும். அம்மாதிரி சிநேகிதத்திற்குப் பாத்திரனாக என்ன புண்ணியம் செய்தேனோ, அதைப்பூரா அனுபவிக்கக் கொடுத்து வைக்காவிட்டாலும்:-

அவன் ஒருநாள் மாலை உலாவிவிட்டுப் படுத்தான், தலை வலிக்கிறதென்று. அவ்வளவுதான். மடமடவென்று அன்றிரவு ஏறிய ஜுரத்தில் காலை வரையிலும் காத்திருக்க முடியவில்லை. இரவோடிரவாய்க் கொண்டுபோய் ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார்கள். மறுநாள் எனக்கு வார்த்தை வந்தது. அவனைக் காண வீட்டை விட்டுக் கிளம்பினேன். வாசல்படியிலிருந்து காலெடுத்து வைக்கும்போதே—தெருவில் யாருடனோ, எதுவோ பேசும் எவனோ ஒருவன் 'அது அப்பவே' தீர்ந்துவிட்டதே!—என்றான். எனக்கு அப்பவே தெரிந்துவிட்டது ஆஸ்பத்திரியில் அவன் படுக்கையை சுருட்டியாய் விட்டதென்று. இருந்தும் சென்று, அந்தக் கட்டிலை வெறுத்துப் பார்த்துக்கொண்டே நின்றேன்.. அடிவயிறு சுருட்டியது.

'அவருடலை அப்பவே கெடங்குக்கு எடுத்துப் போயிட்டாங்களே!' என்று வார்டு பையன் கூறியது காதில் விழுந்ததேயொழிய அப்பொழுது மூளையில் ஏறவில்லை!

அப்புறம் பவானி!

பவானியும் நானும் காலேஜில் ஒரே வகுப்பில் படித்தோம்.

வாழ்க்கையில் அக்கட்டத்தில் எனக்கு உதவுகின்றவர் ஒருவருமில்லை. நானே ராஜா. நானே மந்திரி. அப்பா நல்ல வேலையாய், தான் போகுமுன், நான் கஷ்டப்படாத படிக்கு கொஞ்சம் சொத்து வைத்துவிட்டுப் போயிருந்தார். பிதுரார்ஜிதமும் இருந்தது. உத்தியோக வேட்டையாடும் கஷ்டமுமில்லை. எனக்கு உத்தியோகத்தில் அக்கறையில்லை. களம்பறித்துப் படிக்காமல், என்னிஷ்டப்படி படிப்பில் பொழுதைப் போக்கிக்கொண்டிருந்தேன். அப்பொழுதுதான் பவானியைச் சந்தித்தேன்.

வகுப்பில் எத்தனையோ பெண்களிருந்தார்களே, அவர்களிடம் என் புத்தி செல்லவில்லை! ஆம், பாவனியைவிட எவ்வளவோ, அழகிகளெல்லாம் இருந்தார்கள். ஸ்வர்ணா என்று ஒருத்தி. அவள் பெயர் அவளுக்குத்தான் தகும். ஸ்வர்ணா, விக்ரஹம்தான். ஆனால் வாயைத் திறந்தாலோ, மயில் அகவுவது போலிருக்கும். ஆனால் மிஸ் பவானியோ!

ஒருநாள் மாலை, காலேஜ் புத்தக சாலையில், நேரமானதும் தெரியாமல், படித்துக்கொண்டிருந்தேன். என்ன புத்தகம் என்று மறந்துவிட்டது. (டாகூரின் கீதாஞ்சலியோ?) எழில் மிகுந்த நடை, வாய்விட்டு வார்த்தைகளை எழுத்துக் கூட்டுவதுபோல், நாவில் உருட்டி உருட்டி சுவைத்து, அவைகளின் சப்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்தேன்.

அப்பொழுது அவ்வந்திப் பொழுதினிலே, எந்த சமயத்தில் என்ன நேருமோ என்றும் இனிப்பான அச்சம் ததும்பும் அந்த இந்திரஜால வேளையிலே, கிரந்தங்களின் உயிர்களும், அவைகளை சிருஷ்டிக்க, தங்கள் இதயச்சாறை அவை

களுக்கே பலியான இலக்கிய கர்த்தாக்களின் ஆவிகள் உலவும் அந்த நேரத்திலே, என் பின்னிருந்து 'கிளுக்' என்று ஒரு சிரிப்பு ஒலித்தது. அது என்செவியில் மோதியதும், நான் என்னத்தைக் கேட்டேனோ? கனகசபையில் ஆடும் சிவபிரானின் காற் சிலம்பொலியோ? அவன் கேலிக்கூத்தின் ஏளனம் அத்தனையும் அச்சிரிப்பில் ஒலித்தது.

"ஹல்லோ" எத்தனை நாளாய் அரிச்சுவடியில் முனைந் திருக்கிறீர்கள்? காலேஜ் வந்ததும் ஸ்கூல் பாடம் திருப்புகி றீர்களோ?—

அவளுடைய குளிர்ந்த மூச்சு என் பிடரியில் விளையாடி யது. புன்னகையில் அவள் கன்னம் குழிந்தது. மை தீட்டிய விழிகளில் குறும்பொளி வீசியது.

" பவானி!"

புன்னகை தவழும் முகத்துடன் அவள் சற்றுப் பின்ன டைந்தாள். அவள் மயிரில் பதுங்கிய சாமந்திக்கொத்தின் மணம் அவளைச் சுற்றிக் கம்ழ்ந்தது. அவள் கட்டியிருந்த மூக்குப்பொடிக் கலர் புடவை-அவள் நடக்கும்பொழுது சலசலத்தது. அணைக்கவே கடைந்தாள் போன்ற அவள் இடை, அவள் நடக்கும்பொழுது ஒடிந்தது.

நான் இதுவரை காணாததை அன்று கண்டேன்.

நானும் பவானியும் மணம்புரிந்து, தனிக்குடித்தனம் நடத்தினோம். காலேஜ் வாழ்க்கையின் நாகரிகம் அவள் பசுமையை வெதும்பி, அவளைப் பிஞ்சில் பழுத்த வெம் பலாக்குமுன், நான் அவளைக் கொண்டுவிட்டேன்.

ஆனால், பவானி, கொலுவில் வைத்த பொம்மைபோல், பார்க்கவும் கேட்கவும் அழகேயன்றி, வேறு சமையல் செய் யவோ, வீட்டு வரவு செலவுக் கணக்கைக் கவனிக்கவோ, குடும்பப் பொறுப்பை ஏற்கவோ பயனிலள். அதனால் என்ன, கடவுள் புண்ணியத்தில் ஏதோ கொஞ்சம் சௌகரி

பங்களிருக்கின்றன. காசைக் கொடுத்தால் சமையல்காரி—இதெல்லாம் என்ன. பவானியைப் பார்த்துக் கேட்டுக் கொண்டிருந்தாலே போதுமே, பசியும் வருமோ?

பவானியை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? இல்லை. எங்கு பார்த்திருக்க முடியும்? கதவின்மேல் சாய்ந்தவண்ணம் ஒருகாலை அழுந்த ஊன்றி இன்னொரு காலை ஒடித்து, நிலை வாசலில் நின்றுகொண்டு, நெற்றிப்பொட்டில் சரிந்த மயிர் சற்றுக் கலைந்து மோத, தோளில் மோவாய்க் கட்டையை அழுத்தி, கண்களை மலர்த்தி, உம்முடைய கண்களினுள் உம்மை வெறித்து சற்றுக் குழிசிரிப்பாய் சிரித்தாளெனில் வந்தது உலை, உம்முடைய மனநிம்மதிக்கும் தூக்கத்திற்கும். அத்துடன் உரக்க உரக்கவும் சிரித்து விட்டால்—என் செவியின் கூர்மையில், என் கண்கள் மங்கி விட்டன. அவள் உடலழகைவிட, அவள் சிரிப்பின் ஒலியையும், அவள் குரலின் ஓசையையும்தான், நான் அனுபவிக்க முடியும்.

அவள் பேச்சுக்கு, குடத்தில் தண்ணீர் தளும்பும் சத்தம் தான் உவமை. அவள் சிரித்தால் ஓடும் தண்ணீரில் கல்லை விட்டெறிந்தாற்போல், ஸ்வரமும், அபஸ்வரமும் கலந்த ஒரு தனி நாதம் கிளம்பி உள் இதயத்தைக் கொள்ளை கொண்டு விடும். ஆம் நீங்கள் பவானியைப் பார்த்தும் கேட்டுமிராத வரையில் தப்பித்தீர்கள். அவளுடைய தரிசனத்தின் இன்பமே, ஒரு சகிக்கவொண்ணாத் துன்பம். அவ்வானந்தமே ஒரு அவஸ்தை. பவானி ஒரு பேதை. எனக்கு திடீர் என்று தீராத ஒரு சந்தேகம். அவள் கஷ்டம் என்பதையே அறியாளோ? எப்பொழுதும் சிரித்த முகம் தான். கண்டதெல்லாம் சிரிப்பு. ஒன்றுமில்லாவிட்டால் எதையாவது நினைத்துக்கொண்டு பாவம் சிரித்துக்கொண்டிருப்பாள்!

திடீரென்று ஒருநாள் நினைத்துக்கொள்வாள். மூலையில் புழுதி படிந்து உரையும் போடாமல் நிற்கும் வீணையை

எடுத்து மீட்டி, பட்டைகளில் விரலை யோட்டும்பொழுது அக் கை விசேஷத்தில், ஸ்வர ஜாதிகள் புதுப்புது விதமாய்க் கூடி, புதுப்புது நாதங்கள் பிறக்கும்.

அவள் போக்கின்படி நான் விட்டு அவளிடமிருந்து வரும் நாதங்களைக் கேட்டு இன்புறுவேன்.

ஆனால் அதேமாதிரி ஏன் என்னை என் இஷ்டப்படி விடுவதில்லை. அறுபது நாழியும் வீட்டுக்குள்ளேயே எப்படி உங்களால் உட்கார்ந்திருக்க முடிகிறது? ஐயோ, முகமெல் லாம் வெளுத்துக் கண்ணெல்லாம், வரவர உள்ளே போகின்றதே!

ஏன் சும்மா எங்கேயோ பார்க்கறேள்? என்னத்தைத் தேடறேள்? ஆம், நான் எதைத் தேடுகிறேன்?

* * *

வானம் அமைதியாயிருக்கின்றது. என்னென்ன சப்தங் களோ, ஆகாய வெளியில் நீந்துகின்றன. ஆனால் வானம் மாத்திரம், வாயை மூடிக்கொண்டிருக்கிறது.

பிறகு—

ஒரு நாளிரவு, வானம் இருண்டு, இன்னும் குமுறுகிறது. சந்திரன் எங்கோ ஓடி ஒளிந்துவிடுகிறான்.

'பிசுபிசு'வென்று ஒன்றிரண்டு தூறல்—பிறகு மழை 'ஜோ'வென்று ஊற்றும். மழை—காற்று—புயல்— 'சொடேர்—சொடே'ரென்று மின்னல்—எங்கேயோ 'மொள மொள'வென்று, ஒரு மரம் முறிகிறது—மின்னல் வானத்தை வெட்டும்பொழுதெல்லாம், வானம் அடிபட்ட விலங்கு போல் அலறியது.

இயற்கை வெறி.

''ச-பா-ஷ்!''

''ஐயோ, இதென்ன கூத்து! மின்னல் கண்ணைப் பறிக்கிறது. ஜன்னலண்டை போய் நிற்கிறேனே!—குழந் தைக்குத் தூக்கித் தூக்கிப் போடுகிறது—ஐயோ, கதவை மூடுங்களேன்! எனக்குப் பயமாயிருக்கே!

சீ, ஆயிரம் படித்தால் என்ன, பெண் புத்தி பின் புத்தி தான்—இவ்விடியில் நாசக்கூடத்தின் டமருக ஒலி எனக்கு மாத்திரம் கேட்டு அவளுக்கு ஏன் கேட்கவில்லை? சப்த சோதனையின் மஹாபோதையைப் பற்றி அவள் என்ன கண்டாள்?

ஆம், இவள் வரவர என்னை ஒதுக்குகிறாள்—முன் போல் புதுப்புடவையின் மடிப்போசையுடன் வளைகள் குலுங்க மாடிக்கு ஓடி வருவதில்லை. நிச்சிந்தையான அவள் சிரிப்பு வீட்டில் ஒலித்து எத்தனையோ நாளாகிறது. நான் மாடியில் இருந்தால் அவள் கீழிருக்கிறாள். நான் கீழேயிருந் தால் அவள் மாடியிலிருக்கிறாள். குழந்தையைச் சாக்கிட்டு அவள் வேறு அறைக்கும் மாற்றிக்கொண்டு விட்டாள்.

மலர்ந்த மொக்கு வாயுடன் குழந்தை அறைக் கண் மூடியபடி தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்தான். நான் பக்கத்தில் போய் நின்று, குனிந்தேன். அவன் விழித்துக் கொண்டு சிறு கைகளை நீட்டி, என் மோவாய்க்கட்டையை எட்டிப் பிடித்து, 'கிளுக்' என்று சிரித்தான்.

குழந்தைகளின் ஸ்பரிசமோ, குரலோசையோ பட்ட மாத்திரத்தில் உடல் புளகிக்கிறது. ஸஹிக்க முடியாத ஆனந்தத்தில், மயிர் கூச்செறிகிறது. அச்சமயம் உடம்பில் பரபரக்கும் வெறியில் என்ன செய்கிறோம் என்பதும் தெரிய வில்லை. அக்குழந்தை கெக்கரிப்பைக் கேட்டதும் உடைப் பெடுத்து ஆசைப்பெருக்கில், அவனை அப்படியே வாரி, உடலோடு சேர அணைத்துக்கொண்டேன். வரண்ட பூமி உறிஞ்சிய தண்ணீரைப் போன்றிருந்தது என் தாபத்தின் தவிப்பு.

''ஐயையோ கொலை, கொலை!''

பயத்தால் வெளுத்த அவள் முகத்தில் நீலமும் படரு வதை என் கண்ணாலேயே கண்டேன். குழந்தையை அப்படியே கீழே வளர்த்திவிட்டு, அங்கு விட்டு அகன்றேன்.

அன்றுமுதல் குழந்தை அருகே செல்லவும் எனக்குச் சமயம் வாய்ப்பதில்லை. அவன், அவளிடுப்பிலிருந்து கொண்டு, கைகளை நீட்டி நீட்டி, என்னைப் பார்த்துச் சிரிக் கிறான். நான் வேதனையடைகிறேன்.

* * *

நாதபிந்துவின் பிரம்மாண்டமான சுழலில் சில சமயங் களில் அதன் வேகத்தை நாம் தொட முடிகிறதேயொழிய, காதால் கேட்க முடிகிறதில்லை. அம்மாதிரியான அபூர்வ மான சந்தர்ப்பங்களில் நம்மனம் அக்கன வேகத்தில் அகப் பட்டு, தன் செயலிழந்துவிடுகிறது. உடலெல்லாம் ஒரே மாதிரியாய் 'விறுவிறு'க்கின்றது. மௌனமும் வாய்விடாமல் அலறி நம்மைக் கட்டிவிடுகிறது.

அம்மாதிரிதான், இன்றிரவு, நான் எங்கேயோ போய் விட்டுத் திரும்பி, மாடியேறி, ஹாலில் நுழைந்து விளக்கைப் போட—

இல்லை போட வரவில்லை. பொத்தானை அமுக்க விரல் மறுத்துவிட்டது. என் இதயம் தொண்டைவரையில் எழும்பி வாயை அடைத்துவிட்டது. உடம்பெல்லாம் ஒரு பயங்கர பரவசம்.

என் அறையில் யாரோ இருப்பதாக உணர்ந்தேன். பொத்தானில் வைத்த கை வைத்தபடியே, அப்படியே கல்லாய்ச் சமைந்தேன்.

''எனக்கு வரவர பைத்தியம் பிடித்துவிடும்போல இருக்கு—வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்கேன்.''

(இது பவானி)

"நான் அப்பவே சொன்னேன்—"

இது வேற்றுக்குரல், சப்த சோதனைகளிலேயே தோய்ந்த என் மூளை விறுவிறுவென்று வேலை செய்து, சாதக வேகத்தில் இந்தக் குரலையும் தாக்கல் செய்துகொண்டு, அதன் குண குணங்களை அலசி ஆராய்ந்து—எல்லாம் ஒரு இமைப் பொழுதில் பாகுபடுத்திவிடுகிறது—

ஆம் இதுவும் சுவாரஸ்யமான சாரீரந்தான். அசாதாரண மில்லாவிட்டாலும் ஆண்மை மிகுந்து கன மிருதுவாய் மழை இருளைப்போல், மனத்தின் ஒரு இன்பமான அச்சத்தை யுறுத்தும் பெண்களுக்கு மிகவும் இச்சையான குரல்—

"ஆமாம் நான் அப்போ என்னத்தைக் கண்டேன்?"

"ஆம், என்னத்தைக் கண்டாய்?—உனக்குப் பணம் ஒன்றுதான் பிரதானமாயிருந்தது. புதுப்புடவை, தைலம், ஸ்நோ, நகை, நட்டு—"

"சுதர்சனா, இந்த சமயத்தில் சொல்லிக் காண்பிக்கவா உம்மைக் கூப்பிட்டு அனுப்பித்தேன்?"

"ரொம்ப பேஷ், பெண்கள் ஸ்பாவமே இப்படித்தான். தங்களிஷ்டப்படி ஆடவும், தங்கள் சிக்கல்களை நிவர்த்திக்கவும் தான் கடவுள் ஆண்களைப் படைத்திருக்கிறார் என்று—பவானி, அந்நாளை நினைத்தால்—

"சுதர்சன், நாம் இப்பொழுது சண்டையா போடப் போகிறோம். அந்த சமயத்தில் ஏமாந்துபோய்விட்டேன். என் வீட்டில் என்னமோ படிக்க வைத்தார்களேயொழிய, கையில் ஒன்றும், ஈரம் இல்லை. எனக்கும் மாற்றாந்தாய்க் கொடுமை பொறுக்காமல், எப்படியாவது வீட்டை விட்டுத் தப்பித்தாலே போதும் என்றாகிவிட்டது. ஆனால் அப்பொழுது இவர் அவ்வளவு மோசமாயில்லையே..."

"என்றைக்குமே அவன் கிறுக்குத்தான்—என்ன செய்கிறான்?" அம்மாதிரி கேட்டால் நான் என்னத்தைச் சொல்ல? "அவருடைய பார்வை எனக்குப் பயமாயிருக்கு.

எங்கேயோ எதையோ பார்த்துக்கொண்டு—நிலைத்த பார்வையேயில்லை தூக்கத்தில் நடக்கிறப்போல—எப்பவும் காக்காய்போல தலையை சாய்த்துக்கொண்டு—இங்கித்து நினைப்பேயில்லாாம ஏற்கனவே பூனைக்கண் அதுவும் இப்போ அதில் காக்காயும் வெளியும் பிடிச்சிருக்கு—எப்பவும் இருட்டிலேயே வந்து, விளக்கைப் போட்டால், சாதாரண மாய் (நாம் ஏதாவது யோசனையாய் வந்து) திடுக்கென, குத்துக்கல் மாதிரி சுவரோரமாய் ஒக்காந்திண்டுருக்கு... எத்தனையோ தடவை நான் அம்மாதிரி வந்து, தூக்கிவாரிப் போட்டு அலறிப் புடைச்சுண்டுருக்கேன். அது குழந்தை யண்டைப் போறப்பெல்லாம் நடுங்குகிறது—எப்பவும் பாய்ச் சல்லேயே பதுங்கிண்டிருக்கு'' அவள் குரல், பயங்கர வெறியும், 'கிறீச்' சென்று உச்சஸ்தாயிக்கு ஏறிக்கொண்டே போயிற்று. ''உஷ் பவானி—யாராவது வரப்போறா—அடக்கிக்கொள் வீண் பிராந்திக்கெல்லாம் மனசில் இடம் கொடுக்காதே—நீ படிச்ச பெண்.'' இல்லை—நான்... பொம்மனாட்டி— (அவள் தன் வசத்திலில்லை. அவள் போடும் கூச்சலில் கீழிருந்து யாராவது வராமல் இருக் கணுமே) என்னால் இனிமேல் ஸஹிக்க முடியாது... ஒன்னு என்னை அழைச்சுண்டு போயிடு—இல்லாட்டா இங்கே ஏதாவது நடந்துடும்—தூக்குப்—''

'பளீர்' என்று அவள் கன்னத்தில் அவன் அறைந்த அறையில் கூடம் அதிர்ந்தது. அவள் வெறியும் தணிந்தது. கூச்சலும் சட்டென்று அடங்கியது. தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள்.

என் காதில் சமுத்திரம் இறைந்தது. மண்டை திகு திகு வென்று எரிந்தது.

நான் அவ்விடம் விட்டு அகன்றேன்.

இனி என்ன செய்வது?

என் பவுரஷம் எல்லாம் எங்கே போயிற்று. ஒரு காரணமு மில்லாமல் என்னைக் காட்டிக் கொடுத்த அவள் பின்

சென்று அவள் மயிரைப் பிடித்து இழுத்து, அவள் முகத்தை நிமிர்த்தி, குரல் வளையில் கையை தைத்து அழுத்தி, நாவல் பழம் போன்ற அவள் கண்கள் பிதுங்குவதை—

''சீ, இதென்ன, அவள் சந்தேகப்படுவதே போல், எனக்கு நிஜமாகவே பைத்தியம் பிடித்துவிட்டதா?''

மறுபடியும் அந்த 'ஜோ' சத்தம்—என் எண்ணங்களுடன் கலந்து, நினைவின் ஓட்டத்தையே கலக்குகிறது.

—இல்லை அவளைக் கொல்வதில் என்ன பயன்? என்ன நியாயமுண்டு?—நீ அவளை மணந்தாயா—அல்லது அவளிடம் பரிணமிக்கும் இனிய நாதங்களை சதா அவளிடமிருந்து பருகுவதற்கே மணந்தாயா?—நாத சோதனையின் தத்துவத்தையும் ஸ்திரீ புருஷ வாஞ்சையையும் ஒன்றாய்க் குழப்பி உன்னையே நீ ஏமாற்றிக் கொள்ளாதே—

அவ்விரைச்சலில் எனக்கு யோசனையே ஓடமாட்டேன் என்கிறது. அவள் இனி உன்னிடம் இருக்கமாட்டாள் அவளில்லாமல், நீ இருப்பாயா?—'

''ஜோ—ஓ—ஓ—!—''

எனக்கு மூச்சுத் திணறிற்று. ஜன்னலைத் திறந்தேன். மையிருள், உலகத்தை மலைப்பாம்பைப் போல் விழுங்கியிருந்தது. குளுகுளுவென்று, சுழல் காற்று, முகத்திலும், கண் ரப்பையிலும் மோதியது. சமுத்திரக் காற்று—அலைகள் ஓயாது, கரையில் மோதி மோதி அலறுகின்றன.

'ஜோ—ஓ—ஓ—ஒ''—ஓசையின் முடிவு. ஓங்காரத்தின் குழலோசை, அலைகளைத தாண்டினால்—அப்பால், நாதாந்த மோனம்—நிர்ச்சலம், நிம்மதி—

ஆம், இதுதான் வழி—அதுவும் ஒரே வழிதான்—எனக்கு அலுப்பாயிருக்கிறது—ரொம்பவும் அலுப்பா-யிரு-க்கி-றது.

அலை ஓய்வது எப்போ?-நான் நீந்தி அக்கரை போவது எப்போ?—அலை ஓயும்வரை நான் காத்திருக்க முடியுமா?

# புலி ஆடு

வெள்ளிக்கிழமை மத்தியானம் மணி சுமார் மூன்றிருக்கும்.

வீட்டு ரேழியின் ஒரு ஓரத்தில் ஒரு யந்திரம். மற்றொரு மூலையில் கதவோரத்தில் துடைப்பம் மறைவாய் வைக்கப்பட்டிருக்கிறது. இன்னொரு மூலையில் உரல். உலக்கையைச் சுவரில் சாத்தியிருக்கிறது. கடப்பாரை ஒன்று உரலின் பக்கத்தில் கிடக்கிறது.

ரேழியின் நடுவில் இரண்டு பேர் புலியாடு ஆட்டம் ஆடிக்கொண்டிருந்தார்கள்.

அவளுக்கு சுமார் பதினைந்து அல்லது பதினாறு வயது தானிருக்கும். வெள்ளிக்கிழமையாதலால், எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து, உலருவதற்காக மயிரை ஆற்றி விட்டிருந்தாள். இப்பொழுது அது நன்றாய், அடர்த்தியாய், அவள் தோள், முதுகு, கழுத்து எங்கும் மேகம் படர்ந்த மாதிரி 'பிசுபிசு' வென்று படர்ந்திருந்தது.

அப்படி ஒன்றும் அதிகச் சிகப்பு இல்லை. கறுப்பும் இல்லை. மாநிறம். பெரிய அழகு என்று சொல்லுவதற்கில்லை. ஆனால் முகத்தில் மாத்திரம் ஒரு தனி குறுகுறுப்பு. அதுவும் இன்றைக்கு மஞ்சள் அவள் முகத்தில் நன்றாய்ப் பற்றியிருந்தது. சரியாய் ஒரு தம்பிடி அகலத்திற்கு அவள் இட்டுக்கொண்டிருந்த குங்குமப் பொட்டு, அவள் முக வசீகரத்தை எடுத்துக் காட்டிற்று.

வெங்காயக் கலரில் ஓரத்தில் பச்சைக் கரை போட்ட புடவை கட்டிக்கொண்டிருந்தாள். கழுத்தில் மாங்கல்யச் சரட்டையும் ஒரு பவழ மாலையையும் தவிர வேறொரு நகையும் இல்லை. அவளால் ஒரு நொடிகூடச் சும்மா அசையாமல் இருக்க முடியவில்லை. அப்படியும் இப்படியும் நகருவதினால், அவள் கால் காப்புகள் ஒன்றோடொன்று உராய்ந்தும் மெட்டி கட்டாந்தரையில் தேய்ந்தும், உண்டாக்கும் சப்தம் ரொம்பவும் இனிமையாகயிருந்தது.

அவள் கணவன் ஒரே அட்டைக் கரி. பளபளவென்று பாலிஷ் போட்ட கருங்காலி மரத்தின் கறுப்பு. அப்பளாக் குடுமி, ஜம்மென்று நன்றாய்க் கட்டுவிட்ட தேகம். கரணை கரணையாய் நரம்புகள் விம்மிப் புடைத்து எழும்பி திடகாத்திரத்தைக் காட்டின. புகையிலையை ஒரு பக்கம் அடக்கியிருந்ததினால், ஒரு கன்னம் ஓரேயடியாய் முண்டிக்கொண்டிருந்தது. இடுப்பில் சுமார் ஒரு முழ அகலமேயுள்ள சிகப்புத் துண்டு ஒன்றைக் கட்டியிருந்தான். அவன் கண்டச்சதையில் முளைத்திருந்த சிறுமயிர்கள் சுருண்டுகொண்டிருந்தது கூட நன்றாய்த் தெரிந்தது. அவன் முகத்தைப் பார்த்தால், தீனியை நன்றாய் வயிறு புடைக்கத் தின்றுவிட்டு, ஆனந்தமாய் அரைக்கண் மூடியவண்ணம், அசைபோட்டுக் கொண்டிருக்கும் எருமை மாட்டின் ஞாபகம் வந்தது. அதுவும், இப்பொழுது அவன் முகத்தில் அசட்டுக்களை இன்னும் அதிகம் சொட்டிற்று.

ஏனென்றால், அவள் நாலு ஆடுகள் வெட்டக் கொடுப்பதுபோல் கொடுத்துவிட்டு, பாக்கி எட்டு ஆடுகளைக் கொண்டு அவன் மூன்று புலிகளையும் மடக்கிவிட்டாள். ஆகையால்தான் அவன் இப்பொழுது திறுதிறுவென்று விழித்துக்கொண்டிருந்தான். அவளுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

மிகவும் கஷ்டப்பட்டு, இரண்டு கைகளையும் ஊன்றிக் கொண்டு தலையைக் குனிந்து அவன் முகத்தைப் பார்த்து விட்டுப் ''பக்''கென்று சிரித்தாள். வேணுமென்று குறும்புத்

தனமாய்க் கொக்கரித்தாள். அவளுக்கு எவ்வளவுக்கெவ் வளவு ஆனந்தம் பொங்கிற்றோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் முகத்தில் விகாரம் அதிகரித்தது. திரும்பித் திரும்பி தன் பிடரியையும் முகவாய்க் கட்டையையும் 'பரபர' வென்று தேய்த்து திண்டாடிக் கொண்டிருந்தான். இரண்டொரு நிமிஷம் கழிந்தது. அவள் நன்றாகக் கட்டானை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தவள், திடீரென்று கையை உதறிக் கொண்டு தலையைத் திருப்பித் திருப்பி ஆட்டிச் சிரித்தாள்.

"என்னா...?" என்று அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு கேட்டான். தலையை ஒரு பக்கம் சாய்த்துக் கொண்டு வெயிலில் கூசுவதுபோல, கண்களை இடுக்கிக் கொண்டு வாயை ஒரு பக்கமாய்க் கோணிக் கோண்டு, அவன் கேட்கும்போதே, அவன் மட்டித்தனம் வெட்ட வெளிச்ச மாய்த் தெரிந்தது.

"என்னாவா? இன்னுங்கூட சமாளிச்சுக்கலாம்! வழி யிருக்கு! நகத்தரத்துக்கு வழியிருக்கு" என்றாள்.

நகர்த்துவதற்கு வழியா? ஆட்டத்தை ஜெயிப்பதற்கு வழியா? மறுபடியும் தலையைக் கவிழ்ந்து கவனித்துப் பார்த்தும், அவனுக்கு ஒன்றும் புலப்படவில்லை.

"நகத்தரத்துக்கும் இடம் இருக்குன்னா சொல்றே?" என்று சர்வ சாதாரணமாய் அலக்ஷியமாய்க் கேட்பதுபோல் கேட்டான்.

"ஆமா..."

"மெய்யாவா?"

"உனக்குத் தெரியல்லே?" என்றாள் அவள் ஆச்சரியத் துடன். "ஓ, தெரியுது..., சும்மாக் கேட்டேன்..." என்று அவசரமாய்ப் பதிலளித்துவிட்டு, முகத்தை ஒரு பக்கமாய்த் திருப்பிக்கொண்டு, ஆட்டத்தின்மேல் ஊக்கமாய் இருப்பது போல் பாசாங்கு பண்ணினான்.

இரண்டுங்கெட்டானாய் அவன் மாட்டிக்கொண்டு விட்டான். திருப்பித் திருப்பி, "புத்தியைச் செருப்பாலே அடிக்கணும்" என்று தன்னைத்தானே கடிந்துகொண்டான். அவனுக்குள், தான் இவ்வாட்டத்தில் மிகவும் கெட்டிக்காரன் என்று அபிப்பிராயம். அவனேதான் அவளை ஆட்டம் போடக் கூப்பிட்டது. முதலில் ஆடுகளைத்தான் விளையாடுவதாகச் சொன்னான். ஆனால் அவள் ஒரே பிடியாய், தான் ஆடாயிருக்கணும் என்று குதித்தாள். கடைசியில் புலி ஆடுவதிலேயே, அவன் பாடு தகராறாய்விட்டது.

திருப்பித் திருப்பி கடைக் கண்ணால் அவளைத் திருட்டுப் பார்வை பார்த்து விழித்துக் கொண்டிருந்தான்.

"தே, இன்னும் எம்மாத்தம் நாழியாக்கப் போறே? இன்னும் பல்லே கழுவி ஆவல்லே, செத்தை வாரியாவல்லே, பொழுதோ சாஞ்சூட்டுது, சாணி தெளிக்கணும், மந்தை வர நேரமாச்சு, மத்தவங்களுக்கெல்லாம் வேறே வேலேயில்லைபோலே இருக்குது, நீ குந்திகிட்டு யோசனை பண்றத்தே பாத்தா...?" என்று சிரித்தவண்ணம் அதட்டினாள்.

அவனுக்கு உடம்பெல்லாம் முள் தைப்பதுபோல் இருந்தது. "கொழுப்பு கொஞ்சமாயில்லை குட்டிக்கு!" என்று பல்லைக் கடித்தான். ஆனால் அவன் என்ன முக்குச் சக்கரம் போட்டுப் பார்த்தும், அவனுக்கு ஒரு வழியும் புலப்படவில்லை. ஆட்டத்தில் தோற்றுவிட்டதாக அவளிடம் ஒப்புக்கொள்வது கனவிலும் நினைக்க முடியாத விஷயம். ஏனெனில் அவன் ஆண்மகன்! ஆகையால் ஆடும் வழியை, நயமாக அவளிடமிருந்து தெரிந்துகொள்வதுதான் சரியான வழி.

"ஊஹூம், பிரயோசனமில்லை."

தலையை உதறிக்கொண்டு நிமிர்ந்தான். ஏதோ தனக்கு சிரத்தையில்லாதது போலவும், அவளுக்குத் தயவு பண்ணு

வதுபோலவும், "எங்கே பார்க்கலாம்! நீ எப்படி ஆடறேன்னு புலியை நகத்திக் காமி? உனக்கு ஆடத் தெரியுதான்னு பார்க்கிறேன்!" என்று வெகு அலக்ஷியமாகச் சொன்னான்.

ஆனால் அவளா ஏமாறுகிறவள்? "இல்லேங்க, பரவா யிலலே, எனக்கு ஆடறத்துக்கு நல்லாத் தெரியுங்க. ஓங்க ளுக்கு ஆடிக் காண்பிச்சு நான் கத்துக்க வேண்டியதில் லேங்க..." என்று வெகு மரியாதையாய்ப் பதிலளித்து விட்டாள்.

மறுபடியும் யோசனையில் ஆழ்ந்தான். அவன் எண்ணம் பலிக்கவில்லையென்று கண்டதும், அவனுக்குக் குழப்பமும் லஜ்ஜையும் அதிகமாய்விட்டது. அத்துடன் "அசடுக்கு அகங்காரம்" என்கிற மாதிரி, கோபமும் ஜனிக்க ஆரம்பித்து விட்டது. ஆனால் அக்கோபத்தின் காரணம், அல்லது காரணமின்மை இரண்டும், அவனுக்கு விளங்கவில்லை. உடம்பில்கூட குறுகுறுவென்று ஒரு உணர்ச்சி ஆரம்பித்து விட்டது. உள்ளே, எலி பிராண்டுவதுபோல் இருந்தது.

"புலியை நகர்த்தறது எப்படி?" அவன் குரல் முன் போல் சாதுவாயில்லாமல், முரட்டுத்தனமாய்விட்டது.

"இரு அவசரப்படாதே..." அவள் வெகு சாவதான மாய் குறுக்கு விசாரணை செய்யும் வக்கீல் மாதிரி கண்டிப் பாய், "அப்படியானால், நீ தோத்துப் பூட்டேன்னு ஒப்புக் கறயா?"

அவனுக்கு வேதனை அதிகமாய்விட்டது. தாங்கவே முடியவில்லை. "என்ன நான் சொல்றது ஒனக்குக் கேக் கல்லே? புலியை எப்படி நகத்தறது?"

அவன் குரலின் கர்ண கடூரமான த்வனி அப்பொழுது தான் அவள் உள்ளத்தில் தைத்தது. அவளுக்கு உண்டான கோபத்தில் உடம்பு சிலிர்த்தது. "ஓஹோ அப்படியா சமாசாரம்?"

''முடியாது?''

கணீரென்று அவன் குரல் வெண்கலம் மாதிரி, சுத்தமாய் அவ்விடம் முழுவதும் ஒலித்தது.

''என்ன!''

அவன் அப்படியே அயர்ந்துவிட்டான். மூலையில் சாத்தியிருந்த உலக்கை, தானாகவே உயிர்பெற்று தத்தித் தத்தி வந்து, அவன் மண்டையில் இடித்திருந்தால், அவனுக்கு அவ்வளவு திக்பிரமை ஏற்பட்டிருக்காது. திறந்த வாய் மூடவில்லை. கடைவாய் வழியாகப் புகையிலைச் சாறு வடிந்து தாடி மயிர்கள் முனையில் இரத்தத் துளிகள் போல் நின்றது.

அவள் அவனைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்கவில்லை கோபமாய்த் தலையை ஒரு வெட்டு வெட்டி மேலாக்கைச் சரிப்படுத்திக்கொண்டாள்.

அவன் அவளை ஒருமுறை, உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரையில் நெற்றியிலிருக்கும் குங்குமப்பொட்டு, மூக்குத்தியின் வெள்ளைக்கல், கழுத்துப் பவழ மாலை, அவளுடைய மெல்லிய மேலாக்கின் வழியாகத் தெரியும் வெள்ளை ரவிக்கையின் முடிச்சு எல்லாவற்றையும் ஏற இறங்கப் பார்த்தான்.

''காண்பிக்க மாட்டையே?''

''முடியா...''

அவள் பேசி முடியுமுன், அவள் வாயின் பேரிலேயே குத்து விழுந்துவிட்டது.

அவள்கூட அதை எதிர்பார்க்கவில்லை.

மறுபடியும் அவன் கையை ஓங்கினான். கருமான் பட்டரைச் சுத்தி இறங்குவதுபோல் அது இறங்கியது. அவள் தலையைக் குனிந்து, கைகளை நீட்டித் தடுத்தாள். குறி தப்பி, அவள் பிடரியில் அந்த அடி விழுந்தது. அவன் கையில்

ஒரு வெள்ளி மோதிரம் அணிந்திருந்தான். அவளுடைய ரவிக்கைத்துணி ஸன்னமாயிருந்ததில், பர்ரென்று கிழிந்து விட்டது. அப்படியே மோதிரம், அவள் முதுகில் கீறிக் கொண்டே இறங்கிவிட்டது.

எப்பொழுது முதலடி அடித்தானோ, அத்துடன் அவனால் நிறுத்த முடியவில்லை. அவனுக்கு இரத்த வெறி மாதிரி பிடித்துவிட்டது. அவன் கண்கள் கிட்டத்தட்டப் பைத்தியக்காரன் கண்கள் போலவே ஜ்வலிக்க ஆரம்பித்து விட்டன.

அடிமேல் அடி! குத்தின்மேல் குத்து!

அவள் மூச்சிற்கே திக்குமுக்காடினாள். அவள் மனதில் உண்டான பயங்கரத்தில் அடிகளின் வலிகூடத் தெரிய வில்லை. பிடித்து அமுக்குவதுபோல் இருந்தது. ஐயோ! கொஞ்சம் மூச்சு அகப்பட்டால் போதும்! ஒரு மூச்சு! ஓரே மூச்சு! ஆனால் அதற்குள் ஒரு குத்து!

"இதோ காம்பிக்கிறேன்!"

அப்பா! கடைசியில் வாய் திறந்து சொல்ல முடிந்தது! வாயிலிருந்த ரத்தத்தை வெளியில் துப்பினாள்.

அவள் குரலின் சத்தத்தைக் கேட்டதும், ஓங்கிய கை அப்படியே அந்தரத்தில் நின்றது.

"ஆ!"

சில வினாடிகள் அப்படியே ஓங்கிய கையுடன், வெறி பிடித்த கண்களுடன் அவன் அவளைச் செய்திருக்கும் அலங் கோலத்தைக் கண்டு ஆனந்திப்பதுபோல் வெறித்த வண்ணம் இருந்தான்.

அவளைப் பார்ப்பதற்கு மகா கண்ணறாவியாக யிருந்தது. சற்றுநேரத்திற்கு முன்னால், சுத்தமாய்ச் சிக்கு பிரித்து ஆற்றியிருந்த மயிர், அலங்கோலமாய், முகத்திலும் விழுந்திருந்தது. குங்குமத் திலகம் சிதறி அழிந்திருந்தது.

வாயிலும் மூக்கிலும் ரத்தம். கீழ் உதடு அப்படியே அறுந்து விட்டாற்போல் தொங்கிற்று. மார்புத் துணி விலகி... பரிதாபம்! அவன் கை ஏர் பிடித்த கையல்லவா?

தான் இன்னது செய்தாளென்று அவளுக்கே தெரிய வில்லை. ஆத்திரத்தால் இழுக்கப்பட்டதுபோல், அவள் கை உயிரற்று, புலியை நகர்த்திக் காண்பித்தது.

''ஆஹா!''

அவன் சந்தோஷமும், அவன் குரலும், அவன் புன்னகை யும் ஸ்வாபமாகவேயில்லை. கண்களில் வெறி அதிக மாயிற்று.

நாலு ஆடுகளை வெட்டினான்.

''ஆ! பாத்தையா, இனிமேல் ஆட்டம் என்னுடையது தான், பாத்தையா?''

ஒரு வினாடி திக்பிரமை கொண்ட அவள் கண்கள், அவன் கண்களைச் சந்தித்தன. அவள் மூச்சு அப்படியே, ஒரே இழுப்பாய் கேவிக்கொண்டே போயிற்று. அவ்வளவு தான். முந்தானையை வாயின்மேல் போட்டுக்கொண்டு பீறிட்டு வந்த அழுகையை அடக்கிக்கொண்டு சமையற் கட்டிற்கு ஓடினாள்.

அவனோ பித்துப் பிடித்தவன்போல், அங்கேயே உட் கார்ந்துகொண்டு ''இனிமே ஆட்டம் என்னோடதுதான், ஆட்டம் என்னோடதுதான்!'' என்று திருப்பித் திருப்பி அர்த்தமில்லாமல் சொல்லிக்கொண்டிருந்தான்.

ஆம், ஆட்டத்தை ஜெயித்துவிட்டான்! ஆனால், அவளை...?

# ஜ்வாலை

கீழ்க்கண்ட எழுத்துப் பிரதி, ஏதோ இன்னதென்று சொல்ல முடியாத மனோவியாதியாலோ, தேக வியாதி யினாலோ பீடிக்கப்பட்ட இறந்த ஒரு குடும்ப ஸ்திரீயின் தலையணையின் கீழிருந்து கண்டெடுக்கப்பட்டது:

**சித்திரை 2:** ஆய்விட்டது இங்கு வந்து பதினைந்து நாட்களுக்குமேல், ஒரு சுகமும் காணோம். எங்கேயோ கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரியிருக்கிறது. எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ஆகையினால்தான் எதையாவது எழுதியாவது பொழுதைத் தொலைக்கா மென்று எழுத ஆரம்பித்திருக்கிறேன்:

என்னத்தைப் பற்றி எழுதறது என்றுதான் தெரிய வில்லை. முதலில் எழுதறதுக்கு என்ன இருக்கு? ஒன்று குடி யிருக்கும் இடம் சுவாரஸ்யமாய் இருக்கவேண்டும், இல்லா விட்டால் மனுஷாளாவது சுவாரஸ்யமாய் இருக்கவேண்டும். இரண்டுமில்லை. இடம் என்னவோ பாக்கறத்துக்கு லக்ஷணமா, தன்னந்தனியா, பங்களா மாதிரி இருக்கே யொழிய, மருந்துக்குக்கூட ஒரு மாமரம் கிடையாது. எங்கே பார்த்தாலும் ஒரே புளியந்தோப்பாயிருக்கு. இது கந்தக பூமியாம். வெயில் தாங்க முடியல்லே. ஒரே அனல் காற்று. மத்தியானம், சரியா உச்சி வேளைக்குத் தலையை 'கிர்' ரென்று சுற்றுகிறது. நல்ல நாளிலேயே சொல்ல வேண்டிய தில்லை. அதுவும் இங்கே வந்த பதினைஞ்சு நாளைக்குள்ளே உருக்குலைஞ்சுடுத்து. எனக்கே நன்னாத் தெரியறது...

இங்கேருந்து சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலே, ஒரு வாய்க்கால் ஓடறதாம். வருஷத்திலே ஆறு மாசம் வத்திக் கிடக்குமாம். என்ன வாய்க்கால் வேண்டியிருக்கோ தெரியல்லே.

ஜன்னல்லேருந்து பார்த்தா கோவில் ஸ்தூபி ஒன்று தெரியறது. செம்போ என்னமோ தெரியல்லே திட்டு திட்டா, கன்னங் கரேலுன்னு கறுத்திருக்கு. அம்பாள் கோவிலாம். வாசக்கூட்டி ஏதோ பேர் சொன்னா. வாயிலேகூட நுழையல்லே. மறந்துடுத்து. ரொம்ப சக்தி ஜாஸ்தியாம். அவளுடைய சக்தியெல்லாம் மந்தரப் பிரயோகம் பண்ணி, சக்கரம் போட்டு, அதை அதிலே அடைச்சு வெச்சிருக்காளாம்.

இடத்தே விஸ்தரிச்சாச்சு. மனுஷாளோ சொல்ல வேண்டியதில்லை. இவா ஆனாலும் இப்படி இருப்பான்னு நான் கனவுலேகூட நினைக்கல்லே...

பொழுது விடிஞ்சா கேஸ், பொழுது போனா கேஸ், எப்போவானாலும் கேஸா? நானும் இதுக்கூன்னு பரீக்ஷையா இரண்டுங்கட்டான் சமயமெல்லாம் அவா ரூம் பக்கமாப் போய்ப் பார்க்கறது. எப்பொ போனாலும் சரி, ‘‘கக்ஷி’’, ‘‘மராமத்து’’, ‘‘பட்டா’’, ‘‘ஜப்தி’’ன்னு மாத்தி மாத்தி இதே பேச்சாயிருக்கும். சரியா கார்த்தாலே ஒம்பது மணி அடிச்சுதோயில்லையோ பலகாயேப் போட்டுண்டு ‘சாதம் போடு’ இங்கறாளே, அதோடு சரி. அப்புறம் கோர்ட்டுக்குப் போயிடரா. மறுபடியும் சாயந்திரம் ஏழு மணி. எட்டு மணிக்குத்தான் ஆசாமியைப் பார்க்கலாம். அப்போகூட, என்ன, சாப்பிட்டு கையை அலம்பிண்டதும் அலம்பிக் காததுமா, ரூமுக்குப் போயிட வேண்டியதுதான். மானம் வெக்கத்தே விட்டுட்டு நானா ரெண்டு தடவை பேச்சுக் குடுத்துக்கூடப் பார்த்தாச்சு. மசியறதாக் காணோம். இப்படியாப்பட்டவாள்ளாம் என்னத்துக்குக் கலியாணம் பண்ணிக்கறாளோ தெரியல்லே. சமைச்சுப் போடறத்துக்

கும் கண்ட சாமானைக் கண்ட இடத்திலே போட்டுடறாளே, அதைத் திருப்பி எடுத்து வெக்கறதுக்கும்தான்னு நெனைக்கறேன். அவாளுக்குத்தான் கேஸும் பணமும் பொண்டாட்டியாயிடுத்தே? அப்புறம் நம்மை ஏன் லக்ஷியம் பண்றா?

எனக்குப் பொறுக்க முடியல்லே. எத்தனை நாழி படிக்கறது? எத்தனை நாழிதான் தாயக்கட்டான் ஆடறது. எதிர்க்காயேகூட நானே வெச்சிண்டு? சுவாரஸ்யமால்லே. எனக்கு என்னமோ மாதிரியிருக்கு. கஷ்டமா!

என்னமோ ஆரம்பிக்கறப்போ ரொம்ப லக்ஷணமா ஆரம்பிச்சேன், அப்புறம் என்னையும் அறியாமே, அது இப்படிப் போயிடுத்து, தெரியல்லே.

**சித்திரை 12:** இதென்ன, என்ன வந்துடுத்து நேக்குன்னு. தெரியல்லே. நேத்து ராத்திரி மொதக்கொண்டு மனசிலேயும் ஒடம்பிலேயும் ஏதோ ஒருவிதமாயிருக்கு.

நேத்து சாயந்தரம், என்னமோ, ஆத்திலேதான் கொட்டு கொட்டுன்னு முழிச்சுண்டிருக்கோமேன்னுட்டு, கோவிலுக்குப் போனேன். சாயங்கால வேளை. தீபாராதனை நடக்கற சமயம். நான் கோவிலுக்குள்ளே நொழஞ்சவுடனேயே சின்ன களையவரம் உண்டாச்சு. இங்கேதான் சொல்ல வேண்டியதில்லையே, பேன் நசுக்கினா, உடனே அதைப்பத்திப் பெரிய கூட்டம் போடுமே, அவ்வளவு பட்டிக்காடாயிருக்கு...

திடீர்ன்னு பின்னாலே 'ஙணஙண'ன்னு மணி அடிச்சுண்டே, யாரோ 'வழியே விடு, வழியே விடு'ன்னு அதட்டிண்டே தடதடன்னு வந்தா. நான் ஒதுங்கி, நிமுந்து பார்த்தேன். சடக்குன்னு என்னைப் பார்த்ததும் குருக்கள் மூஞ்சி மாறித்து. என்னையும் கும்பலோடு கும்பலா நினைச்சுண்டுட்டாப்போல இருக்கு. குஞ்சிரிப்பா சிரிச்சுண்டே போயிட்டான்.

உடனே தீபாராதனை ஆரம்பம் ஆயிடுத்து. குருக்களை அப்போதான் நான் சாவகாசமாய்ப் பார்த்தேன். அந்த ஒடம்பு, எப்படித்தான் அந்த மெருகு வந்ததோ தெரியல்லே! செக்கச் செவேலுன்னு நல்ல சிகப்பு. அந்த மயிரும் நன்னா அடர்த்தியா, பட்டுக் குஞ்சம் மாதிரி, சுருட்டை சுருட்டையா, பளபளன்னு காது, புடரி நெத்தி முன்னாடிக்கே எல்லாம் தொங்கறது. "கருகரு"ன்னு தாடி வெச்சிண்டிருக்கான். தீக்ஷையோ என்னமோ தெரியல்லே. மூஞ்சியும், மூக்கும் முழியும் நெத்தியும் அவ்வளவு எடுப்பா நான் எங்கேயும் பார்த்ததில்லே. அப்பா புருவம் எவ்வளவு அடர்த்தி. என்னமோ இரண்டு வில்லை, நன்னா வளைச்சு விட்டாப் போல இருக்கு! அவன் ஒடம்பசையாமே ஒவ்வொரு தீபமா எடுத்து அம்மனுக்குக் காட்றபோது எனக்கு என்னமோ கல்பூரம் கொழுந்துவிட்டு அசையாமே அலுங்காமே எரியறதே, அந்த ஞாபகம் வந்துடுத்து. தம்பிகூட பம்பரத்தே விட்டுட்டு, 'அக்கா பம்பரம் தூங்கறது பார் அக்கா!' அப்படிம்பன்! அதுமாதிரி, உடம்பையும் மனசையும் அப்படி இப்படி போகவொட்டாமல் வசப்படுத்தி ஒரே நிலையா... பார்த்தா, என்னமோ ஒருவிதமான பீதிகூட உண்டாகிறது.

என் மனஸுக்குத்தான் அப்படித் தோணித்தோ என்னமோ தெரியல்லே...கும்பவிளக்கு, ரதவிளக்கு, நக்ஷத்ர விளக்கு, இதெல்லாம் ஒவ்வொண்ணா எடுத்துக் காட்றபோது, என் பேரத்தான் 'விலாஸினி'ன்னு காதிலே எழுதர மாதிரி இருந்தது.

கடைசியில் எல்லாருக்கும் குங்குமம் குடுத்தான். என் கிட்ட வரபோது, ஒரு ரெண்டு விநாடி அப்படியே அசையாமே நின்னான். அந்த ரெண்டு விநாடியும் ரெண்டு யுகமாயிருந்தது. எனக்கு ஒண்ணுமே தோணல்லே. தலையேக் குனிஞ்சுப்பிட்டேன். ஆனா முடியல்லே. ஏதோ பிடிச்சு இழுக்கிற மாதிரியிருந்தது. மறுபடியும் தலைநிமிர்ந்து

போச்சு. அப்பா! அவன் ரெண்டு கண்ணும் ஊசிமுனை மாதிரி பளபளன்னு எப்படி ஜொலிச்சுது! என்னை அவன் பார்க்கற மாதிரியே இல்லை. ஏதோ எனக்குத் தெரியாமே, எனக்குள்ளேயிருக்கும் எதையோ அவன் வெட்ட வெளிச்சமாப் பார்க்கற மாதிரியிருந்தது! என்னையே மறந்துட்டேன். அப்படி எத்தனை நாழியிருந்தேனோ தெரியாது. குஞ்சிரிப்பா சிரிச்சுட்டு, குங்குமத்தே குடுத்துட்டுப் போயிட்டான், நானும் சரசரன்னு ஆத்துக்கு வந்துட்டேன்.

அப்போ மொதக் கொண்டு மனசு சரியில்லே. அவன் சிரிப்பும், அவன் பார்த்த பார்வையும், அப்படியே முன்னாலே வந்து நிக்கறது. ஏதாவது புஸ்தகத்தே எடுத்துப் பார்க்கலாம்னா, நடுவிலே வந்து மறைச்சிண்டு நிக்கிறது...

**சித்திரை 13:** நேத்திக்கு ஒண்ணு நடந்துடுத்து, நான் என்ன செய்யப்போறேன்? பார்க்கறவா என்ன சொல்லுவா? ஆனா என் மனசு ஒரே கொந்தளிப்பிலே நிற்கிறது.

நேத்து சாயந்தரம் இத்தனை நாழிதான் இருக்கும், நன்னா இருட்டுக் கவிஞ்சுபோச்சு. கையெழுத்துக்கூட மறைஞ்சுடுத்து. நக்ஷத்ரம், ஒவ்வொண்ணா, ''மினுக்மினுக்'' குன்னு வந்துடுத்து. நான் ஜன்னலண்டை நின்னுண்டு ஏதோ குருட்டு யோசனை பண்ணிண்டு ஆகாசத்தே பார்த்துண்டு இருந்தேன்.

திடீர்ன்னு யாரோ செவரேறி 'பொத்'துன்னு குதிக்கர சத்தம் கேட்குது. அடுத்த நிமிஷம் அவன் என் முன்னாலே வந்து நின்னான்.

எனக்கு 'திடுக்'குனு தூக்கிவாரிப் போட்டது. அவன் தோள்பட்டையிலே தொங்கிண்டிருந்த நைவேத்ய மூட்டையும், அவன் சுருட்டை மயிரும், அவன் தாடியும், அவன் சிலையடிச்சு வச்சாப்போல அசையாமே, அலுங்காமே, கற்பூரக் கொழுந்து மாதிரி நிக்கறதும்,

இதுமாதிரி எத்தனை நாழி நின்னுண்டிருந்தோமோ தெரியாது, என் மனஸிலே எண்ணாத எண்ணமெல்லாம் தோணித்தோணி மறைஞ்சுது. இருந்தாப்போல இருந்து, என் பக்கமா மெள்ள வர ஆரம்பிச்சான். எனக்கு அப்படியே அடிவயத்தே சுருட்டிண்டுது. "ஐயையோ!" என்றேன். ஆனால் நான் சொன்னது எனக்குத்தான் கேட்டிருக்கும். மத்தவாளுக்குக் கேட்டிருக்குமோ கேட்டிருக்காதோ, என் தொண்டையெல்லாம் அடைச்சுப் போச்சு.

சிரிச்சுண்டே வந்தான். திடீர்னு கையைப் பிடிச்சான். 'குப்'னு நேக்கு வேர்வை விட்டுப்போச்சு. 'அடப்பாவி!' இன்னுண்டு கையை ஒதறினேன். அவன் விடவே இல்லை. இன்னும் நன்னா அழுத்தமாப் பிடிச்சுண்டுட்டான்.

"நீ சொன்னா நான் நம்புவேனா என்ன? உன் கண்ணு தான் தனியா பேசறதே!" இன்னுண்டே சிரிச்சான். எனக்கு ஒடம்பு வெடவெடன்னு ஒதற ஆரம்பிச்சுடுத்து.

"விலாஸினீ!" இன்னு உள்ளேருந்து குரல் கேட்டுது. நான் என்னத்தே பண்ணுவேன்?

"அவா வந்துட்டாடா, விட்டுட்றா, விட்டுட்றா!" இன்னு கெஞ்சினேன். அவன் கொஞ்சங்கூட சட்டையே பண்ணல்லே.

"நாளைக்கு இத்தனை நேரத்துக்கு வருவேன்" இன்னான்.

"விலாஸினீ!"

"ஐயையோ!"ன்னுண்டு கையை ஒதறினேன்.

"சொன்னாத்தான் விடுவேன்!" இன்னு கையைப் பிசைஞ்சான். தப்பிச்சாப் போரும்னு ஆயிடுத்து.

"ஆகட்டும்" இன்னுப்பட்டேன்.

உடனே கையை விட்டுவிட்டு, திடீர்னு கையை நீட்டி கழுத்தை வளைச்சுப் பிடிச்சு இழுத்து வாயிலே ஒரு முத்தம் குடுத்துட்டு, மின்னலா மறைஞ்சுட்டான். அப்படியே, பழுக்கப் பழுக்க நெருப்பை வாயிலே வெச்சமாதிரி இருந்தது. மூர்ச்சை போட்டமாதிரி ஆயிடுத்து.

எப்படியோ சமாளிச்சுண்டு உள்ளே போனேன். பலகையேப் போட்டுண்டு அவர் சாப்பட்றத்துக்கு ஒக்காந்துண்டிருந்தார். அவர்கூட என்னிக்கும் ஒண்ணும் கேக்காதவர், என் மூஞ்சியேப் பாத்துட்டு ''என்ன உடம்பு உனக்கு?'ன்னு கேட்டுட்டார்.

''ஒண்ணுமில்லே''ன்னு ஏதோ சொல்லிப்புட்டேன். வரவர, ஏற்கனவே உடம்பு பூஞ்சையொன்னோ, ஒண்ணுமே தாங்கரதில்லே.

ஐயையோ, நான் என்னத்தே பண்ணுவேன், இவர்கூட என்னை இன்னும் சரியாத் தொட்டதில்லே, இந்தப் பேர் ஊர் தெரியாதவன் இவன் என்னை இப்படிப் பண்ணிட்டானே!

அதுக்குத் தகுந்தமாதிரி, என் மனஸிலேயும் ஒரு தனித் தாண்டவம் ஆட்றதே! 'நாளைக்கு வா'ன்னுகூட அவனுக்கு இடத்தேக் குடுத்தூட்டேனே!

**சித்திரை 14:** அம்மா! நான் என்னத்தே சொல்லப் போறேன்? நான் நேத்திக்கிருந்த மனஸு சந்தோஷமென்ன, இப்போ இருக்கிறது என்ன? படுத்த படுக்கையாய் இருக்கேன். தலையிலே ஐஸ் வெச்சிருக்கு! அம்மாடி, என்னைத் தேவிகூட கைவிட்டுட்டாளே! நான் என்ன செய்வேன்! தெய்வத் துணையே இல்லாட்டா நான் எங்கே போவேன்?

நேத்திக்கி எவ்வளவோ என் மனஸிலே வளைச்சு வளைச்சு புத்தி சொல்லிண்டுங்கூட, சரியா அவன் சொன்ன வேளைக்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னாலேயே ஜன்ன

லண்டை வந்து நின்னுண்டுட்டேன். என்னாலே சாத்தியப் படலெ. ரொம்ப நாழியாகக் காத்துண்டு இருந்தேன். அவா கூட வந்து சாப்பிட்டுட்டு ஆபீஸ் ரூமுக்கும் போயிட்டா. அவன் வரல்லே. திடீர்னு வலக்கண்ணும் வலது தோளும் துடிச்சுது. அப்பறம் எனக்கு இருப்பே கொள்ளலே. ''கோவிலுக்குப் போறேன்''னு, தாவாரத்திலே இருந்த படியே அவர்கிட்டச் சொல்லிண்டு, நான் கோவிலுக்கு ஓடினேன்.

நான் உள்ளே நுழையரத்துக்குச் சரியா, திரையை திடீர்னு விலக்கி கற்பூர ஹாரத்தி காண்பிச்சான். பளிச் சுன்னு ஒரே ஜகஜ்ஜோதியா அம்பாள் மின்னினாப்போலே இருந்தது. எனக்கு அப்படியே மயிர் சிலிர்த்துப்போச்சு. அவன் திடீர்னு தாம்பாளத்தே கீழே போட்டுட்டு, 'ஹா!' கர்ஜித்துண்டு ஆட ஆரம்பிச்சுட்டான். ஆவேசம் வந்து டுத்து, கையும் காலும் பறக்கறது. மூஞ்சி ஒரே ரத்தச் சிகப்பா போயிடுத்து. மூஞ்சியிலே ஒரு தனி தேஜஸ் வந்து டுத்து! நன்னா அரை அங்குல தடுமனுக்கு இருந்த திரையை அனாயாசமா நார்மாதிரி கிழிச்சிப்பிட்டான். ஒரே ருத்தரா காரமா எல்லாத்தையும் த்வம்ஸம் பண்றமாதிரிக் கிளம் பிட்டான். நாலுபேராச் சேர்ந்து கட்டிப் பிடிச்சும் போறல்லே. அப்பறம் யாரோ, நன்னா ஒரு அரையணா கல்பூரம் இருக்கும் ஏத்திண்டு வந்து காண்பிச்சா. அதை அப்படியே முழுங்கிட்டான். அப்பவே ஆவேசம் தணிஞ்சு போச்சு. உடனே களை போட்டுத்து. உடம்பு மூஞ்சியெல் லாம் ஜலப்பிரளயமாய்க் கொட்டிப்போச்சு. அப்படியே தொவண்டு கீழே விழுந்திட இருந்தான். அதற்குள்ளே ரெண்டுபேர் அணைச்சுண்டா. என்னையறியாமே நானும் பிடிக்க ஓடினேன். அப்போதான் அவன் என்னைப் பார்த் தான். அவன் முகம் தனியா மலர்ந்தது. சிரிச்சான். அம்மா! முத்துக் கோத்தாப்பலே, அவன் பல்லு பளபளன்னு என்னம்மா மின்னித்துடி! அவனைக் கொண்டு போயிட்டா. நானும் ஆத்துக்குத் திரும்பிட்டேன்.

என் மனஸிலே அவன் மூஞ்சி என்னேப் பார்த்ததும் மலர்ந்ததையும், அவன் பிரியமா சிரிச்சதையும் நினைக்க நினைக்க ஆனந்தமாயிருந்தது. சாதம்கூட வேண்டியிருக் கலே. பேசாமே போய்ப் படுத்துண்டுட்டேன். மணி பன் னண்டு ஆனப்பறம்தான் கொஞ்சம் கண் அசந்தேன்.

ஐயோ! ஒரு கனாக் கண்டேன்.

எங்கேயோ இப்டீ போறமாதிரியிருக்கு. எங்கே பார்த் தாலும் வயலும் பச்சைக் கதிருமா ரமணீயமாயிருக்கு. திடீர்னு ஆகாசத்திலே, கருப்பா ஒரு மேகம் கிளம்பி உருண்டு திரண்டு என் முன்னாலே வந்து நின்னுது, கொஞ்சம் உன்னிப்பாப் பார்த்தேன். கோவில்லே பார்த் தேனோ, அப்படியே ஜகதீஸ்வரி வந்து நின்னா. காதுலே குண்டலம்; க்ரீடத்திலே இருக்கிற ரத்தனமெல்லாம் திடு திடுன்னு நெருப்பு எரியறமாதிரி இருந்தது. ஒரு கையிலே சூலம். ஒரு கையிலே கபாலம், காலாலே மகிஷாசூரனை மிதிச்சுண்டு இருந்தா.

என்னேப் பார்த்ததும் அவள் பச்சை முகம் கறுத்தது.

''அடியே! பாபீ!

நான் அப்படியே நடுநடுங்கிப் போயிட்டேன்.

''தாயே! நான் என்ன பண்ணிப்புட்டேன்'' இன்னு அலறினேன்.

''என்னவா பண்ணிப்பிட்டே ஒனக்கு என்ன தைரி யண்டி! கொண்டவனை மறந்துட்டது போறாதூன்னு, ஆ? அதுவும் என் பக்தனை— பச்சைக் குழந்தையை... இன்னு கத்திண்டே கழுத்தை நெறிக்கராப்போல கையை வச்சிண்டு பக்கத்திலே வந்துட்டா.

'க்ரீச்' இன்னு நான் போட்ட சத்தத்துலே, அவாகூட ஆபீஸ் ரூமிலேருந்து அலறிப் புடைச்சுண்டு ஓடிவந்தார். அப்புறம் என்ன நடந்துதோ எனக்கு ஞாபகமில்லே. மறுபடி யும் நினைப்பு வந்தப்போ கட்டில்லே கிடக்கிறேன். தலைல

ஐஸ் வச்சிருக்கு. டாக்டர் பரீக்ஷை பண்ணிப்பிட்டுப் பக்கத்து ரூமுக்குப் போயிருக்கார். இவாளுந் கூடப்போனா என்னமோ, "க்ளைமேட், ஹீட், ஸ்பாயில் ஆயிடுத்து, ஸ்ட்ரோக், டேஞ்சரஸ்"ன்னு ஏதேதோ வார்த்தை கேட்டுது.

இவா மறுபடியும் வந்து ஒக்காந்தபோது, மூஞ்சி மாறியிருந்தது. ஆபீஸ் ரூமுக்குக்கூடப் போகல்லே. பக்கத்திலேயே ஒக்காந்துண்டு என் நெத்திலே கையை வெச்சிண்டிருந்தா. இப்போத்தான் சாப்பிடப் போனா...

பராசக்தி நான் என்ன பண்ணுவேன், நீ கூட என்னை எதிர்த்திண்டா?

**சித்திரை 15:** காலை 8.30. மணி ஊர்லேருந்து அம்மா, அப்பா எல்லாரும் வந்துட்டா. யார் வந்து என்ன?

**ராத்திரி 9.30:** இன்னிக்கி சாயந்தரம் ஒண்ணு கேள்விப்பட்டேன். அவனுக்குப் பைத்தியம் பிடிச்சுடுத்தாம். வரவா போறவா எல்லாரையும் கட்டிக் கட்டி முத்தமிடறானாம். செவிரு, ஜன்னல் நாற்காலி, தரை எல்லாங்கூட! டாக்டர். அவன் வீட்டிலேயே பரம்பரையாக் கொஞ்சம் மூளைக் கோளாறு உண்டுன்னார், ஏதோ பேச்சு நடுவிலே.

**சித்திரை 16:** காலை 8.30. அவனைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிட்டாளாம். அடப்பாவி! நீயும் மோசம் பண்ணிப்பட்டையா?

**சித்திரை 17:** காலை 8.30. என்னால் எழுத முடியல்ல! கை வெடவெடங்கறது. கோணக்கோண இழுக்கிறதே!

**ராத்திரி—9.** சத்தே தேவலை.

**சித்திரை-18.** நேத்து ராத்திரி சொப்பனங் கண்டேன், தேவி சூலத்தையெடுத்து என் மாரிலே பொறித்தமாதிரியிருந்தது. இனிமே சந்தேகமில்லை...

# ஓடிக்கொண்டே இரு

ஆகவே சாலை ஓரமாய், மரங்களின் நிழல்கீழ் நடந்து போய் போய்க்கொண்டேயிருக்கையில் ஓடும் ஜலவாஸனை எட்டி, தாகம் புரண்டெழுந்து, திடீரெனத் தாகம் தாங்க முடியாமல், தண்ணீர் திக்கு நோக்கி நடந்து கரையடைந் ததும், தோள்மூட்டை (உலகத்தில் அவன் உடமை அனைத்தும் அதில் அடங்கியதோடு சரி)யைக் கீழேயிறக்கி, தானும் அதனருகே இறங்கினாற்போல் உட்கார்ந்து, காலை நீட்டி, உட்கார்ந்த இடத்திலேயே புற்றரையில் கரையின் சரிவோடு சாய்ந்து முகம் வானை அண்ணாந்ததும்—

''அம்மாடி!''

நிர்ச்சல வானம்; நீல பராபரம். இதுமாதிரி, நெற்றி வேர்வையைப் பரிவுடன் காற்று ஒற்றும் ருசி அனுபவிச்சாத் தான் தெரியும். வருடக்கணக்கில் பாம்பு காத்தையே உட் கொண்டு வாளுதாமே! அந்த வித்தை நமக்கும் வசப் பட்டால் நாள், ஒரு கண்டமா ஓட்ட வேணாம். ஒருநாள் பிச்சை, ஒருநாள் திருடு—ஹூம்—நாய் துரத்தி, ஆள் விரட்டி, போலிஸ் உதை—அதென்ன அப்பிடி அடி வவுத்தில் குத்தறான்? குடலே சரிஞ்சுபோச்சு. உள்ளே கடியாரம் இப்பவே என்ன ஆச்சோ என்ன கண்டது? எல்லாம் இந்த வவுறு; மானங்கெட்ட வவுறு!

வேலை கிடைத்தால்தானே கூலி? எனக்கென்ன வேலை தெரியும்? எடுபிடி சுமை தூக்கலாம். முன்னாலே எவன் என்னை வெச்சுக்குவான்?

நான் முழுத் திருடா? ஆத்தாளே அறியும். வெய்யிலில் வாசலில் ஏதேனும் தின்ற பண்டம் முறத்தில் வெச்சிருந்தா அதான் உளுத்த நாத்தம் வவுத்தைக் குமட்டுதே! பசிக் கொடுமை ஒரு அள்ளு வாயில் போட்டுக்கிட்டு ஓடுவேன் அம்புட்டுத்தான். இல்லே எந்த வீட்டு பொம்புள்ளையானும் அவள் அவசரத்துக்குக் கடையில் ஏதாச்சும் வாங்கி வரச் சொன்னா... ஒரு பச்சைமிளகா, கறிவேப்பிலை, கொத்த மல்லி, தேங்காபத்தே அந்தச் சில்லறையோடு கம்பி நீட்டறது உண்டுதான். ஆனால் அந்த அதிஸ்டம் தினமே கைகூடுமா? தினமே நேர்ந்தால் அது எப்படி அதிஸ்டமாவும்?

பூ மலந்தாப்போல், காலும் கையும் தளற விரிச்சுப் போட்டு, வாய் லேசாத் துறந்து, கண்ணை மூடி, காத்தை மெல்ல மெல்ல அருந்திக் கைகளுவிட்டு—என்ன பேத்தறேன், காத்தைத் துன்னத் தெரிஞ்சா என்னாத்துக்குக் கை களுவணும்? வாயைக்கூடக் கொப்புளிக்க வேணாம். அப்புறம் மூட்டையென்ன முடிச்சென்ன? கையையும் காலையும் வீசி நடந்துகிட்டேயிருக்க வேண்டியதுதான். சிரிப்பு வந்தது.

கிழித்த நாராய்க் கிடந்தான். தலைமாட்டில் ஏதோ சல சல—என்னவாச்சும் இருக்கலாம், என்னவாச்சும் இருந் துட்டுப் போவட்டும். இப்போ அங்கம் கொஞ்சம் அசைஞ் சாலும், இந்தச் சொகம் கலைஞ்சு போயிடும்.

புல் ஒன்றைப் பிடுங்கிக் கடித்தான். தித்திப்பு. உரு வினால் ஒரு முழ உசரம் நிக்கிதே!

புல்லின் சாறு தாகத்தை நினைப்பூட்டிற்று.

தண்ணீரில் இறங்கிக் குனிந்து, இருகைகளிலும் அள்ளி யும் ஆச்சு. எங்கோ தொலைதூரத்திலிருந்து நெருங்கிக் கொண்டிருக்கும் ஒரு சப்தத்தை, அதன் நுட்ப நிலையிலேயே

செவி நரம்பு எடுத்துவிட்டது. குடல் குலுங்கிற்று. ஏற்கெனவே உதை நொந்த குடல். அள்ளிய ஜலத்தை அப்படியே சிதறிவிட்டு கரையேற முயன்றான். இருமுறை சறுக்கிவிட்டது. எந்த வேரோ முண்டித் தடுக்கிற்று. சமயத்தில் மோசம் பண்ணவே பூமிக்கடியில் ஓடிவருது. இறங்கின இடம் வேறு. இப்போ கரையேறத் தவிக்கிற இடம் வேறே. ஒரு வழியா ஏறி, முட்டையைத் தேடிப் பிடிச்சுத் தோளில் மாட்டுவதற்குள், நாலு கால் பாய்ச்சலில் ஓடிவந்து 'லொள் லொள்' அவனைச் சூழ்ந்துகொண்டது. எப்பிடித் திரும்பினாலும் அங்கு ஒரு 'ளொள்' முளைத்தது. தப்ப வழியில்லை. புதர் மறைப்பிலிருந்து வரதைப் பார்த்தா, குட்டிக் குரைப்பாத்தான் தெரியுது.

நாய் என்றாலே அவனுக்குத் தனி நடுக்கம். ஒரு சமயம் வேணாம், வேணாம்! இந்தச் சமயத்தில் நினைக்கக்கூட வேணாம். நினைச்சாலே பிடுங்கின இடத்தில் கண்ட சதை சுறீலிட்டது. மாதமாயும் ரணம் ஆறவில்லை. குதறிப் போச்சு. தர்ம ஆஸ்பத்திரிக்காரனுக்கு அலுத்துப் போச்சு.

ஆத்தா! வெறி பிடிச்ச மாதிரி குரைக்குதே.

'ஜிம்மீ! ஜிம்மீ! ஷட்அப்!''

''ஜிம்மீ! டௌன் ஐ ஸே!''

இளநீராட்டம். அவ்வளவு இனிப்பு குளுகுளு குழந்தைக் குரல்.

ஜிம்மி படிப்படியாக ஓய்ந்தது. உடனே அடங்கிவிட்டால் அதன் சூரத்தனம் என்ன ஆவது?

உடனே எதிர்ப்புறமாய் எதையோ துரத்தும் பாவனையில் அதன் குரைப்பு நாலு கால் பாய்ச்சலில் ஓடி, எட்ட எட்ட ஓய்ந்தது.

அவனுக்கு மூச்சு திரும்பிற்று.

தன்னின்று எறிந்த பெருமூச்சின் பிம்பமாய் வாடை பாய்ந்தது. அதன் கிச்சிகிச்சில் புற்கள் அனைத்தும் தலை யாட்டித் தனித்தனியாகச் சிரித்தன.

அவனுக்காக.

''என்ன சின்னதுரை? இந்த இடம் உங்களதா? ரோட்டுன்னு தப்பா நினைச்சி சொந்த நிலத்துலே நுளைஞ்சிட்டேனா?''

''என் பேர் சின்னதுரையில்லே. சுரேஷ்.''

''சுரேஷ்? பணக்காரப் பேருதான்!''

''ஏன் கண் உனக்கு ஒரு மாதிரியாயிருக்கு?''

''என்ன மாதிரி?'' கண்ணைக் கசக்கிக்கொண்டான்.

''தேய்க்காதே! தேய்க்காதே!'' பையன் கத்தினான் ''பயமாயிருக்கு.''

''என்ன பயம்?''

''ரெண்டு கண்ணிலேயும் வெள்ளையா என்னவோ ஆடை மிதக்கிறது.''

சுரேஷ் அருவருப்பில் இறுகக் கண்ணை மூடிக்கொண்டான்.

''ஓ, அதுவா? பூ.''

''பூவா! அதென்ன கண்ணுலேகூட பூக்குமா என்ன செடியில்தான் பூக்கும்.''

''அப்பிடியெல்லாம் கேட்கக்கூடாது. ஆத்தா கோவிச்சுக்குவா.''

''ஆத்தா? அது யாரு ஆத்தா?''

''அதெல்லாம் உனக்கேன்? வேணாம் சின்னதுரை'' கெஞ்சினான்.

''என் பேர் சின்னதுரையில்லை, சுரேஷ். உன் பேர் என்ன?''

''கண்ணாயிரம்.''

சுரேஷுக்குச் சிரிப்பு. ஓரேயடியாச் சிரிப்பு.

''ஏன் சிரிக்கிறே துரை?''

''இருக்கிற ரெண்டு கண்ணே சரியில்லே, கண் ஆயிர மாம்!''

''உஷ்...தவடையிலே போட்டுக்க'' தான் போட்டுக் கொண்டான். ஆத்தா வீசிடுவா, கோவம் வந்துட்டா.''

''ஆத்தா யாரு?''

''உனக்குத் தெரியாது'' தெரிய வேணாம்.

''உனக்குக் கண் தெரியுமோ?''

என் ஆத்தா என்னை வவுத்துலே சுமக்கையிலேயே அவ மேலே ஆத்தா சுமையா இறங்கிட்டா. பூத்த கண்ணோடு தான் குளந்தெ விளுந்தது. உடம்பெல்லாம் கண். அப்பவே குளுந்திட்டிருந்தால் இந்த அவதியெல்லாம் ஏன்? ஆனா அவள் சித்தம் இப்பிடி. இப்பிடியும் ஒரு புறான்னு அவள் கையாலே அந்தரத்தில் வீசியெறிஞ்சுட்டா. நானும் பறந் துட்டுத்தானிருக்கேன்.''

''நீ சொல்றது ஒண்ணுமே புரியல்லே!''

''குழந்தை!'

''என்னைக் குழந்தென்னாதே!'' சீற்றத்துடன் பையன் கத்தினான்.

''அப்போ நீ என்ன தாத்தாவா?''

''அப்போ நீ என்ன தாத்தாவா?'' கண்ணாயிரம் சௌகரியமாய்ப் புல்லில் சாய்ந்துகொண்டான். புல் மெத்தையின் ஸொகுஸில் ஒரு மதமதப்பு. ஒரு புல்லைப் பிடுங்கி மெல்ல ஆரம்பித்தான்.

''நான் தாத்தா இல்லே.''

''ஏன் வெறி பிடிச்சு சுத்தறே? இப்போ என்ன ஆயிடுச்சு?

''என்னை எல்லாரும் குழந்தை குழந்தைன்னு அடக்கறா.'' பையன் குரலில் கண்ணீர் துளும்பிற்று.

''எதிலும் சேத்துக்க மாட்டேன்கறா. 'ஸுரேஷ், பெரியவா பேசிண்டிருக்கோம். மாடிக்குப் போ'—'' அப்பா அதட்றா. 'ஓயற காலத்துலே நான் ஒண்ணைப் பெத்துட்டுப் படற பாடு'ன்னு அம்மா அலுத்துக்கறா. ''ஸுரேஷ், நானும் ஸுரேஷும் பேசறதை—அது இன்னொண்ணு ஸுரேஷ்—ஒட்டுக்கேட்டு ஒண்ணுக்கு மூணா அப்பாகிட்டே கோழி மூட்டிக் கொடுக்கவா? என்ன வேடிக்கை பாக்கறே?'' அக்கா விரட்டறா; எதிர்வீட்டுப் பக்கத்து வீட்டுப் பசங்க எந்த விளையாட்டிலும் சேத்துக்க மாட்டேங்கறாங்க. எனக்கு இன்னும் நாலு வயசு போகணுமாம். அண்ணாதான் சிகரெட் பிடிக்கறது எனக்குத் தெரியாதுன்னு நெனச்சுண் டிருக்கான். எனக்குத் தெரிஞ்சால்தான் என்னன்னு நெனச் சுண்டிருக்கான். நான் இன்னும் அப்பாகிட்டே சொல்லல்லே—என்னை ஒரு ஆளா மதிக்கல்லே.''

''அடி சக்கை, நீ பெரிய ஆளுதான், பாப்பா!''

ஸுரேஷுக்கு மண்டையுள் தளைத்தது. ''ஜிம்மீ! ஏ ஜிம்மி!''

கண்ணாயிரம் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தான். ''வேணாம் சின்னதுரை வேணாம்!''

ஸுரேஷுக்குச் சிரிப்பு. ஒரே சிரிப்பு. ''சும்மா சுமா ஒள்ளாட்டிக்கு. ஜிம்மி இப்போதைக்கு வராது. எங்கே தொலைஞ்சதோ?''

கண்ணாயிரத்துக்குத் தைரியம் கொடுக்கவில்லை. இந்தப் பணம் படைச்சவங்களையே நம்பறதுக்கில்லை, இவன் கொளந்தை. ஆனால் இவன் வந்த வழி என்ன பாடு படுத்தறான். காத்தோ கண்ணைச் சொருவுது. குதிரை மாதிரி ஒரு தடவையாட்டியும் புரண்டெழுந்தாத்தான் வசப்படும். ஆனால் இது; கண் அசரவிடாது போலிருக்குதே!

ஆனால் இருவருமே சொல்லி வைத்தாற்போல் சற்று நேரம் அடங்கினர்.

இதுவரை நின்றுகொண்டிருந்த இடத்தில் ஸுரேஷ் அப்படியே குந்திட்டு உட்கார்ந்து முழங்காலைக் கட்டிக் கொண்டான்.

இடத்தின் அமைதி இருவரையும் தன் தம்பூரில் இழைத்துக்கொண்டது.

என்னைப் பார், என்னைக் கேள் என்கிற மாதிரி.

கண் உள்ளவர் என்னைப் பார்க்கட்டும்.

கண் இல்லாதவர் என்னைக் கேட்கட்டும்.

அதுவும் இல்லாதவர் அவர்மேல் நான் படர்வதில், என் தழுவலில் என்னை உணரட்டும்—என்கிற மாதிரி.

என் வேர், கண், மூக்கு, செவி, பாஷை இன்னும் எது எதையோ தாண்டி ஓடுகிறது.

அதனால் எல்லோரும் என் குழந்தைகள் என்கிற மாதிரி.

என் குழந்தைகளா! சற்று நேரம் சும்மாயிருந்து பாருங்கள். இதுதான் என் பாஷை, உங்களுக்கும் புரிந்த பாஷை என்கிற மாதிரி.

அவர்களை வாய் பொத்தியது எது என்று அறியாமலே இருவரும் மௌனமாயிருந்தனர்.

காற்று என்ன ஷோக்காய்க் கிளம்புது! காற்றும் ஒரு தோழன்தான். எப்படிக் கண் இமையிலே கன்னத்துலே, உடல் ரோமத்துலே, மண்டை மயிர்க்காலுக்குள்ளே புகுந்து விளையாடுது! கிச்சாங்கிளுகிளு குஸுமாங்கனி பஹுதுல்லா—என்னமோ இப்படி உளறத் தோணுது. நெஞ்சிலே கன்னுக்குட்டி துள்ளுது.

''—ஏய் அதோ பச்சைக்கிளி ரெண்டு! உன் தலைக்கு மேலே மரத்துலே, கிளையிலே...''

பச்சையாம் சிவப்பாம் ஊதாவாம் என்னென்னவோ சொல்றாங்க. என்னத்தைக் கண்டேன்? மூக்கு முகந்து, கையால் தொட்டறிஞ்சது, மத்தது ஒண்ணும் அறியேன். இவன்கிட்டே சொன்னா இவன் என்ன புரிஞ்சுக்குவான்?

"—எங்கப்பாகிட்ட நிஜத் துப்பாக்கியிருக்கு, தெரியுமோன்னோ? அதைச் சுவத்திலே மாட்டியிருக்கு. அவர் ரூமுக்குள்ளே யாரும் போகக்கூடாது. எப்பவும் பூட்டியிருக்கும். நான் மிஸ்சிஃப் பண்ணுவேனாம்."

"உங்க அப்பாரு யாரு?"

"அஸிஸ்டெண்ட் போலீஸ் கமிஷனர்."

"ஐயையோ!"

"நீ ஏன் பயப்படறே? நீ திருடனா?"

நீங்கள் ஆளை அடிக்கத் தப்பு பண்ணியாவணுமா என்ன? போலீஸ் இன்னாலே நாய் துரத்துது. குடல் துடிக்குது.

"கண்ணாயிரம் பயப்படாதே. நீ திருடனில்லேன்னு டாடிகிட்டே சொல்றேன்."

"டாடி?"

"அப்பா."

அவனுக்கு மனம் நெகிழ்ந்தது.

"சின்னதுரை, கிட்டே வாயேன்."

ஸுரேஷ் சற்று கிட்ட நகர்ந்தான்.

"சின்னதுரை உன்னைத் தொடலாமா?"

பையனுக்கு மூக்குத்தண்டு சுருங்கிற்று. நீ டர்ட்டியா இருக்கே—"

"அப்படின்னா?"

"அழுக்கு."

"செ, ஒரு நாளும் கிடையாது. நான் தினம் குளிக்கறேன். துணியைத் தோச்சுக் கட்டறேன். ஒரு நாள் தவறாமல் லைஃப்பாய் நீ வேணும்னா பார். என் உடம்புலே அழுக்கு இருக்குதா பார்! பொத்தான்களை அவிழ்த்து, சொக்காயைத் திறந்தான்.

ஸுரேஷுக்கு வியப்பாயிருந்தது.

"அதென்ன தழும்பு தழும்பா, சுழி சுழியா?—"

"ஓ?" அவசரமாக இழுத்து மூடிக்கொண்டான். "அது தான் ஆத்தா கொடுத்த ஆயிரம் கண்."

"அதெல்லாம் முழிக்குமோ?"

"நான் என்ன இந்திரனா? நீ எப்படி நினைக்கிறியோ அப்பிடி வெச்சுக்க சின்னதுரை—"

"ஊங்?"

சட்டென்று அவன் மேல் பாய்ந்து அவனைக் கட்டித் தழுவிக்கொண்டான். அம்மாடி, மெத்து மெத்துனு என்ன சொகம். என்ன சொகம்!

"என்னை விடு! என்னை விடு!" பையன் திமிறினான். ஆலிங்கனம் இறுகிற்று. பையன் திணறினான். திடீரென பயம் கவிந்தது. சட்டென்று விட்டான்.

"யூடர்ட்டி பெக்கர்! வா, வா. என் டாடிகிட்டே சொல்றேன்!" பையன் அழ ஆரம்பித்தான்.

"என்ன குழந்தையாட்டம் அழுவறே, சூரப்புலின்னு சொல்லிக்கறே! ஆத்தாகிட்ட முலை உண்ண நெனப்பு வந்திடுச்சா? உன் டாடி கரடி—இங்கே எங்கேடா இருக்கு?"

"இங்கேதான் நாங்கள் பிக்னிக் வந்திருக்கோம். 433 ஐஸ்கிரீம் வாங்கிண்டு வரப்போனான். இப்போ வந்திருப்பான். அப்பாவைக் கரடி என்கிறே? இப்பவே உன்னை இழுத்துண்டு வரச்சொல்றேன்!"

அழுதுகொண்டே ஓடினான்.

கண்ணாயிரம் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தான்.

''சின்னதுரை! சின்னதுரை!''

''வா! வா!''

—''வா! வா!''

—''வா! வா!''

கண்ணாயிரம் பதறிப் பதறித் தேடியெடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டான். ஓடினான். கல்லோ, வேரோ, புல்லோ, எதுவோ தடுக்கிற்று. ஒரு வழியாக விழாமல் சமாளிக்கும் தத்தளிப்பில் முகமும் கைகளும் தரையோடு ஒட்டின. புல் செழிப்பின் மறைவில் அந்த நிலையில் அவன் விழுந்தடித்து ஓடுகையில், வேட்டைக்குத் தப்பி ஓடும் நாலு கால் பிராணியாய்த் தோன்றினான்.

ஓடு! ஓடு! ஓடிக்கொண்டேயிரு!

# ஆஹுதி

குபீரென்று தாழம்பூ மணம் அறையைத் தூக்கிற்று. நள்ளிரவில் யோசனையின் அரை மயக்கத்திலிருந்து—என் வயதில் எதைத் தூக்கம் என்று சொல்வது? ஆயிரம் கவலை நானாக விலைக்கு வாங்கிக்கொண்டது, பிறர் எனக்குத் தந்து அதற்கும் பழி என்மேல் சுமத்துவது... கொடுத்த கடன்கள் தஞ்சாவூர் பொம்மை மாதிரி தலையை ஆட்டுகின்றன.

("கொடுக்க மாட்டேன்னா சொல்லுறேன்? வாங்கினதை இல்லேன்னா நாக்குப் புழுத்துப் போயிடும். ஆனால் நீங்கள் கொஞ்சம் பொறுக்கணும். எப்போன்னு கேட்டால் எப்படிச் சொல்லுவது? காலம் போற போக்கு உங்களுக்குத் தெரியா தில்லே. பொண்ணுக்குப் போன மாதம் ஆபட்ஸ்பரியில் பூப்பு கொண்டாடினேன். அழைப்பு வந்திருக்குமே. பார்த் தீங்களா? ஒண்ணே அடக்கம் ரூ. மூணு ஆவுது. ஊரே திரண்டு வந்தது. ஷேக் சின்னமௌலானா வெச்சிருந்தேன். சாமிதான் வரல்லே. சாமிக்குக் கோவம். ஒண்ணு வெச்சுக்கங்க. ஒங்களது செல்லிக்காசு ஒண்ணு போவாது. கொஞ்சம் முன்னே பின்னே! அவ்வளவுதான்.")

அவனுக்குப் பூப்புக்கு அழைப்பு ஒண்ணு ரூ. 3/-எனக்கு அரிசிக்காரனுக்கும், பால்காரனுக்கும் நாளை சால்ஜாப்பு சொல்லியாகணும். இவன் வட்டியை அளக்கவே இவ்வளவு பேச்சு. முதல், முள்மேல் போட்ட துணி. அம்மா, உன்

காப்பிக்கொட்டைச் சங்கிலிக்குத் தலை வலிக்கிறது. நீ காலமாகி வருடம் பன்னிரண்டு. உன் கழுத்திலிருந்த மகிமைக்கு இத்தனை நாள் காப்பாற்றி வைத்திருந்தேன். இனி என் செய்வேன், ஒண்ணும் புரியல்லியே!)

மையிருளில், நள்ளிரவில், குபீரென்று தாழம்பூ மணம் அறையைத் தூக்கிற்று. இது ஒரு தொழிற்சாலைகள் நிறைந்த பகுதி. திடீரென்று வேளையில்லாத வேளையில் தார், ரப்பர், வறுத்த காப்பிக்கொட்டை—இதுபோன்ற வாடைகள், பிறகு நாற்றங்கள்—நான் செந்தமிழ் பேச வில்லை, நாற்றம் என்றால் நாற்றத்தைத்தான் குறிக் கிறேன். கிளம்பும். ஆனால் வழக்கமாக தாழம்பூ மணத்தைப் பாம்பின் நடமாட்டத்தோடு இணைத்துப் பேசு வார்கள். என் அறைச்சுவர் வெடிப்பில் சுகமாகப் படுத்துக் கொண்டிருக்கிறதோ...? 'குப்'பென்று வேர்த்துவிட்டது. விளக்கைப் போட பயம்.

முதலில் இருக்கிறதோ இல்லையோ? மணங்கொண்டு மனம் சிருஷ்டித்ததுதானே என்று மனத்தைத் தாண்டி துணிச்சல் வரவில்லை. மேலே ஊறும்வரை (சில்லென்று அல்லித்தண்டு மாதிரியிருக்குமாமே! அல்லித்தண்டைப் பார்க்கவோ, பார்த்திருந்தாலும் அதைத் தொடவோ நேர்ந்ததில்லை) அல்ல... வெடுக்கென்று பிடுங்கி அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்திருக்கும்வரை விளக்கைப் போடத் துணிச்சல் இல்லை. முதலில் கைகால்களில் செய லில்லை. பயமா? மண மயக்கமா? அதுவும் இதுவுமாய் என்னைப் பழைய வாசனைகளில், படகாய் இழுத்துச் சென்றன.

மஞ்சள் குங்குமத்துடன் அம்மா வாழ்ந்த நாளில் கூந்தல் முடிச்சில் சமயங்களில் தாழம் மடல், சொருகிய கத்திபோல் சின்ன பேனாக்கத்தி—எட்டிப் பார்க்கும். எந்தப் பூவுமே அப்படித்தான். மல்லியானால் சும்மா இரண்டு பூ. சாமந்தி ஒண்ணே ஒண்ணு. ரோஜா வைத்துக்கொண்டு பார்த்ததே

யில்லை. அம்மா பூவைச் சரமாக அணிந்தே நாங்கள் பார்த்ததில்லை. பின்னிப் பூ முடிக்கும் நாளிலேயே அம்மா பின்னிக்கொள்வதை விட்டாச்சு. அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஏதோ சச்சரவு. நான் கைக்குழந்தையோ—கையைப் பிடித்துக்கொள்கிற குழந்தையோ, தாழம்பூ ஜடை தைத்துக்கொண்டு அம்மா பெருமையாக அப்பாவிடம் காட்டவர அப்பா நோயாளி. பல கவலைகள், ஏதோ கொடுமையாகச் சொல்ல. (என்னென்று எனக்குத் தெரிந்தாலும் சொல்ல மாட்டேன்.)

அம்மா ரோஷக்காரி. அன்றிலிருந்து பின்னிக்கொள்வதையே விட்டுவிட்டாள். பிறகு மாமியார் மருமகளுக்குப் பரிந்துகொண்டு பிள்ளையைக் கடிந்துகொள்ள, அப்பாவே பச்சாத்தாபங் கண்டு அம்மாவிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டும், பிறகு மாமியார், நாட்டுப்பெண்ணைக் கடிந்துகொண்டு, "நன்னாயிருக்குடி நீ வஞ்சம் கொண்டாடறது. என் பிள்ளை ஏற்கெனவே சீக்காளியா இருக்கான்!" ஊ... ஹூம்.

கடைசியில் சமாதானச் சின்னமாக, பகவான் தாழம்பூவை மன்னித்தமாதிரி அம்மாவின் கூந்தல் முடிச்சில். சமயங்களில் சொருகிய சின்ன பேனாக்கத்திபோல் தாழம்பூ மடல் தகதகவென கமகமக்கும். அல்லது கமகமவென தக தகக்குமா? கம கம தக தக... சிந்தனையின் ஸ்வரம் எப்படி மணக்கிறது!

அப்பாவின் நோய்க்கும் எரிச்சலுக்கும் ஆனால் காரணமுண்டு. நான் யார் பக்கமும் கட்சி பேச வரவில்லை.

இப்பவும் ஆஸ்துமாவுக்கு நிரந்தர குணம் உண்டோ? எனக்குத் தெரியாது. ஆனால் அப்போது மருந்துகள், ஊசிகள், மாத்திரைகள் இந்த அளவுக்கு முன்னேறவில்லையே? 'அவரை உயிரோடு காணணும்னா பட்டண

வாசம் இனிமேல் அவருக்கு ஆகாது. திறந்தவெளியும் காற்றோட்டமும் காண கிராமத்துக்குப் போயிடுங்கள்' என்று வைத்தியன் தீர்ப்பு அளித்துவிட்டான்.

அப்பா யானைக்குட்டி மாதிரியிருப்பார். தொந்தியில்லை. கெட்டிச் சதை, காலையில் டர்பனைக் கட்டிக்கொண்டு கிளம்பிவிட்டாரானால், வெறும் டியூஷனிலேயே மாதம் ரூ. 200/- வருமானம். பள்ளிக்கூடத்தில் சம்பளம் தவிர, பரீட்சைத்தாள் திருத்தல் Extra. அடேயப்பா! அந்த நாளில் அது என்ன கடல் தெரியுமா? கப்பலில்தான் மிதந்தோம், என்ன செல்வாக்கு, எத்தனை உறவுகள்! வருவோருக்கும் போவோருக்கும் எங்கள் வீடு ஒரு ஜங்ஷன், இரண்டு வேளையும் பருப்போடு சமையல். இரண்டு வேளை டிபன். நொறுக்குத் தீனி; எத்தனை வேளை வேணுமானாலும் காபி. அம்மாவுக்கு நன்னா பண்ணனும். நாலுபேருக்கும் கொடுக்கணும். தவிர, விருந்தினர்கள் நாங்கள் வெறுங்கையோடு வரவில்லை என்று ஜாடை காட்டும் பிஸ்கட் பாக்கெட், காராபூந்தி பொட்டலம், வாழைப்பழச் சீப்பு-இதெல்லாம், குழந்தைகள் எங்களுக்கு அனுத்துவிட்டால் அப்புறம் நாங்கள் குழந்தைகள் எப்படி...?

ஒரு நிமிஷம் சும்மாயிருக்க முடியாத அப்பாவைத் திடீரென்று கிராமத்தில் எங்கோ போர்டு ஸ்கூலில், முப்பது ரூபாய் சம்பளத்தில் தள்ளிவிட்டால்...

Cinderella-வுக்கு மணி 12 அடித்தாற்போல்—மந்திரக் கோல் வீச்சுப்போல், எல்லாம் திடீரென்று 'அந்த நாளாக' மாறிப்போனால் அப்பாவுக்கு எப்படித் தாங்க முடியும்?

"அம்மாவின் சரடு உரத்தில்தான் ஐயாவின் மூச்சு இழையோடுது. பாட்டி நீங்க இனி ஊர்க்கவலையைப் படாதீங்க. ஒழுங்கா நீங்க புள்ளை கைக்கொள்ளி வாங்கிட்டுப் போறவழியைப் பாருங்க"ன்னு குடும்பத்தின் பரம்பரை ஜோஸ்யன் சாமிநாத பண்டிதன் அம்மாவுக்கும் பாட்டிக்கும் தீர்ப்பு சொல்லிவிட்டான்.

கூட்டமும் கும்மாளமும் சிட்டாய்ப் பறந்துவிட்டது அனுதாபம் விசாரிக்கக்கூட ஒருவரும் வரவில்லை. அப்பா தான் பொருமுவார். அம்மா dont care. 'நமக்கு நாம் இருக்கும்வரை நமக்குக் கவலையில்லை' என்று சொல்லிக் கொண்டே குத்துவிளக்கை ஏற்றுவாள். ஆனால் இன்னும் பின்னித் தொங்கவிட்டுக் கொள்ளவில்லை. எடுத்துக் கட்டிக் கொள்ளவில்லை. சபதத்தில் முடித்த கூந்தலில் ஒரு தாழம்பூ மடல் கத்திபோல் அம்மா பேச்சுக்கு சாட்சியாகக் குத்திட்டு நிற்கும்.

நமக்கு நாம் என்று சவால் விடலாம். ஆனால் நடை முறையில்...

ஒருமுறை சித்தப்பா பட்டணத்திலிருந்து நாலு நாள் ரஜாவில் வந்திருந்தார்.

''சப்தரிஷி, இந்தப் பையன்கள் இங்கேயிருந்தால் மாடு மேய்க்கத்தான் லாயக்குபடுவார்கள். மூத்தது ரெண்டையும் என்னோடு அனுப்பி வை.''

''நீ சொல்றது என்னமோ வாஸ்தவந்தான். ஆனால் அம்பி, என் நிலை உனக்குத் தெரியும். அவர்கள் சம்பளத் துக்கோ, சாப்பாட்டுக்கோ, ஒத்தாசையா பணம் அனுப்பவோ எனக்கு வழியில்லை.''

''என்னடா பிரிச்சுப் பேசறே?''—சித்தப்பா சீறினார். அந்த நாளின் வேர்களே வேறு! என்னையும் சிவாவையும் அழைத்துக்கொண்டு வந்துவிட்டார்.

''நன்னாப் படிச்சு இறக்கையை விரிச்சு முன்னேறப் பாருங்கோ.''

''சமத்தாப் படிங்கோ.''

சித்தப்பாவின் யதார்த்த புத்திமதிக்கும், அம்மாவின் ஆசிபலத்துக்குமிடையே எங்கள் அதிர்ஷ்டமும் சேர்ந்து கொண்டு நாங்கள் சிரத்தையாகவே படித்தோம். சிவா

பரவாயில்லை. நானே சொல்லிக்கொண்டாலும் என் மார்க்குகள் ஏற்றம்தான். ஏழாம் வகுப்பிலிருந்தே நான் merit scholarship.

வருடம் மும்முறை நவராத்திரி, கிறிஸ்துமஸ், கோடை விடுமுறைக்கு கிராமத்துக்கு வந்துவிடுவோம்.

"அம்மாவிடம் பால் குடிக்கப் போறேளா...?"—சித்தி கேலி பண்ணுவாள். ரோசமாயிருக்கும். ஆனால் நாங்கள் ரோசங் கெட்டவர்கள். ஒரு வேடிக்கை. சென்னையில் அவ்வளவு ஒற்றுமையாக இருப்போமே... இங்கே காலடி வைத்ததுதான் தாமதம், பழி, சண்டை எங்களிடையே மூண்டுவிடும்! "என் ராசிடா!" அம்மா தலையிலடித்துக் கொள்வாள்.

எனக்குப் பன்னிரண்டு; அவனுக்குப் பத்து. அண்ணன் தம்பிகளிடையே சண்டை வரக்கூடாதென்றால் ஒன்று இரட்டைப் பிறவியாயிருக்கணும். அல்லது வயது வித்தியாசம் கணிசமாயிருக்கணும் இப்படி இரண்டுங்கெட்டானாய் இரண்டு மூணு வயதிருந்தால், பிறந்ததிலிருந்தே பங்காளிக் காய்ச்சல்தான்! எல்லாவற்றிலும் மேல், அண்ணன் தம்பியாப் பிறக்கக்கூடாது.

பிள்ளைகள் விடுமுறைக்கு வந்திருக்குக! அம்மா விதவிதமா எங்களைக் கவனிப்பாள். வெங்காய சாம்பார், உருளைக்கிழங்கு வறுவல், கத்தரிக்காய் எண்ணெய்க்கறி, பதக்கம் பதக்கமாக வெங்காய பஜ்ஜி, பின்னால் வயிற்றை ஒடுக்கி, வாயொடுக்கி என்ன ஆறதோ? இப்போ எல்லோரும் சேர்ந்து சந்தோஷமாயிருக்கோம். அன்றிலிருந்து இன்று வரை ஆயிரம் பேசுகிறோம்... கலை, வேதாந்தம், விஞ்ஞானம், ஆனால் எல்லாம் கடைசியில் முடிவது தீனியிலும் திண்டியிலும்தான்!

ஓர் இரவு மதறாஸில் புயல் அடித்தது. தெருவில் தந்திக் கம்பங்களிடையில் காற்று ஊளையிட்டது. நாங்களிருவரும் போர்வைக்குள் வெடவெடவென்று, ஒருவரையொருவர் அணைத்தபடி நடுங்கிக்கொண்டிருந்தோம். குளிரினால் அல்ல. Binny போர்வை நல்ல கதகதப்பு. ஊரிலே அம்மா, அப்பா, பானு, வைத்தி, ராமு இப்போ என்ன பண்ணிண்டிருக்காளோ பழைய வீடாச்சே! பெருந்திருவே—(இது பாட்டி பாடம்: 'எது என்னவானாலும் நம் குலதெய்வத்தை மறந்துடாதேங்கோ ) அவாளைக் காப்பாத்து!

ஆனால், நான் இங்கே சொல்லவந்தது, சித்தப்பா வீட்டுக்கு நாங்கள் போனபிறகு திரும்பிய முதல் நவராத்திரி விடுமுறைபோது நேர்ந்த ஒரு சம்பவம் பற்றி. என்னவோ ஆரம்பித்து, எங்கெங்கோ சுற்றி வந்துவிட்டேன்.

நவராத்திரி வெள்ளிக்கிழமை அம்மா பாயசம் பண்ணினாள். பண்ணிக்கொண்டிருந்தாள். சேமியாப் பாயசம்.

''ஏண்டி சீமதி சேமாயி, நைவேத்யத்துக்கு எடுத்ததோ? பாட்டியிருந்தால் கேட்டிருப்பாள். பாட்டி சென்னையில் இருந்தாள். ஆனால் அம்மா அதுக்கும் பதில் வைத்திருப்பாள். ஆமாம்; சாமிபேரில் நாம்தானே குடிக்கிறோம்! ஏதோ பாயசத்தில் பாலை அம்பாள் ஏத்துண்டால் சரி.'' சேமியா பாயசம்னா எனக்கு உசிர்!

திடீரென சிவாவுக்கும், எனக்கும் போர் வந்துவிட்டது. காரணம் வேணுமா என்ன...? மறந்துபோச்சு. எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள் அப்பவே என் தமிழ்ப் பாடத்தில் வந்தாச்சு! ஏதோ ஸ்லேட்டு குச்சி அல்ல, துண்டு பென்சில் அல்ல. ஒட்டுபொம்மை அல்ல... ஒண்ணுமே வேண்டாம். 'நீ ஏண்டா என்னையே பாத்துண்டிருக்கே...? அது போதுமே—நேரே கைகலப்புத்தான். கட்டிப்பிடித்து விழுந்து அடுப்படியில், அம்மா காலடியில் பூனைக்குட்டி போல் உருண்டோம்.

"சனியன்களா நெருப்பிலே சாக இங்கேதான் வேளை தேடினேளா...? மொத்து மொத்து... மொத்தல் இரண்டு பேருக்குமே விழுந்தது. கைப்பாத்திரத்தாலேயே தம்பி தலையில் நெத்தினாள். அவன் துடைத்துக்கொண்டு ஓடிப் போய்விட்டான். அவனை உத்தேசிக்கையில் எனக்குக் கிடைத்த தண்டனை ஒன்றுமேயில்லை.

நான் பேசாமல் போய் கூடத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டேன். வேதாளம் என்னுள் வேலை செய்ய ஆரம்பித்தது. அம்மா என்னை அடிக்கலாமா? இத்தனை நாள் பிரிஞ்சுட்டு ஊரிலிருந்து வந்திருக்கேனே! நன்னாப் படிக்கறேனே! ராமேசுவரம் போய் தவங்கிடந்து பெற்ற பிள்ளையாச்சே! அம்மா ஜாடையை வேறு அப்படியே உரிச்சு வெச்சிருக்குன்னு எல்லாரும் சொல்றாளே! நான் அப்போ எவ்வளவு அருமையாயிருக்கணும்! புறுபுறுவுக்குப் பளிச்சென்று தனித்தனியாக வாதங்கள் உறுதி தெளிய வில்லை. ஆனால், அடிப்படை என்னவோ இதுதான். இது வாய்த்தானிருக்கணும்.

குங்குமப்பூ கூடத்துக்கு மிதந்து வந்தது. அம்மா ஒண்ணு குறை வைக்கமாட்டாள்.

"சாப்பிட வாங்கோ பசங்களா!"

சிவா அப்பவே கையில் பொரித்த அப்பளத்துடன் சமையலறையிலிருந்து வந்தாச்சு. அம்மா சாமிக்குக் கையெல்லாம் சமையலறையிலிருந்தே காட்டிவிடுவாள். பாட்டியிருந்தால் பூஜை, ஸ்தோத்திரம் இன்னும் அரைமணி நேரம் கூட ஆகும். பசி வயிற்றைக் கிள்ளிற்று.

அம்மாவே இன்னிக்கு எல்லாருக்கும் தாலங்களை அலம்பிவைத்துவிட்டாள்.

சாஸ்திரத்துக்கு முன்கலத்துக்குப் பாயசத்தைச் சொட்ட என்னிடம் வந்ததும் நான் இரண்டு கைகளையும் குறுக்கே மடித்துக்கொண்டு வேண்டாம் என்கிற முறையில் தாலத்தின் மேல் முதுகு வரை முகம் கவிழ்ந்தேன். அம்மாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"இதென்னடா நாட்டியப் போஸ்? நிமிர். அப்புறம், நிறைய ஊத்தறேன்."

நான் பேசவில்லை. தலையை உரமாக ஆட்டினேன்.

"எனக்கு வேலை தலைக்கு மேல் இருக்கு. நேரங் கிடத்தாதே. உன் விளையாட்டெல்லாம் அப்புறம். ஊம்!"

தாலத்தை மறைத்த கை கலையாமல் நான் அவளையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"என்னேங்கறே? பாயசம் வேண்டாமா?"

'வேண்டாம்' என்கிற முறையில் தலையை ஆட்டினேன்.

வேண்டாம்?—சிரித்த முகம் இறுகத் தலைப்பட்டது.

"வேண்டாம்?"

அவ்வளவு தான். உருளியோடு தூக்கிக்கொண்டு போய்ப் 'படக்'கென்று தொட்டி முற்றத்தில் சாய்த்துவிட்டாள்.

எனக்கு உடம்பு வெலவெலத்துப் போய்விட்டது. ஏன் உண்மையைச் சொல்கிறேனே—அரை நனைந்துவிட்டது. நான் எதிர்பார்த்தது இது அல்லவே! எல்லா அம்மாக்கள் மாதிரி: "குங்குமப்பூ போட்டிருக்கேண்டா... கறந்த பாலைக் காய்ச்சிவிட்டிருக்கேண்டா... அத்தனையும் நெய்டா! உனக்குப் பிடிக்குமேன்னு பண்ணினேண்டா! உனக்குன்னு பண்ணினேண்டா! வேண்டாங்காதடா கண்ணா..."

அட, என் வயதுக்கு மடியில் வைத்துக் கொஞ்ச வேண்டாம் ஒரு 'கண்ணு'க்கு வயசு மீறிப்போயிடுத்தா என்ன?

அம்மாவைப் பார்க்கப் பயமாயிருந்தது. அவள் கண்கள் கொதித்தன. முகம் குங்குமப் பிழம்பாகிவிட்டது. என் தம்பிகள், தங்கைகள் அழ ஆரம்பிச்சுடுத்துகள். 'அம்மா ன்னு அலறிண்டு எல்லாரும் ஓடிப்போய் அவளைக் கட்டிண்டோம். எங்களை அணைத்துக் கொண்டாள்.

சமையலறையைக் குங்குமப்பூவின் மணம் தூக்கிற்று. யாகக்குண்டம் போல் தொட்டி முற்றத்தில் ஆவி புகைந்தது. முந்திரியும், வறுத்த திராக்ஷைப் பழங்களும் அத்தனை முழிகளாய் விழித்தன. சேமியா, ஆவியின் அசைவில் நெளிந்தது. அம்மாவின் கூந்தல் முடிச்சிலிருந்து ஒரு மல்லிப்பூ அதில் உதிர்ந்திருந்தது.

அன்றிரவு அம்மா மறுபடியும் சேமியா பாயசம் பண்ணினாள். நன்றாய்த்தானிருந்திருக்க வேண்டும். அம்மாவுக்கு வேறெப்படியும் பண்ண முடியாது. ஆனால், இது சலித்த பாயசம் பண்ணி, நாங்கள் யாருமே சுவைக்காது ஆஹுதியாகப் போன பாயசம்தான். பாயசம் எனக்கு.

அந்த நாளின் வேர்களே வேறு!

* * *

தாழம்பூ மணம் அறையில் பின்வாங்கி விட்டது. விளக்கைப் போட்டேன். சுவர் வெடிப்பில், பயந்தபடி எதையும் காணோம்! ஆனால் வெடிப்பு இப்போ அங்கு மட்டுமல்ல...

# அகிலா

வாசல் திரைச் சீலையைத் தள்ளியதும் கூடத்தில் கட்டிலில் படுத்திருந்த உருவத்தைக் கண்டதும் என் விலாசம் தேடல் முடிந்தது. உடனே தெளிந்துவிட்டது. அப்போது தான் எதிர் அறையிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்த ஒரு பெண்—பதினாறு. பதினேழு—என்னைக் கண்டதும் அவள் கண்கள் பூத்தன!

"அம்மா! அவர் வந்துட்டார்!" என்று சொல்லிக் கொண்டே நேரே என்னிடம் வந்து கைப்பெட்டியை வாங்கிக் கொண்டாள்.

"நீதான் வைதேஹியா?

சந்தோஷ வெட்கத்தில் முகம் லேசாய்க் குழம்பிற்று. மாநிறம்; குறு குறு.

"என்னை எப்படித் தெரிந்தது உனக்கு?"

முன்றானையால் முகத்தைத் துடைத்த வண்ணம் அடுக்குளிலிருந்து அவள் தாய் வந்தாள்.

"வாங்கோ! இதோ காப்பி கலந்துண்டு வரேன். வைதேஹி, மாமாவைக் கவனிச்சுக்கோ." வைதேஹி இன்னொரு அறைக்கு என்னை முன்னிட்டாள்.

"என்னை எப்படித் தெரிந்தது உனக்கு?"

"கோமதி கடிதம் போட்டிருந்தாள்."

"உன் அண்ணா எங்கே?"

"உங்களை அழைத்துவர ஸ்டேஷனுக்குப் போயிருக்கான்."

என் குரலில் லேசாய்ப் பொறுமையிழந்தேன். "அதெல்லாம் வேண்டாம்னு உன் அக்காளிடம் மெனக்கெட்டுச் சொல்லியிருந்தேனே!"

"ஏன் தப்பா?"

"இல்லை. ஏன் அந்த சிரமம்? வயதானவர்கள் எங்களுக்கெல்லாம் ஒரு அசட்டு ரோசம் உண்டு தெரியுமோன்னோ?"

புன்னகை புரிந்தாள். "என்னவோ அண்ணாவுக்கு— ஏன் எங்கள் எல்லாருக்குமே அதில் ஒரு சந்தோஷம்."

"என்னை முன்னே பின்னே பார்த்திராமல் அந்த நெரிசலில் என்னை எப்படி அடையாளம் கண்டுகொள்ள முடியும்? 'லா.ச.ரா!' என்று கத்துவானா?"

சிரித்தாள். " 'புத்ர' ஜாக்கெட்டில் உங்கள்முகம்..."

"டேயப்பா! அந்த போட்டோ பத்து வருஷமாச்சு. அப்போதைக்கிப்போ எவ்வளவு மாறிட்டேன்! எனக்கே தெரியறதே!"

"மாறினால்? முகத்தின் கோடுகள் வாகு மறைஞ்சுடுமா? அந்தப் புலிக் கண் அப்படியேதான் இருக்கு."

சரிதான். நான் என் இடத்துக்குத்தான் வந்திருக்கிறேன்.

சமையலறை வாசற்படியில் நின்றேன். "உள்ளே வரலாமா?"

"தாராளமா வாங்கோ. வரணும்."

இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடிக்க இது நான் பயன்படுத்தும் பாணி! ஆனால் எல்லா இடங்களிலும் உப

யோசிக்க முடியுமா? இடம் பார்த்து, எனக்கும் மனம் பிடித்த இடத்தில்தான் இந்த உரிமை கொண்டாடத் தோன்றும், கற்பனை ஸ்வரம் எழுவதுபோல்.

ஒரு அடுப்பில் உருளைக்கிழங்கு கறி வாணலியில் மொறு மொறுக்கிறது. அப்பளத்தைப் பொரித்து வடிகட்டியில் கூடு கட்டியிருக்கிறது. மாமி, பாயஸத்துக்கு அப்போத்தான் முந்திரிப் பருப்பை வறுத்துக் கொட்டிக் கொண்டிருக்கிறாள். கட்டை குட்டையான உடல்வாகு. மறுதீயில் இன்னொரு இலுப்பைச் சட்டியில் எண்ணெய் காய்கிறது. எவர்சில்வர் அடுக்கில் வடை மாவு. அதன் மேல் உருவி உதிர்த்த கறி வேப்பிலை.

''என்ன மாமியிது?''

''நான் மாமியில்லே. அகிலா. பிறந்தாம் ஆனைக்கா. உங்கள் ஊர் லால்குடியில், இடறி விழுந்தால் சப்தரிஷியும் சீமதியும் போல், எங்களூரில் வீட்டுக்கு வீடு ஒரு அகிலாண்டம்.''

"என் தகப்பனார் பேர் சப்தரிஷி. என் அம்மா ஸ்ரீமதி."

''பார்த்தேளா, நான் சொன்னது சரியாப் போச்சு!''

''சரி, என்ன இது அகிலா? மதுரையிலிருந்து ஊருக்குத் திரும்பற வழியில், கோமதியின் கட்டாயத்தில் இறங்கி ஒரு வேளை தங்கப்போறதுக்கு ஒரேயடியா அமர்க்களம் பண்ணிண்டிருக்கேள்!''

''வந்த விருந்தாளிக்கு ஒரு பாயஸத்தை வெச்சுட்டா விருந்தாயிடுமா? என்னவோ எங்கள் சந்தோஷம். இதோ என் பிள்ளையும் வந்துட்டான். கோபாலா! நீ அந்தண்டை போனே, மாமா இந்தண்டை வந்துட்டா.''

சோகம் பாசி பூத்த அந்த முகத்தில் புன்னகை அரும்பு கட்டுகையில் ஏதோ மருட்சி. மழை காலத்தில் அருணோதயம். முப்பது இருக்குமா? கூடக் காட்டுகிறது. உடல் சிறு கூடு. முதுகு லேசாக வளைந்திருக்கிறது.

என் நெஞ்சைப் படித்தாற்போல், அவன் தாய், ''பின்னே வேறெப்படியிருக்க முடியும்? அவர் மாபாரதமாப் படுத்துவிட்டபின் ரெண்டு உடன் பிறந்தாளுக்குக் கலியாணம் நடந்திருக்கு. வைதேஹி காத்திண்டிருக்கா, உடனே அவசரமில்லாவிட்டாலும், தம்பிமார்கள் மூணு பேரும் வெவ்வேறு ஊரிலே அவாளவால் படிப்பில் இக் கட்டான கட்டத்தில் இருக்கா. யானைத் தீனி தின்னும் படிப்புகள். எல்லாம் ஆசைதான், எப்படியேனும் தலை யெடுக்க மாட்டோமா? ஆரம்பிச்சதை நடுவிலும் விட முடியாது! பிராம்மணன் கரடியைக் கண்டிண்ட கதை தான்.''

''என்னம்மா, அவர் ஏதோ வந்த இடத்தில் அவரையும் நம் முறையீடுக்கு ஆளாக்கணுமா?''

பையனுக்கு லேசாய்க் கேலி. நிறைய ரோசம்.

"அதுக்கில்லேடா. மூத்ததாய்ப் பிறக்கக் கூடாதுன்னு."

பையன் வாய்விட்டுச் சிரித்துவிட்டான். ''அதெல்லாம் உன் இஷ்டமா என் இஷ்டமா? பிறக்கணும்னு இருந்தால் எங்கானும் ஜனிச்சுத்தானே ஆகணும்! எல்லாம் நரியூருக்குப் பயந்து புலியூருக்குப் போன சமாச்சாரம்...

''அதுக்கில்லேடா..''

''வேண்டாம்மா, விட்டுத் தள்ளு. நீ பேசறது வேதாந் தமா, யதார்த்தமா? இதில் ஏதேனும் பலனுண்டா?''

''மாமாவுக்குத் தெரியாதது இல்லை. கட்டுத் தறி போல, கோபாலனின் ஊணின தைரியம் இல்லாட்டா, எங்கள்மேல் எப்பவோ புல் முளைச்சிருக்கும்...''

''சரி அம்மா, விடேன்.''

சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் இதெல் லாம் எங்கே கொண்டுபோய் விடப்போகிறதோ என்று ஒரு திகைப்பு. தீர்ப்பு ஆனவன், தீர்ப்பு நிறைவேறக் காத் திருக்கும் ஒரு விரக்தி, கூடவே குழப்பம்...

அந்தக் கண்களில் நாட்டம் இல்லை. விட்டத்தில் அல்ல எங்கேயோவிற்கு அப்பால் பதிந்திருந்தது. லக்ஷணமான முகம்—உதடுகள் காய்ந்திருக்கின்றன. உதடுகள் அசைகின்றன. குனிந்து ஒட்டுக்கேட்க முயல்கிறேன்.

ஏதோ ஸ்லோகம்.

"அப்பா வால்மீகி ராமாயணத்தில் அத்தாரிட்டி கட்டுரைகள்கூட எழுதியிருக்கிறார். உங்களிடம் காட்டணும். திடீரென்று இப்படித்தான் மத்தாப்பூ மாதிரி ஸ்லோகங்கள் கொட்டும். இன்னும் உரக்கவே கூடச் சொல்வார். வந்தமாதிரியே அடங்கிவிடும். திடீர்னு சுய நினைவுகூட அபூர்வமா, கண்ணில் தெரியும். ஆனால் அதையொட்டிப் பேச்சைக் கூட்டுமுன் சாளரம் மூடிவிடும்."

"இவருக்குத் தென்பு எப்படி?"

மாமி, "உப்பில்லாமல் சாதத்தில் மோர்விட்டு மையாக் கரைச்சு, திப்பியை எறிஞ்சுட்டு அந்த அமிர்தத்தைக் குழந்தைக்குச் செலுத்தறமாதிரிப் புகட்டணும். ஒருநாள் தொட்டுக்க ரஸத்தெளிவு ஒரே ஒரு சொட்டு... நாங்கள் பட்டபாடு, புரைக்கேறி இழுத்துண்டு போன மூச்சு திரும்பி வரதுக்குள் எங்கள் உசிர் போய்ப் போய்த் திரும்பி வந்தது."

அவன், "வேடிக்கையாக்கூட இருக்கு. படுக்கையை, அரைத் துணியை மாத்த அஞ்சு நிமிஷம் உக்காத்தி வெச்சாலே B.P. தேரையாத் தாவறது. ஆபீஸில், திடீர்னு மயக்கம் போட்டு மடேர்னு விழுந்தவரை காரில் போட்டுண்டு வந்து கட்டிலில் விட்டா. ஆச்சு, வருஷம் மூணு ஆறது. இதே ஸ்டேஜ். இதே ஸ்டேட்டுத்தான். அல்லோபத்திக், ஆயுர்வேதா, சித்தா—காட்டாத ஸ்பெஷலிஸ்ட் இல்லை. ஸ்ட்ரோக், மூளையில் தாக்கி, லக்ஷோப லக்ஷோப ஸெல்களில் எதையோ ஒண்ணை அழுத்திண்டிருக்காம். எக்ஸ்ரேக்குப் பிடிபடல்ல. சிகிச்சையும் பண்ணமுடியாது."

"விமோசனமேயில்லையா?"

"சொல்லமுடியாது. அழுந்தியிருக்கும் ஸெல் தானாவே தற்செயலா விடுபட்டால், கோமா தெளிந்து, நினைவு, உடலில் செயல் எல்லாமே, உடனே திரும்பிவிடலாமாம். இல்லை இப்படியே..."

உதட்டைப் பிதுக்கிக் கையை விரித்தான்.

"இந்த மூணு வருஷமா என்ன நடந்துண்டிருக்கு? 'உயிரோடுதானிருக்கேன்'னு அவரும் இருக்கார். நாங்களும் இருக்கோம்னு வளைய வரோம். எந்தக் காரியம் நிக்கறது, நிறுத்தமுடியறது?"

"என் உடம்பிலே ஆயிரம் கோளாறு இருக்கு. சர்க்கரை, B.P. அல்ஸர்—அதெல்லாம் சொல்லிக்கற சமாச்சாரமில்லை. விறகு வெட்டிக்கு வைத்யம் விறகுக் கட்டையாலேயேதான்— நல்லதாப் பேசுவோம். இடையிலே கோபாலனுக்குக் கலியாணமாகி, நாட்டுப்பொண்ணுக்கு நேத்து வளைகாப்பு. நல்ல சம்பந்தமா வந்தது. விடமுடியல்லே. இடையில் அவன் ஆபீசில் மூணு மாதம் ஏதோ ட்ரெயினிங்குக்கு அமெரிக்காவுக்கு அனுப்பி வெச்சா."

"அம்மா ஒண்ணு விடமாட்டாள்."

"ஏன் விடணும்? இத்தனை கஷ்டத்தில் இருக்கிற ஒண்ணு ரெண்டு தென்பைச் சொல்லிப் பலத்தை வரவழைச்சுக்கத்தான். இந்த மூணு வருஷத்தில் எங்கள் எல்லோருக்கும் கண்ணீரே வறண்டுபோச்சு" என்று மாமி சொல்லும் போதே மாமிக்குக் கண் துளும்பிற்று.

நான் ஊர் திரும்பி ஒரு மாதமாகியிருக்கும். மஞ்சள் தடவி, திருச்சியிலிருந்து கடிதம்.

—செள. பிரேமாவுக்கு வெள்ளிக்கிழமை காலை 8 மணிக்குப் பெண் பிறந்தது. தாயும் குழந்தையும் செளக்யம். (தேதி—நினைவு இப்போ இல்லை) அன்று புண்ய வசனம்—

பி. கு: குழந்தைக்கு அகிலாண்டம் என்று பெயரிடப் போகிறோம்.

நள்ளிரவில் இன்று பௌர்ணமி-கனவுள் தந்தி வாத்யத்தின் தேம்பல் கேட்டு விழித்துக்கொண்டேன். அல்லது விழித்துக்கொண்டேனா? மண்டை மயிர் விறைத்துக்கொண்டது. இடம் தாண்டி, காலம் தாண்டி, வையம் பூரா வியாபித்த ஓசையலைகளின் விதிர் விதிர்ப்பில்-இப்படித்தான் என்னால் விடுபிரி காண முடிகிறது-மிதந்து வந்த ஸாரங்கியின் ஸ்ருதி மீட்டலில், நினைவோட்டின் எதிரொலிப்பில், நான் உடனே அடையாளம் கண்டுகொண்ட குரலில், சொல்பாகு நேர்த்தியாகச் சுழன்றது.

—மனிதனுக்கு ஒரு வருடம் தேவர்க்கொரு நாள். தேவர்க்கொரு வருடம் பிரம்மனுக்கொரு நாள். இந்தக் கணித்தில் ஏணியின் உச்சிப்படி ஈசுவரனை அடையும்போது, காலம் எவ்வளவு பெரிய பிதற்றல்! ஏணியில், ஹே ராமா! உன்னிடம் எத்தனாம்படி?

காம்பவுண்டில் எங்கோ ஒரு தென்னை மட்டை விழுந்தது. மரத்தின் மூச்சேபோல் அந்த ஓசையில்தான் எவ்வளவு சோகம்!

—கல்லோ, உடலோ, தேன்கூட்டைப் பன்முறை பழிக்கும் மூளையின் லக்ஷோப லக்ஷ அறைக் கண்களோ-அங்கு திக்குத் தப்பித் திரியும் ப்ரக்ஞைக்கு எல்லாமே சிறைதான். காத்திருக்கும் நேரம் அனைத்தும் சிறை நேரம்தான். விடுதலையும் ஒரு தோலுரிப்புத்தான். எத்தனை தோல் முழுச் சூன்யத்துக்கு உரிக்கணுமோ? முழுமை என்று ஒன்றே உண்டோ? ராமா!...

மறுநாள், கறுப்புத் தடவி ஒரு கடிதம் வந்தது. விடுதலை கிடைத்துவிட்டது போலும்!

—நிகழும் காளயுக்தி வருஷம்...

விழியை மறைத்தது. கண்ணாடியைத் தேடினேன். மூக்கில்தான் இருந்தது. இத்தனைக்கும் அங்கு தங்கினது ஒரு இரவுதான். அதற்கே இவ்வளவு சதையாட்டமா?

இந்த வயதில் எங்களுக்கு வேண்டியதென்ன? இனம் தெரிந்த அன்பும், ஆதரவும்தான். ஒரு துளி கிடைத்தாலும் நினைவு சேமித்து வைத்துக்கொள்ளும் அமுத தாரை.

கோபாலா, சுமைதாங்கிக்குத் தனி நன்றி செலுத்தும் வழிப்போக்கன் இருக்கானோ? வழியில் கண்டதும் பொதியை இறக்கு... அவ்வளவுதான் யாருக்கும் தெரிந்தது.

யாருமில்லாத சமயத்தில்தான் யாருக்கு உண்டோ அவர்க்கு மட்டும் ஆண்டவன் தரிசனம் கிட்டும்.

ஆபீஸ் போக வேண்டியவாள் எப்பவோ போயாச்சு.

மன்னி கிணற்றடியில் துணி துவைத்துக்கொண்டிருந்தாள். ஐயோ, ஜலத்தின் பிசுக்கு! சோப்பும் நுரைக்காது. பருப்பும் வேகாது.

வைதேஹி, பள்ளிக்குப் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருந்தாள். புத்தகப் பையுள் இந்த டிபன் டப்பா போகாமல் ஏன் மக்கர் பண்றது?

பின்னாலிருந்து விவரிக்க முடியாத ஒரு சக்தி உந்த, முகம் திரும்பினாள். அப்பா கட்டிலில் எழுந்து உட்கார்ந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்தார்!

பூமி, தான் சுழலும் அச்சில் இன்னும் ஒரு பின்னம் சாய்ந்தது.

"அப்பா!" அலறிக்கொண்டு அணைக்க ஓடி வந்தவள், சட்டென அச்சங் கண்டு கட்டிலண்டை நின்றுவிட்டாள். எப்படியும் நாலு வருடத் தூக்கத்திலிருந்து விழித்த இந்த மனுஷன் புது மனுஷன்தானே! அவர் பார்வை சூழ் நிலையைக் கொஞ்சம் கொஞ்சமாக நோட்டமெடுத்துக் கொண்டிருந்தது. அது சென்றவிடமெல்லாம் அவர் நாட்டமும் தொடர்ந்தது. திகிலில் கையைப் பிசைந்து கொண்டு நின்றாள்.

ஹூம்-இது வைதேஹிதான், ஆனால் திடீரென நேத்திக்கு இன்னிக்கு எப்படி இவ்வளவு வளர்த்தி! எல்லாமே ஏதேதோ மாறியிருக்கு. கோபாலன், கலியாணம், கோமதி, சீனு இவாள்ளாம் எங்கே? வீடே ஏதோ வெறிச்சோன்னு —இது யாரோ பெண், புடவையைப் பிழிஞ்சு முறுக்கித் தோளில் போட்டுண்டு ஸ்வாதீனமா உள்ளேயிருந்து வரா. பார்த்த முகமாயில்லே-வாசற்படியில் கொழ, கொழன்னு ஒரு குழந்தை எச்சிலைக் கொப்புளிச்சு விளையாடிண்டிருக்கு! அகிலாவைக் கேட்டால்தான் தெரியும். அகிலா எங்கே? ''ஏ அகிலா! அகிலா!''

பூஜையறையில், இரண்டு வெள்ளி அகல்களுக்கிடையே, மாலையிட்ட ஒரு பெரிய போட்டோவிலிருந்து அகிலா அவரைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

# ஸர்ப்பம்

அக்காவுக்கு என்மேல் உசிர். அதை முதலில் சொல்லி யாகணும். ம்... ம்... ம்... அதைப்பற்றிச் சந்தேகமில்லை. சந்தேகப்படக் கூடாது. சந்தேகப்பட்டால் அடுத்த ஜன்மத்தில் புழுவாய்த்தான் பிறப்பேன். எதிர்வீட்டு எண்ணெய்ச் செட்டியார் அவர் திண்ணையிலேயே கடை வைத்திருக்கிறார்—அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறேன், துரோகம் எண்ணறவா, பண்றவா எல்லாரும் புழுவாய்ப் பிறப்பாளாம். பேச்சுவாக்கில் இதை அம்மாவிடம் சொன்னப்போ, அம்மா 'பக்'குனு வாய்விட்டுச் சிரித்துவிட்டாள்.

"அடி அசடே!"

அம்மா தையல் மெஷினை ஓட்டிக்கொண்டிருந்தாள். உருப்படியா ஒரு பாவாடை தைச்சு நாங்கள் அறியோம். ஆனால் மெஷின் என்னவோ மும்மரமா கொட கொடா கொட கொடா—

"என்னம்மா?"

"அதுக்கு"ன்னு பிறந்தவனே—

"எதுக்கு?"

"சரி, விட்டுத்தள்ளு..."

அம்மாவே அப்படித்தான். பாதியிலேயே அவளுக்கு அலுப்புத் தட்டிவிடும்.

* * *

முதலில் அக்கா.

அடுத்து ஸ்ரீதர்.

—ரமேஷ்—

அப்புறம் நீண்ட இடைவேளைக்குப்பின் நான். கஷ்கு முஷ்கு குண்டச்சி.

அண்ணா செல்லமா வயத்தில் குத்துவான். 'வுண்'ணுனு கை எகிறும்.

அக்கா என்னை தூக்கி வெச்சிக்க ஆசைப்படுவாள். முடியற காரியமா? அவளோ நோஞ்சான். என்னைக் கீழே போட்டுக்கொண்டு தானும் என்மேல் விழுவாள். வீல் என்று அலறுவேன். பாதிது பயம்தான்.

ஸ்ரீதர் கண்ணாடியில் வகிடு எடுத்துக்கொண்டே "பூசணி விரிஞ்சுதா பார்! சரி இன்னிக்கு அவியலுக்காச்சு."

"எனக்கு பொறிச்ச கூட்டுத்தான் பிடிக்கும்."

ரமேஷ் அன்றைய 'டைம்டேபிள்' புத்தகங்களைப் பையுள் திணித்துக் கொண்டிருக்கிறான்.

"ஆமாம், அம்மா பண்ற அவியலில் பூசணிதான் மெயின். வேறு தான் ஏது?"

"லங்கணி குரலைப் பாரு! கோடையிடி அங்கம்மா!"

அம்மா காதிலேயே வாங்கிக்கமாட்டாள், காலையில்லை மாலையில்லை. வேளையில்லை, பொழுதில்லை. காலை நீட்டிக்கொண்டு புத்தகம் படித்துக்கொண்டிருப்பாள். சூழ பழைய குண்டூசி, பேசும் படம், பிலிமாலயா, சினிமா பாட்டுப் புத்தகங்கள் வாரியிறைந்து கிடக்க, அதன் நடுவே அம்மா—அதிலே ஏதோ ஒரு குஷி, அவள் வேண்டியதெல்லாம் நிறைஞ்சிருக்கிற மாதிரி.

நாக்கைத் தொட்டு பென்சில் கோட்டை அழிச்ச மாதிரி, நினைவுகள் மங்கித் தெரியறது.

* * *

அக்கா டிரஸ் பண்ணிண்டிருக்காள். கண்ணாடி எதிரே நிக்கறா. நினைச்சு நினைச்சுப் பவுடரை முகத்தில் அப்பிக்கிறா. உடனே துடைக்கிறா. தோள்பட்டையில் மேலாக்கை அலை அலையாச் சீண்டிக்கிறா. அக்காவுக்கு அப்படியொண்ணும் வயசாயிடல்லே. ஆனால் அவளை இன்னிக்குப் பொண் பார்க்க வரா. (எல்லாம் காலா காலத்துலே—நாங்கள் கண் மூடறத்துக்கு முன்னால்—பெரியவா பேச்சு) ஆறு மணிக்கு வேளை பார்த்திருக்கு. ஆனால் மூணு மணியிலிருந்து திமிலோகப்படறது. அக்கா மத்தியானம் காலேஜுக்கு மட்டம் அடிச்சுட்டா. அப்போலேருந்து கண்ணாடியிலே தன்னை இன்னும் தேடிண்டிருக்கா. இந்தப் பேச்சு புரியலேதான், ஆனால் பெரியவா சொல்லிக் கொடுத்ததுதான். நானும் ஸ்கூலுக்கு 'டோக்கர்' கொடுத்துட்டேன். ஏண்டிம்மா நீ போகல்லேனா நான் மட்டும் போகணுமோ?

பந்தைச் சுவத்தில் எறிஞ்சு எறிஞ்சு புடிச்சுண்டிருக்கேன். இருபத்தஞ்சு கேம் எடுத்துட்டேன்.

"வஸந்தீ வாயேன்! காப்பி ஆறிப்போறது!

"வேலையாய் இருக்கேன் அம்மா! இப்போ வரமுடியாது போ!

"நான் மட்டும் இங்கே ஈ ஓட்டிண்டிருக்கேனா?"

அக்கா பதில் பேசவில்லை. பேசமாட்டாள். ஒரு தடவை பேசியாச்சு. அவ்வளவுதான். அக்கா கண்ணாடியை முறைச்சாள். நெற்றியில் வேர்வை முத்திட்டது. இமையோரம் மை, ஈட்டி மாதிரி கூர்ப்பா குத்திண்டு வரணும்னு பார்க்கறா இன்னும் சரியா வரல்லே. இப்படியே இன்னும் கொஞ்சநாழி நின்னான்னா முழு மேக்கப்பும் வழிஞ்சோட ஆரம்பிச்சுடும்.

முக்கிண்டு முனகிண்டு கையில் காபியோடு அம்மா சமையலறையிலிருந்து வரா. அப்படி முக்கி முனகற வயசுமில்லே, உடம்புமில்லே. ஆனால் அது அம்மாவோட 'மேக் அப்.'

பந்து சுவத்திலிருந்து எழும்பற பாதையில் அப்போ அம்மாதான் வந்தாளோ இல்லே தன் பாதை பிசகி பந்து அம்மாவை தேடிண்டு போச்சோ?

பந்து அம்மா கையிலிருந்து டம்ளரைப் பிடுங்கி தரையில் ''டிங் டிங் டிங்'' தம்ளர் உருண்டோடித்து. அக்கா அபிஷேக சுந்தரி!

இது எப்படி, ஏது, இசைகேடா—என்னைக் கேக்காதீங்கோ.

ஆனால் அம்மா என்னைத்தான் கேட்டா? எப்படிக் கேட்டா? கையாலும் காலாலும்—ஆமா அம்மா என்னைக் காலால் உதைச்சா. முதுகிலே வேறே மொத்து மொத்துன்னு தகரக் கொட்டா மேலே மழையிறங்கிற மாதிரி, தனக்கு மூச்சு இறைக்கிற வரைக்கும் அடிச்சிட்டு, அம்மா அக்காவைக் கட்டிண்டு அழ ஆரம்பிச்சுட்டா.

எனக்கு அழுகை வரல்லே. என்னவோ திக்பிரமை. காலடியில் காப்பி சேறாய், குட்டையாய்த் தேங்கித்து. ஒரு தினுசு சேப்பா, சந்தனக் குழம்பாட்டம், பார்க்கவே ஆசையா, குடிக்கவே ஆசையா அவ்வளவுதான். எனக்கு மத்ததெல்லாம் மறந்துபோச்சு. குப்புறப் படுத்துண்டு உறிஞ்ச ஆரம்பிச்சுட்டேன்.

எதிரே சுவத்தில் காலண்டரில் ஒரு புலி கரையோரம் புதர்களிலிருந்து வெளிப்பட்டு, முன்னங்காலில் குடல் திறந்த மானை இடுக்கிண்டு—குளமா ஆறா தெரியல்லே—

ஜலத்தை நாக்காலே நக்கி (என்ன நாக்குச் சிவப்பு! குடிச் சுண்டு என்னைப் பார்த்து உர்-உர்-உர்-மஞ்சள் கண்கள்) காத்தில்—காலண்டர் அசைவில் புலியும் அசைஞ்சுது. எங்களுக்கிடையில் திடீர்னு ஏதோ ஒரு உறவு, உன்னைப்போல் நானா? என்னைப்போல் நீயா? ஏதோ ஒத்துமை.

அம்மாவும் அக்காவும் அழக்கூட மறந்து என்னையே பார்த்துண்டிருக்கா. அவா முகத்தில் ஒரு வெறுப்பு ஆச்சர்யம்.

பயம்?

என்னைக் கண்டு ஏன் பயப்படனும்?

நான் என்ன புலியா?

அவாளவாளுக்கு இஷ்டப்படி நிறைவேறாட்டால், அதுக்கும் பழிபோட ஏன் பிறர் தலையைத் தேடறா?

'காப்பியையா தட்டிவிட்டா, கல்யாணத்தையேன்னா தட்டிவிட்டா பாவி!'

"அது ஒரு அபசகுனின்னு அப்பவே எனக்குத் தெரியும்!"

''குழந்தையை ஏண்டி குத்தம் சொல்றே?''

''குழந்தையாம்! குழந்தையைப் பாரு! இப்பவே குதிராட்டம்! சப்பாத்திக் கிழங்குன்னா அப்படி ஒரு வளை வளைக்கிறது. இட்டுப் போட்டு தோளே விட்டுப்போறது. இப்படியே பெருத்துண்டு போனால் ஒருநாள், 'டொப்'னு வெடிச்சுடுவேன்னு சொல்லியும் பார்த்தாச்சி. கேட்டால் தானே?''

"அவள் என்ன செய்வாள்? நீ பண்றே. அவள் தின்கறாள். இதென்ன நியாயம் மடி நிறைய பாலை நிறுத்திண்டு கன்னுக்குட்டிக்கு வாய்ப்பூட்டு மாதிரி.''

அம்மா அப்பாவை ஒரு மாதிரியாப் பாக்கறா, அப்பா தொண்டையை கனைச்சுக்கறார். ரெண்டுபேரும் சிரிச்சுக்கறா. அவாளுக்குள்ளே என்ன ரஹஸ்யமோ? என்ன அர்த்தமோ? என்ன ஆனந்தமோ?

காப்பி கொட்டினதிலிருந்து அஞ்சு வருஷமா அலைஞ்சாறது! அக்காவுக்கு இன்னும் குதிரல்லே. பெரியவா ஒத்தரும் கண்ணை மூடிடல்லே, கொட்டாப்புளியாத்தான் வளைய வரா.

"தோ பார் தங்கம்மா, இடிச்ச புளியா இருக்கேன்னு என்னை குத்தம் சொல்லிண்டு திரியாதே, எட்டுலே செவ்வாய். போறாத்துக்கு மூல நக்ஷத்திரம் வேறே. ஆயிரம் கண்டிஷன்லே வரன் தேட வேண்டியிருக்கு. இன்னும் கேக்கப் போனா நீ என்ன ரம்பையாப் பெத்து வெச்சிருக்காயா?

"இதன்னடியம்மா கொடூரம்? கூரையே தூத்தினா—"

"உன் பழமொழியெல்லாம் மூட்டை கட்டி வை. யதார்த்தம்னு ஒண்ணு இருக்கு. நீ ஓடி ஒளிஞ்சாலும் மூஞ்சியைப் பொத்திண்டாலும் குத்துக்கல்லாட்டம் அது உன் கண்ணுக்குள்ளேயே முளைச்சு நிக்கும் பாரு."

"குழந்தைக்குக் கொஞ்சம் விளக்குப் பார்வைன்னா அதுக்கு இப்படிக் குத்தம் அடிக்கிறதா? அதிர்ஷ்டமாக்கும் தெரிஞ்சுக்கோங்கோ!"

"யார் வேண்டாம்னா? அவளுக்கு அதிர்ஷ்டம் வந்தால் தான் நமக்கு விடுதலை. எங்கே விடுதலை? அப்புறம் இந்தக் கரடிக்குட்டி காத்துண்டிருக்கு. இதுக்கு எவன் லபிச்சிருக்கானோ?"

அப்பா அணைப்புள் நான் ஒடுங்கிக்கறேன், ஒளிஞ்சுக்கிறேன். என்னிக்கும் நான் அப்பா செல்லம்.

"மூத்ததுக்கு முன்னால் வழியைப் பாருங்கோ!"

தண்டவாளம் பின்னிக்கற மாதிரி அக்காவுக்குச் சில சமயங்கள் கண் 'க்ராஸ்' ஆயிடும். ஏதேனும் யோசனையா இருந்தாலோ, பார்வை ஒரு இடத்தில் நிலைச்சுப் போனாலோ. "வஸந்தீ! வஸந்தீ!" உரக்க அழைச்சு முகத்தெதிரே, சண்டிகேசுவரர் சன்னிதி மாதிரி விரலைச் சுண்டிக் கலைச்சாகணும். சிமிட்டி தரை வெடிச்சாப்போல, முகத்தில் வேறே பரு வந்து வந்து, போய் போய் வந்து வந்து... இப்போ கொஞ்ச நாளா பல் வேறே எதோ தகறாறு பண்றது. நல்ல நாளுலேயே பல் மறைய வாயை மூட முடியறதில்லே. நான் அவளைக் கேலி பண்ணல்லே. பாவம்னு பரிதபிக்கவே மனசு கஷ்டப்படறது.

அன்னிக்கு அவள் மேலேயே காப்பியைக் கொட்டினாலும் அக்காவுக்கு என் மேலே உசிர்தான். எனக்குப் பின்னிக் குளிப்பாட்டி, மூக்கைச் சிந்தி, பள்ளிக்கூடத்துக்கு உடுத்தி, என் ஹோம் ஒர்க்கைத் தான் எழுதிக்கொடுத்து—அக்கா எனக்குப் பிரியம் காட்டக் காட்ட என் ஆசைகளிலும் அசடு வழியும். திடீர்னு ஒரு ஏணை கட்டி என்னை அதில் போட்டு ஆட்டணும் என்பேன்.

"தூளிகட்டித் தூங்கித் துர்சனாக் காண இன்னும் ரெண்டு வயசு போகட்டும்!"

"என்னம்மா பெரிசா கேட்டுட்டா? ஆடிட்டுப் போறா!"

"நீ அவளுக்குத் தூளி கட்டி உன் கல்யாணத்தை எதிர் பார்த்து வாங்கின புடவையெல்லாம் பாழாப் போறது."

"போனால் போகட்டும் போ! பொத்திப் பொத்தி வச்சிண்டு என்னத்தைக் கண்டோம்?"

தூளிக்குப் பின்னால் அக்கா குரல் லேசா நடுங்கித்தோ? தூளியில் படுத்துண்டா நன்னாத்தானிருக்கு. ஆட்டறப்போ என்னவோ ஆகாசத்துலே மிதக்கறாப்போல, நானே என்

உடம்பை விட்டுக் கயண்டு, என் பிறப்பின் திரண்ட எண்ணமா, இவ்வளவு பரந்த உலகத்துலே நான் எவ்வளவு பெரிய எண்ணமா இருக்க முடியும்? அணுவுக்கும் அணுவா யார் கண்ணுக்கும் தெரியாமல் என் மனசுக்கு மட்டும் தெரிஞ்சுண்டு பரந்த வெளியில் அது என்னை எடுத்துப்போற வழியில் மிதந்துண்டு என்னைப்போல், எனக்கு முன்னால் மொதக்கொண்டே, தெரிஞ்சவாளும் தெரியாதவளுமாய் மிதந்துண்டிருக்கற வாளுடன் நானும் ஒருத்தியாய், கவிதையாய், கதையாய், கற்பனையாய், மனசின் மகரந்தப் பொடியாய்—

—இதெல்லாம் இந்தப் பாஷையெல்லாம் எனக்கு அப்படி மிதக்கறப்போ வந்ததில்லை. மிதந்ததைப் பின்னால்— ரொம்ப நாளுக்குப் பின்னால் நெனைச்சுப் பாக்கறப்போ தோணினது—

''ஜனனீ! தூங்கிட்டாயா?''

யாரோ தூளிக்குள் எட்டிப் பாக்கறா.

கண்ணை மூடிண்டு பாசாங்கு பண்றேன்—

அதில்—

என் கண் இமைமேல் ஒரு நெருப்புச் சொட்டு விழுந்து ஈரமாறது.

பயமாயிருக்கு.

ஏன்?

—யாரும் ஒத்தரையொருத்தர் கேட்டுக்கொள்ளாமல் ஆனால் வீடு முழுக்க மௌனத்தில் பரவிய ஒரே கேள்வி— வீட்டையே தன் கொக்கித் தலையில் ஏந்திக்கொண்டு—

* * *

அஹ் ஹா!

கெட்டி மேளம் கொட்றது. சந்தனம் ஜமக்காளத்தில் சேறு பாயுது. பூவும் அக்ஷதையும் எங்கு பார்த்தாலும் வாரி இறையறது.

ஒருவழியா வந்துடுத்து கல்யாணம். பங்குனி மாசம் பத்தாந்தேதி பருப்புக் கல்யாணம்! கூட்டம் தெரியறது. பந்திக்குப்பந்தி இட்ட எச்சில் காயுமுன் இலை மேல் இலை போட்டு—தரையில் காயாத ஒரு நசநசப்பு—எத்தனை ஊதுவத்தி ஏத்திவச்சு சாம்பிராணிப் புகை போட்டு என்ன? ஹூம்—

"அம்மா, பாட்டி உங்கள் மடி ஆசாரம் எல்லாம் மலை ஏறிப்போச்சே!"

"அத்துரு இந்தக் கேள்வி கேக்கணும்னு காத்திருந்தையா? மூச்சு விட்றோமா பாருன்னு நாங்கள் இருக்கோம்! எல்லாம் பாலிகை தெளிச்சாச்சு—எல்லா தோஷத்துக்கும் நிவாரணி!" அதைச் சொல்லு. எல்லாத்துக்கும் ஒரு பதில் வெச்சிருங்கோ எதையும் ஒத்துக்காதேங்கோ.

கலியாண கூடத்தில் ஒதுக்கமா ஒரு உள்ளே மட்டும் ப்ரமாதமா அலங்கரிச்சாறது. மத்தியானம் மூணு மணிலேருந்து நடக்கிறது. புதுசாக் கட்டில், பீரோ, ஆள் உயரத்துக்குக் கண்ணாடி. மெத்தை, தலகாணி, பக்கத்திலே டீபாய், கட்டில சுத்திப் பூச்சரங்கள்—பாக்கறதுக்கே ஆசையாயிருக்கு—கலர் பல்பு—

"இங்கே என்ன நடக்கப்போறது?"

கிழங்கள். நடுவயசுகள், சிறிசுகள் எல்லாம் ஒண்ணை ஒண்ணு பார்த்துண்டு திருட்டுத்தனமா சிரிச்சுக்கறதுகள்.

"என்னவோ நடக்கப்போறது. உனக்கென்ன இப்போ அதைப்பத்தி?"

காலால் பூமியை உதைக்கறேன். "எனக்குத் தெரிஞ்சுக்கணும்"

"அக்கா இங்கே படுத்துக்கப்போறா—"

"நானும் அக்காவோடு படுத்துப்பேன்—"

ஒரே 'கொல்'!

"சொன்னாலும் சொன்னையே அப்படிச் சொல்லு—"

கையை முஷ்டித்துக்கொண்டு ஆட்டினேன்.

"ஆமாம் அப்படித்தான்."

"அந்த ரெண்டுங்கெட்டானோட என்னடி பேச்சு. செல்லக் கேடே நாச்சியாரேன்னு இருக்கு அதுவும்—"

நிஜம்மாவே கவலை வந்துடுத்து. அக்காவை விட்டு ஒரு நாள்கூடப் பிரியாமல் இருந்துட்டு, இன்னிக்கு என்னமோ இவாள்ளாம் புதுசாக் கிளப்பறாளே!

கூடத்தில் ஒரு பக்கம் பந்தி. மறுபக்கம் கச்சேரி நடந்துண்டிருக்கு. அக்காவும் மாப்பிள்ளையும் சோபாவுலே உக்காந்துண்டு இந்த லோகத்து சிந்தனையே இல்லாமல் அப்படி இழைஞ்சுண்டிருக்கா. எனக்கு அழுகையே வந்துடுத்து. இப்படி ஒரு அக்ரமமா?

மணவறைக் கதவு, தொட்டதும் திறந்துக்கறது. தாளிட மறந்துட்டா. நானும் சத்தம் போடாமல் உள்ளே நுழையறேன். உள்ளே வெளிச்சம் திகுதிகுன்னு எரியறது. முழு அலங்காரமும் அப்போத்தான் முடிஞ்சிருக்கு. சுவத்திலே ரெண்டு மூணு படங்கள் புதுசா வந்திருக்கு. ஐயே! பிடிக்கல்லே! படுக்கையில் பூக்கள் வேணும்னு சிதறிக்கிடக்கு. கட்டில் பக்கத்தில் டீப்பாய்மேல் வெள்ளிக் கூஜாவை துணியில் மணிதைத்து 'எம்பிராய்டரி' கவர் மூடியிருக்கு. திறந்து பார்த்தால், சேறாட்டம் பால். சாரைப் பருப்பு. குங்குமப்பூ மிதக்கிறது. பக்கத்துலே, கண்ணாடித் தட்டில் அடுக்கடுக்கா மைசூர்ப்பாகு. பால் பர்பி, பாதுஷா, குலோப் ஜாமுன், விஜிடபிள் சோமாசி, மங்கு மங்குனு அஞ்சு பந்து. திரட்டுப்பால்-ஐயோ! திரட்டுப்பால்னா நேக்கு உசிராச்சே!

பிட்டுப் போட்டுக்கறேன்.

ஆனால் திரட்டுப்பாலோடு நிக்கறதா? ருசி பார்த்தால் ஒண்ணையொண்ணு தூக்கியடிக்கிறது. கூஜாவை அப்படியே வாயில் கவுத்துண்டு சட்டையிலே சிந்திப்போச்சு—புதுச் சட்டை என்ன பண்றது? மெத்தையில் நீட்டிட்டேன் சும்மா ஒரு தடவை—என்கீழ் அழுந்தி மறுபடியும் ஏந்திக் கொடுத்த சுகம் இருக்கே, மல்லி மயக்கம் வேறே கண்ணைச் செருகிடுத்து.

முழிப்பு வந்தப்போ—யாரோ முரட்டுத்தனமாத்தான் எழுப்பியிருக்கா-என்னைச் சுத்திக் கூட்டம். கண்ணைக் கசக்கிக்கறேன். ஆமாம், சாஸ்திரிகள். கலியாணப் பெண். மாப்பிள்ளை அம்மா, பின்னாலே நாலைஞ்சு பெண்டுக சிரிச்சுண்டு, குமுங்கிண்டு. அம்மா முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கறது. அப்படிக் குமுர்றா. மாப்பிள்ளே அசடு வழிஞ்சிண்டு நிக்கறார். அக்கா மூஞ்சிலே 'ஆட்டோமெடிக் ஸிக்னல் அத்தனையும் விளையாடறது. தலை குனிஞ்சுட்டா. இது வேறே குனியல். கலியாணப் பெண்ணின் குனியல் இல்லை.

"Father bear"

"மதர் bear"

"பேபி bear; ஸம் ஒன் ஈஸ் ஸ்லிப்பிங் இன் மை பெட்!"

"ஏந்திரும்மா குழந்தை!" சாஸ்திரிகள்; என்ன கனிவு! மெத்தையில் பட்சணம் சிந்திக்கிடக்கு.

"வாடி இங்கே!" பல்லைக் கடிச்சுண்டு அம்மா என்னைக் கரகரன்னு இழுத்துண்டு போறா.

"குழந்தையை ஒண்ணும் பண்ணாதேங்கோ!"

"ஒண்ணும் பண்ணாதேயா?" அம்மா என்னை இழுத்துண்டு போய், எனக்குத் தூக்கம் தெளியல்லே—ஒரு இருட்

டறையில் தள்ளி மூஞ்சியிலும் முதுகிலும் மாரிலும் இங்கு தான்னு இல்லாமல் கண்ட இடத்தில் அடி அடின்னு அடிச் சிருக்கா பாரு, அடிச்சு, மண் மிதிச்சு—

"என்னடி உன் அக்காவுக்கு, நீ தங்கையா? சக்களத் தியா?"

என்னவோ எனக்குப் புரியாத வார்த்தை.

"அப்படியே சாவு! எனக்கு அக்கரையில்லை." கதவை இழுத்து அந்தப்பக்கம் தாளிட்டுண்டு போயிட்டா.

அழுது அழுது வாயெச்சில் நூல் நூத்து, கண்ணீரும் எச்சிலுமா பரத்தியிருந்த உருளைக்கிழங்கு மேலே. அந்தக் கோஸ் நாத்தம், பச்சைமிளகாய் நெடி. நடுவில் தூங்கிப் போயிட்டேன்.

*　　　*　　　*

அக்காவை நான் பார்க்க முடியல்லே.

விடிகாலையில் வண்டி.

மாப்பிள்ளைக்குத் தூர தேசத்தில் மிலிட்டரியில் வேலை.

சிராய்ப்புகளுக்கு அம்மா தேங்காய் எண்ணெயைத் தடவிண்டே, 'ஏண்டி கலியாணச் சாப்பாடு சாப்பிட்டுட்டு காலையில் கண் முழிச்சது முதல் கொண்டு ஓயாத அரையல் மெஷின்—உனக்கு அந்தப் படுக்கையறைப் பட்சணத்துக்கு வயித்தில் எங்கேடி இடம் இருந்தது?"

"ஏன் அந்த அக்காவும் அத்திம்பேரும் அந்தக் கலியாணச் சாப்பாடு சாப்பிடல்லியா? அவா வயித்திலே ஸ்பெஷலா அந்தப் பட்சணத்துக்கு இடமிருக்கும்போது எனக்கு இருக்கப்படாதோ?"

இந்த மாதிரி கேள்வியெல்லாம் பெரியவாளால்தான் கேட்க முடியும்.

நான் பதில் பேசல்லே.

நெனச்சுண்டேன்.

* * *

''ஏன்னா?''

''என்ன?''

''கடிதாசிலே ஏதேனும் தெரியறதா?''

''என்ன தெரியணும்?''

''ஏதேனும் பொறி வெச்சிருக்காமா?''

அப்பா கடிதாசை உதர்றார்.

''கடிதாசி பொசுங்கினமாதிரி தெரியல்லியே!''

''இந்த இடக்கில் ஒண்ணும் குறைச்சலில்லே. வருஷம் அஞ்சாறது. அவாளும் இந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கல்லே. யார்மேல் குத்தமாயிருக்கும்?''

பழிபோட தலைதேட ஆரம்பிச்சுட்டியா? நாட்டு நடப்பு நாம் படறது போதாதா? விட்டேத்தியாத்தான் இருந்துட்டுப் போறா.''

''அப்படி உண்டா என்ன?''

''ஆமாம், அப்படித்தான் போ!''

அம்மா ஏதோ முனகுகிறாள்.

* * *

ஆனால் இந்த ஐந்து வருடங்களில் என்னில் எவ்வளவு மாறுதல்! நான் முல்லைக் கொடியல்ல. ஆனால் உடல் உருவி வடிந்துவிட்டது. பிசிர்கள் மறைந்து எப்படி, எங்கெங்கே நிரவிக்கொண்டன? ஏதோ புனித நீரில் மூழ்கி, சாபம் தவிர்ந்து, சுயரூபத்தில் எழுந்தவள்போல், இளமையின் செழிப்புடன் அழகின் மெருகேறி...

ஜனனியா? ஜனனிதானா இது?

தெரிந்தவர், தெரியாதவர் திருட்டுத்தனமாக திரும்பிப் பார்க்கையில் விழியாலேயே விழுங்கப் பார்க்கையில் அதில் ஒரு திருட்டு ருசி, பெருமிதம் காணத்தான் செய்கிறது.

பள்ளியிலிருந்து திரும்ப ஒரு பத்து நிமிஷம் முன்னே பின்னே ஆனால், அம்மா வாசலில் பதறி நின்றுவிடுகிறாள். வெளியில் போகும்போதெல்லாம் விபூதியால் நெற்றியில் லேசாகத் தீட்டுகிறாள். "சிவராஜ குருக்களின் யாகப்பிர சாதம், சர்வத்துக்கும் ரட்சை!" என்னைச் சுற்றி சுவர்களை எழுப்புகிறாள். நெருக்குகிறாள். அப்பாவும் அவளுடன் சேர்ந்துவிடுகிறார்.

"ஜனனி! தங்க வளையங்கள் உன் காதுக்குப் பொருத்த மாத்தானிருக்கு. ஆனால் இசைகேடா நடுவழியில் மாட்டிண்டே—எடுக்கறவன் வளையத்தை இழுக்கிறப்போ காது அறவும் வழியிருக்கு. தோடு, கம்மல்னா அவ்வளவு சுலபமில்லை."

"ஜனனி! பிறந்த நாளைக்கு டாலர் செயின் வாங்கிக் கொடுத்தேன். வாஸ்தவந்தான். ஆனால் மேலாக்குக்கு வெளியே ஏன் இழுத்து விட்டுக்கறே? உள்ளடங்கி இருக்க முடியாதா?"

"ஏம்பா, டாலர் பின்னே எப்படி வெளியே தெரியறது. மறைச்சுக்கவா கொடுத்தேள்?"

"எடுக்கறவனுக்கு 'இந்தா, இந்தா, இதோ இதோ' என்கிறதுக்கு வாங்கிக் கொடுத்தேனா?"

"பின்னே ஆல்ட்பெர்ட்டா சிலுவை தெரியத்தானே செயினை வெளியில் விட்டுண்டிருக்காள்?"

"ஜனனி உன்னோடு பேசி மாளாது."

அம்மா. "கிறுக்கன் ஒருத்தன் கதை எழுதினான்னு பழக்கத்திலில்லாத பேரைச் சூட்டினால் பேருக்கேத்த குணத்தையும் நாம் அனுபவிக்க வேண்டியதுதான். அடங்காப்பிடாரி. ஒரு அயிலாண்டம், எச்சுமி, வாலாம்பா, அலமேலுவிலே இருக்கிற பத்ரம், நிற்பயம், உங்கள் ஜனனி. சந்திரிகா? சசிரேகாவில் கிடைக்கிறதா பாருங்கோ!"

* * *

அம்மாவின் ஆர்க்யுமெண்டிலும் கொஞ்சம் விஷயம் இருக்கும் போலத்தான் தோணறது. ஏன் எனின், இத்தனை எதிர்ப்புக்கு எதிராய், அழுது, அழுச்சாட்டியம் ஆஹாத்யம், அடாவடி பண்ணி கைகேசி பண்ணி, ஜனனி பண்ணி, கோடை விடுமுறைக்கு அக்கா ஊருக்குப் போக வரம் வாங்கிட்டேன். ரெண்டுபேருக்கும் என்னைத் தனியா அனுப்ப அரை மனசுதான். எனக்குத் துணை வர அப்பாவுக்கு லீவு கிடைக்காது. ரயில் சார்ஜ், ரயில்காரனுக்குக் கொள்ளை கொடுக்க ஐவேஜ் இல்லை. அம்மாவுக்கு அக்காவைப் பத்தி நேர்த் தகவல் தெரிஞ்சுக்கணும்னு எண்ணம். நடுவில் மாற்றல் ஏதும் கிடையாது. இங்கு பெண்கள் வண்டியில் ஏற்றிவிட்டால் நேராக அங்கு போய் இறங்க வேண்டியதுதான். ஸ்டேஷனுக்கு வந்து அத்திம்பேர் அழைச்சுண்டுப் போறார். மனசு சமாதானம் பண்ணிக்க இதுதான் வழி. பண்ணிக்க முடியாவிட்டால் இரண்டுபேரும் திண்டாடுங்கள். அழுத்திப் பொத்தி வெச்சு அடைகாக்கிற நாளெல்லாம் அந்தக்காலம்.

அழைத்துப்போக இரண்டுபேருமே வந்திருந்தனர். அஞ்சு வருடமென்ன, ஐம்பதானாலும் அக்காவை எங்கு வேணுமானாலும் அடையாளம் கண்டுபிடித்து விடலாம். இப்போது கண்ணாடி போட்டுக்கொண்டிருந்தாள். அவர்கள் தான் என்னைப் பார்த்துச் சற்று திணறிவிட்டார்கள். எனக்கும் 'சர்ப்ரைஸ் பாக்கெட்'டாக விளங்கத்தானே விருப்பம்!

அக்கான்னா அக்காதான்... அக்காவுக்கு என்மேலே உசிர்தான், அஞ்சு வருடம் பிரிஞ்சிருந்திருக்கோம். அந்தப் பக்கம் அத்திம்பேர்—மயிருக்கு மிஞ்சின கறுப்புமில்லை. மச்சினிக்கு மிஞ்சின உறவுமில்லை. பிரியத்துக்கும் உபசாரத் துக்கும் கேக்கணுமா? புதிதாகப் பேசுவதற்கும் பழைய நினைப்புகளைத் திருப்பிப் புரட்டவும் இந்த அஞ்சு வருடங் களில் எவ்வளவு சேர்ந்திருக்கும்! அக்காவின் மணவரையி என்னுடைய அட்வெஞ்சர் இப்போது எவ்வளவு பெரிய, சிரிப்பு! வாழ்க்கையிலே ஒரு நீண்ட சிரிப்பு என்கிற எடையை அடையும்வரை நமக்குத்தான் ஆயுசு இல்லை.

இவாள் குவார்டர்ஸில் இருக்கா. அண்டை வீடா னாலும் சரி, மாடியானாலும் சரி குடித்தனக்காரர்கள் ஒருவருக்கொருவர் தாக்கல் மோக்கல் இல்லை. தவிர தெற் கத்திப் பக்கத்திலிருந்து வந்தவாளைக் கண்டாலே ஸாதி வாலான்னு ஒரு இளப்பம் உள் பகை. மொத்தத்தில் ஒட்டுதல் கிடையாது.

இரண்டு இந்தி சினிமா பார்க்கலாம். நாலு நாளில் புதுமை தீர்ந்ததும் அக்காவும் அத்திம்பேரும் எப்படி இங்கே ஓட்டுகிறார்களோ? "நீயும் நானுமடி, எதிரும் புதிரு மடி"ன்னு.

மாற்றி மாற்றி ஆலு, ஆட்டாதான். டிக்கி, பாஜி, சப்பாத்தி, பூரி, சமோஸா, இதையே மாற்றி மாற்றி சாப் பாடாய் வாசி; டிபனாப் பார்த்துக்கொள்.

இந்த மண்ணுக்கு உருப்படியா காய்கறி ஒன்றும் வராது போலிருக்கிறது. ஏதேதோ கிள்ளிச் செடிகள், க்ரோட் டன்ஸ், மல்லி இன்னும் ஒன்றிரண்டு வாசனைப் புஷ்பங்கள். பயிர் போட்டுப் பராமரிக்கவும் பயம்—பாம்பு நடமாட்டம் அதிகமாம்.

இந்த மல்லிக்கும், நம் பூந்த மல்லிக்கும், மதுரை மல்லிக்கும் ஏக வித்தியாசம். வண்டு வண்டாய், பெருஞ் ஜாதி, நீல வெண்மையாய்—இதுவும் நல்ல வாசனைதான், மல்லிதான்.

அக்காவுக்கு முகம் இன்னும் ரொட்டிப் பொறுக்காய்த் தானிருக்கிறது. சளைக்கிறது. மறையறது. மறுபடியும் சளைக்கிறது.

ஓ மை டியர் யுவர் அக்கா!

கொல்லையில் மல்லிக்கொடி காடாய்ப் படர்ந் திருந்தது. ஸ்டூல் போட்டுப் பறித்தேன். நாற்காலீ போட்டுப் பறித்தேன். அப்புறம் மேஜையைக் கொண்டு வந்தேன்.

""வீட்டில் ஒருத்தரும் இல்லையா?"" கேட்டுக்கொண்டே அத்திம்பேர் கொல்லைப்புறம் வந்தார்.

""ஹலோ பிரின்ஸஸ்!""

""என்ன அத்திம்பேர் இவ்வளவு சுருக்கு?""

பெரியதலை, எவனோ மண்டையைப் போட்டுட்டான். தகவல் வந்த மிச்ச நேரம் ஆஃப். என்ன திண்டாடறே?""

""எட்டல்லே அத்திம்பேர்!""

""கீழே இறங்கு!""

நான் முன்றானைத் தலைப்பை ஏந்திப் பிடிக்க, அத்திம் பேர் பறித்துப் போட்டுக்கொண்டிருந்தார்.

""வீட்டில் ஒருத்தருமில்லையா? கேட்டுக்கொண்டே அக்கா கொல்லைப்புறம் வந்தாள். ""நீங்க எப்போ வந்தேள்?"" அத்திம்பேர் வாய்ப்பாடை ஒப்பித்தார்.

""இவ்வளவு பூ எதுக்கு?""

''தொடுத்தால் துளி ஆயிடும். உனக்கும் சேர்த்துத் தான்''

சூள் கொட்டினாள். 'எனக்குப் பழக்கமில்லை. அலெர்ஜி.'

''உனக்கு வேணாட்டாப் படத்துக்குப் போட்டாப் போச்சு.''

அத்திம்பேரும் நானும் ஹாலில் பூத்தொடுத்துக்கொண்டிருந்தோம். அத்திம்பேருக்குப் பூத்தொடுக்கத் தெரியும் போலிருக்கு. அக்கா சமையலறையில் வேலையாயிருந்தாள்.

''எனக்கு ஒரு தங்கையிருந்தாள். உன் மாதிரிதான் இருப்பாள். மூளையில் கபம் தாக்கி மூணே நாளில் போயிட்டாள்.''

''வீல்'' என்று அலறல் கேட்டு, கைக்காரியத்தை அப்படியே போட்டுவிட்டு உள்ளே ஓடினோம்.

அக்காவுக்கு முகம் பூரா மூக்குக்கண்ணாடி. பாம்பூ! பாம்பூ! எட்டு மைலுக் கெட்ட நின்றுகொண்டு காஸ்ஸ்டவ் மேடையடியில் சுட்டிக் காண்பித்துக்கொண்டிருந்தாள்.

அங்கு ஏக அடைசல். இரண்டு மூன்று மண் அடுப்பு. வென்னீர்த்தவலை. செங்கோட்டை தோசைக்கல், ஒன்றுக்குள் ஒன்று மூன்று இலுப்பச் சட்டிகள். வெட்டுக்கத்தி. தோட்டக் கத்திரி. சிமிட்டி வாணலி—அறுந்துபோன தாம்புக்கயிறு—அடுக்கிண்டே போகலாம். இங்கு எங்கானும் புகுந்துகொண்டு எட்டு நாளைக்குச் சவால் விடலாம்.

இருந்தாலும் ஒவ்வொன்றாய் ஜாக்கிரதையாக எடுத்துப் பார்த்தோம்.

''என்னடி காரியம் செஞ்சே ஜனனி! படிச்சுப் படிச்சு எத்தனை தரம் சொல்லியிருக்கேன்! கையோடு கொல்லைக் கதவை அடைச்சுண்டு வரணும்னு! இங்கே ஒண்ணு ஆள்

புகுந்துடுவான், இல்லாட்டா பாம்பு. அதை அடிக்கவும் கூடாது. இந்தப்பக்கம் எல்லாரும் நாகத்தை வழிபட றவா. சரியான தண்டாவில் மாட்டி வெச்சுட்டே, வெளியிலும் துரத்த முடியல்லே. உள்ளேயும் வெச்சுக்க முடியாது. என்ன செய்யலாம்?''

நல்ல கதையாயிருக்கே. நீதானே கடைசயா கொல்லைப் புறத்திலிருந்து வந்தவள்! ஆனால் அவளோடு நான் தர்க்கம் பண்ணவில்லை. வீடு முழுக்க சலிச்சுப் பார்த்தாச்சு.

அத்திம்பேர் பெருமூச்செறிந்து நிமிர்ந்தார். ''நான் நினைக்கறேன் வஸந்தி!'' அறுந்த தாம்புக்கயிறை எடுத்து ஆட்டினார்.

''அப்போ நான் பொய் சொல்றேன் என்கறேளா?'' அக்காவுக்கு உதடுகள் நடுங்கின.

அத்திம்பேர் தற்காப்பில் இரண்டு கைகளையும், ''சரி சரி ஏதேனும் ஆரம்பிக்காதே... மறுபடியும் தேடலாம்'' என்றார்.

ஹால் பூரா மல்லி மணம். சிறு போராய் மல்லி குவிந்து கிடந்தது. இந்த ரகளையில் அதைத் தொடுக்க யாருக்கு மனம் வரும்?

நான் மலர்ந்து கொண்டேயிருப்பேன்.

ஆனால் யாருக்கும் கிடைக்க மாட்டேன்.

இது நடந்து அஞ்சு நாளாகியிருக்கும். மத்தியானம் அக்கா தபாலாபீஸுக்குப் போயிருந்தாள், கார்டு, கவர் வாங்க.

நான் புத்தக அலமாரியில் குடைந்து கொண்டிருந்தேன்.

''ஜனனீ! ஜனனீ!'' அக்கா அவசரமாக வாசற் கதவைத் தட்டினாள்.

திறந்தேன். அக்கா முகம் சுண்ணாம்பாய் வெளுத்திருந்தது. கையில் தந்தி. பிடுங்கினேன்.

"மதர் ஃபெல் அக்ஸிடெண்ட்—ஸீரியஸ் ஸ்டார்ட் இமீடியட்லி.

அக்கா கூடத்தில் உட்கார்ந்து அழ ஆரம்பிச்சாள்.

எனக்கும் திக்பிரமை பிடித்தாற்போல் ஆகிவிட்டது. அக்கா என தோளைப் பிடித்து உலுக்கினாள்.

"ஜனனீ! ஏதேனும் பேசேண்டி! என்னடி ஆயிருக்கும்?" என்னவாவது ஆயிருக்குமோ? என்னடி பண்றது? தொண்டைக் கீச்சில் இழுத்துக்கொண்டே போயிற்று.

"ஸ்டாப் இட்." கத்தினேன்.

"என்னடி செய்யலாம்?"

கிளம்ப வேண்டியதுதான். எப்படி? அத்திம்பேருக்குப் போன் பண்ணலாம்னா இங்க கிட்டே போன் கிடையாது. ஆபீஸ் இங்கிருந்து 20 கி.மீ. ஸ்கூட்டரில் போய்வருகிறார். இன்னும் ரெண்டுமணி நேரம்தான் இருக்கு ரயிலுக்கு. இதை விட்டால் அடுத்தது மறுநாள் இதே நேரத்துக்குத்தான். அதற்குள் என்னவோ? ஏதோ கடைசியில் இன்னிக்குக் கிளம்பி நான் முன்னால் போறது, மறுவண்டிலே அக்கா அவசியமானால் அத்திம்பேர்—ஊரும் வீடும் இருக்கும் அவந்தரைக்கு எல்லோரும் பூட்டிக்கொண்டுகிளம்ப முடியாது—என்று முடிவாச்சு.

பாவம், எங்கிருந்தோ இந்த நேரத்துக்கு ஒரு ஜட்காவைப் பிடிச்சுண்டு வந்தாள். அத்வானம் பிடிச்ச ஊர். கூட வந்து அவள்தான் ரயில் ஏற்றினாள். வண்டியைப் பிடிச்சதும் சினிமா சேஸ் மாதிரிதான். ஸ்டேஷன் மாஸ்டர் பெரிய மனசு பண்ணினார். "ஆ, புவர் சைல்ட்! டோண்ட் வொரி. காட் ஈஸ் கிரேட்." என்று தைரியம்கூடச் சொன்னார்.

இரவு பூரா தூக்கம் ஏது? இந்தச் சமயத்தில் அம்மாவின் நற்குணங்கள் அனைத்தும்தான் சிந்தனையில் மேல் எழுந்தன. வெகுளி, ரொம்ப அஞ்ஞானம். சாப்பிட உட்கார்ந்த பின் யாரேனும் கேட்டால் அலுக்காமல், மோருஞ் சாதத்துக்குப் புளித்துவையல் அம்மியில் இழைப்பாள். பிறர் கஷ்டம் தாங்கமாட்டாள். அவளுக்கு இப்படி நேர்ந்துடுத்து பார்த்தையா? மண்டையில் அடிபட்டிருக்குமா? இல்லே இடுப்பு பிராக்சரா? முருகா, மை பேவரட் காட். ஹேவ் மெர்சி ஆன் அஸ்!

* * *

பொல பொலவெனப் பொழுது புலரும் வேளைக்கு ஆட்டோ ரிக்ஷாவிலிருந்து வீட்டுக்கெதிர் இறங்கினேன்.

அம்மா வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். சத்தம் கேட்டு நிமிர்ந்தாள்.

"என்னடி ஜனனீ?"

எனக்குச் சட்டென்று பதில் வரல்லே. உள்ளே ஏதேதோ மூட்டங்கள் சரசரவெனப் பிரிந்துகொண்டிருந்தன.

"என்னடி திருதிருன்னு முழிக்கறே? எல்லாரும் சௌக்கியம்தானே?"

என்னிடமிருந்து ஒரு சிரிப்புப் புறப்பட்டது. அது எனக்கே புதிதாய்த்தானிருந்தது.

இதுமாதிரிச் சிரிப்பு இதுவரை நான் சிரிச்சதில்லே. விட்டுவிட்டு அல்ல. ஒரு நீண்ட உருட்டுச் சிரிப்பு. மேளத்துள் சதங்கைபோல் அதன் ரகஸ்யத்வனி எனக்கு மட்டும் ஒலித்தது.

# ப்ரயாணம்

அவருக்கு ஒரு பழக்கம்; நல்லதோ, கெட்டதோ—தெரியாது. காலையில் விழிப்பு வந்ததும், பிறகும், நினைப்பு வந்தபோதெல்லாம் இடதுகையால் வலதுகை நாடியைப் பிடித்து இடது செவியோரம் கொண்டுபோய் ஒட்டுக் கேட்பார்.

அவருடைய அத்தை, நாடியில் நிபுணியாம், இந்தக் கேஸ், இன்றிலிருந்து ஒரு வருடம், ஒரு மாதம் ஒரு நாளில் காலாவதி என்று சொல்லுமளவுக்கு. சொன்னபடியும் நடக்குமாம். ஆபத்தான மனுஷி. ஆனால் நாடி பார்ப்பதுடன் சரி. அதில் கண்ட கோளாறுக்கு வைத்யம் பண்ணவோ, பரிகாரம் சொல்லவோ தெரியாது. அதெல்லாம் செல்லக்கண்ணு பாடு. நாடி பார்க்கச் சொல்லிக் கொடுத்ததே செல்லக்கண்ணு பண்டிதன்தான். அத்தை, குருவுக்கு மிஞ்சின சிஷ்யை ஆகிவிட்டாள். அவனுக்குப் பிடிபடாத இடங்களுக்கு லக்ஷ்மி அம்மாளை அழைத்துச் செல்வான். "அதெல்லாம் அம்சம், சொல்லிக்கொடுத்தோ படிச்சோ வரதில்லை. பாருங்க என் பாட்டனார் காலத்திலிருந்து ஓலைச்சுவடி, நாடி சாஸ்திரப் புத்தகங்கள் பரண்லே அடுக்கி வெச்சிருக்கேன்; ப்ரயோசனம்?"

அத்தை மாதிரி தானும் நாடி பிடிக்கணும் என்று ஆசை. அத்தையிடம் கற்றுக்கொள்ளவும் முயன்றார். அவளும் ஏதேதோ சொல்வாள்: 'யானை நடை, கோழி நடை,

குதிரை நடை'யென்று. போகப் போக அவளும் 'கட்ஸா' அடிக்கிறாள் என்று தனக்கே தெரிந்தது. எல்லாம் தெரிந்து, கரை கண்டுவிட்டாலே அப்படித்தான். யானையாம், குதிரையாம், கோழியாம்! அவருக்கு எல்லாம் ஒரே 'டக் டக் டக்' காய்த்தான் பட்டது. இருந்தாலும் தன் கையைத் தானே பிடித்துப் பார்த்துக்கொள்ளும் பழக்கம் மட்டும் நிலைத்து விட்டது.

''டக் டக் டக்''

NO—இன்று டக் டக் டக் இல்லை. ஒன்று "கிர்ர்ர்-டக்" எஃகுச்சுருள் கழல முயல்வதுபோல. நடு நரம்பு பேசவேயில்லை. அடுத்ததில் வேகம் மின்னல் பறந்தது. தூக்கிவாரிப் போட்டது. வித்தை கடைசியாக கைக்கடங்கி வந்து விட்டதா? காத்திருந்த தவம் பலித்ததம்மா...ஆனால் தனித் தனியாக அவை என்ன பாஷை பேசுகின்றன? ஒன்று நிச்சயம். நல்லது பேசவில்லை.

பயத்தில் திடீரெனக் காலில் வந்தடைந்த பலவீனத்தில் டாக்டர் வீட்டுக்குப் போகும் தைரியம் விட்டது. அவர் க்ளினிக்கும் 9 மணிக்கு முன் திறக்காது. டாக்டர் 9 மணிக்கு வரமாட்டார் என்பது அனுபவ உண்மை. அவர் வரும் வரை காலை எதிர் வெய்யிலுக்குத் தடுப்புக்கூட இல்லாமல் காத்திருக்க வேண்டும். டோக்கனில் தன் முறை வந்து உள்ளே போய் மீள்வதற்குள் 12-30. வேறு வழியில்லை. இன்று விஸிட்டுக்கு அவிழ்த்து வைக்க வேண்டியதுதான். நல்லவேளை எதிரே ரொட்டிக் கடையில் டெலிபோன் இருக்கிறது. கடையும் திறந்தாச்சு.

வேலைக்காரக் குட்டியை இன்னும் காணோம். இன்றைக்கும் மட்டமா? தன்னை விட்டால் கதியில்லை என்று அவள் தெரிந்துகொண்டிருக்கிறாள். சமயம் பார்த்துக் காலை வாரிவிடுவதில் அவள் தனி ஸ்பெஷல். அவள் வந்து தயவு பண்ணினால்தான் இன்றையச் சமையலுக்குப் பாத்

திரங்கள் விடுபெறும். தொட்டி முற்றத்தில் ரஸவண்டல், கொட்டிய காப்பிப்பொடி, சாம்பார் எல்லாம் கலந்து ஊசல் நெடியடித்துக் கொண்டிருக்கிறது.

மெதுவாய் எழுந்து உட்கார்ந்து, தரையில் காலை ஊன்றி—தனியாகத் தென்புக்குறைவு ஒன்றும் தெரிய வில்லையே! மறுபடியும் நாடியைப் பிடித்துப் பார்த்துக் கொண்டார். முதல் நாடி திடுக்குத் திடுக்கென gear மாற்றிக் கொண்டிருந்தது. நடு, மௌனம். மூன்றாவது சோழவரம் ஜயித்துக் கொண்டிருந்தது is n't that funny?

ஒருவாறு பல் விளக்கிவிட்டு எதிர்க்கடைக்குப் போய் டாக்டருக்கு போன் செய்துவிட்டு மறுபடியும் வந்து கட்டிலில் படுத்துக்கொண்டார். இன்று பட்டினி போட வேண்டியது தான். அப்படிப் பசி தாங்காவிட்டால் இருக்கவே இருக்கிறது ரொட்டிக் கடை.

திடீரென்று ஏதோ வளையில் அடைபட்டு, விடுபட்டாற் போல் ஒரு காற்று கிளம்பி, சுவரில் ஷீட் காலண்டர் படபட வென்று பாவாடையடித்துக் கொண்டது. ஆகஸ்ட், அக்டோபர், செப்டம்பர் என்று மாதங்கள் தேதிகள் அலங் கோலமாயின. தேதியைப் பார்க்க முடியாமல் தங்களுக்கு வெட்கம் வந்து சுருண்டுகொண்டன இன்று என்ன தேதி? அக்டோபர் 30—என் பிறந்த நாளல்லவா? and so, சக்கரம் ஒரு சுற்று வந்தாச்சு.

நேரம் நேர்த்தியாகத்தானிருக்கிறது. என் பிறந்த நாளல்லவா? ஈரமுமில்லை, வெம்மையுமில்லை. சூரியன் ஒளிந்து விளையாடுகிறான். சுவர் மேல் பசும் வெய்யில் இளநீர் போல் துளும்பலாடுகிறது. இளநீரின் ருசி மறந்தே போச்சு. தண்ணீர் ஒழுங்காய்க் கலங்கலில்லாமல் கிடைத் தால் போதாதா? திரும்பிய இடம் எல்லாம் குழாய்தான். சௌகரியம்தான். சமையல் மேடையில், பாத், lav, wash

qasin. ஆனால் வருவதென்னவோ Overhead tankஇலிருந்து. என்று சுத்தம் பண்ணியதோ? ஒரொரு சமயம் பச்சை மீன் நாற்றமும் பாசி நாற்றமும்...

ரிஷி மூலம்—அத்துடன் குழாய் மூலம் என்று ஒன்று சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். வாழ்க்கையில் இத்தனை வயது காத்திருந்து காணும் மிச்சம் இதுதான். Overhead Tank-இலிருந்து குழாய் மூலம் குடிதண்ணீர். இதற்குமேல் இதன் விவரத்துள் புகுவது எனக்கே சரியில்லை.

"முயற்சி உன்னுடையது. பலன் என்னைச் சாரும்.

உழை. ஆனால் ஆசைப்படாதே. கூலியை எடுத்துக் கொள்பவன் நான்.

நீ அவல் கொண்டுவா. நான் உமி கொடுக்கிறேன்.

நினைவிருக்கட்டும். உனக்கு இங்கு சொந்தமில்லை. The Gods Want you.

உன்முறை வரும்வரை உன்னை நான் உண்ண மாட்டேன்.

ஆகையால் எனக்கு உகந்த கவளமாய் நீ உன்னைப் பக்குவமாக்கிக்கொள்ள—

உனக்கு வேண்டிய அவகாசம் தந்திருக்கிறது.

வாசற்படியில் நிழல் தட்டுகிறது.

"என்ன உடம்பு?" என்று கேட்டுக்கொண்டே மணிக் கட்டைப் பிடித்தவுடனேயே டாக்டருக்கு முகம் சட்டென மாறிற்று. "என்ன ஸார், What have you done with ourself?"

"நீங்கள்தான் சொல்லணும்."

"உங்களிடம் என்னத்தைச் சொல்றது? வீட்டில் வேறே யாருமில்லையா? சந்தடியே காணோமே!"

"........."

"உங்கள் Mrs?"

"..." இவரிடம் என் பழைய அத்யாயங்களில் எதைப் படிப்பது? இப்போ என்ன ப்ரயோசனம்?

யாருக்கு நேரம் இருக்கிறது? அலுப்பு,

"Grown ups? son?"

"சேகர் ட்யூட்டியிலிருந்து இன்னும் வரல்லே."

"எந்த ஆபீஸ்? Telepone?"

"அவனே வரநேரமாச்சு. ஆனால் இன்னிக்கு என்னவோ தெரியல்லே. இன்னும் வரல்லே."

"பின்னே யார்கிட்டே நான் பேசறது? என்ன ஸார் சிரிக்கிறீங்க?" கையை மறுபடியும் அவசரமாய்ப் பிடித்தார்.

"எதிர் வீட்டில் ரொட்டிக் கடைக்காரன்தான் பாக்கி Doctor, dont you see the numour of the situation?"

"No I don't. Man, do you know what you are heading for?"

"நீங்கள் சொல்லாமல் எனக்கெப்படித் தெரியும் என்னிடம் நீங்கள் தாராளமா சொல்லலாம்!

"வியாதிக்காரனிடமே அவன் உண்மை உடல் நிலையைப் பேச முடியுமா? That is no Medical ethics."

"அப்போ என்னோடு மெடிகலாயிருக்காதீங்க. Let us be man to man. Come on I can take it."

"உங்களை உடனே ஆஸ்பத்திரியில் சேர்த்தாகணும்."

காகங்களின் கரையல் காதைப் பொளிந்தது. ரொட்டிக் கடைக்காரன் ரொட்டியைத் துண்டு துண்டாய்ப் பிய்த்து வீசி எறிவான். தினமும் அதுக்கு இது ஒரு காலைச்சடங்கு. அரை ரொட்டி ஆண்டவன் அதுக்குப் படியளந்தால் போதுங்க. அதுக்குமேல் நமக்குக் கட்டுபடியாகாதுங்க.

இதைத்தவிர ஆள் ஏமாந்தா, பையன் அசப்பாயிருந்தால் எத்தனை பிஸ்கட் திருடுதுங்க தெரியுமா? பன்னை எடுத்துக் கேஸ் கண்ணாடி மேலே வெச்சுப் பொட்டலங் கட்ட பேப்ப ருக்குக் குனியறதுக்குள் முழுசா அப்படியே தூக்கிடுதுங்க. உலகத்தில் துரோகம் என்னென்ன விதத்தில் நடக்குது தெரியுங்களா?''—' டாக்டர் எனக்கென்ன உடம்பு?''

''உங்களுக்கு ஜன்னி கண்டிருக்கிறது.''

''ஜன்னி?''

பெரிய நீண்ட சிறகின் நிழல், சுவரில் இளவெயிலின் விதிர் விதிர்ப்பைக் கலைத்தது.

இது காகமல்ல.

"ஜன்னியில் எத்தனையோ விதம். நினைவு தப்பணும்னு அவசியமில்லை. வண்டி Top gear-இல் சரிவில் ஓடிண்டிருக்கு. Sir, நீங்கள் என்னோடு வாங்க கார்லே—''

''பையன் இன்னும் வரல்லியே!''

"Don't be siliy man! You are in a fine mess"—இதெப்படி நேர்ந்தது? இவ்வளவு மோசமா!—நானும் நினைவுபடுத்திப் பார்க்கிறேன். எப்படியிருக்கலாம்? முந்தா நேற்று உடம்பு சுட்ட மாதிரி இருந்தது. பொருட்படுத் தாமல் பச்சைத் தண்ணீரில் வழக்கம்போல ஸ்நானம். அன்னி ராத்திரிகூட சுட்டதோ? உடம்பு வலி. அதைப் பார்த்தால் முடியுமா? விடியாத காலை எழுந்து வழக்கம் போல அலுவல்கள்—ஸ்நானம். சேகர், 7-55க்கு உட் கார்ந்துவிடுகிறான். கையில் வேறு கட்டிக் கொடுக்கணும். ''ஆனது போதுமப்பா'' என்று அவன் சொன்னாலும் மனசு கேட்கிறதா? இரவு எட்டு மணிக்குத்தான் அவனை மறுபடி பார்க்கலாம்? ஒவ்வொரு நாள் Night duty என்று அப்படியே தங்கிவிடுவான். புடலங்காய் பொரித்த குழம்பு அவனுக்கு ரொம்ப இஷ்டமாச்சே என்று எடுத்து வைத்ததை நானே சாப்பிட நேர்கையில், தொண்டையில் வில்லுண்டையாய்—

தலையை வலிக்கிறதோ? மண்டையைத் தாங்கிக்கொள்கிறேன். எல்லாம் எண்ணங்களின் குழப்பம்தான்.

டாக்டர்கைக்கடியாரத்தைப் பார்த்துக்கொள்கிறார்.

"I am well Doctor. பையன் வரட்டும்."

"நீங்கள் இங்கிருந்துகொண்டே நான் உங்களுக்கு எதுவும் செய்வதற்கில்லை."

"I understood. Thank you!"

அவர் போயாச்சு.

தலையணையில் சாய்கிறேன். What next? சேகர் இன்னிக்கு ஏன் இவ்வளவு நாழியாக்குகிறான்? சின்ன முதலாளியிடம் வேலை பார்த்தாலே இந்த கதிதான். அவனுக்கு அவன் நியாயம்தான் உண்டு. O T, ஈட்டி ஈதெல்லாம் எங்களுக்குப் புரியாத பாஷைங்க. சொன்னதை ஒழுங்காச் செய்துட்டுப் போறவனைக் கலைக்கத்தான் இந்தப் பேச்செல்லாம் இப்போ நடமாடுதே! வேலையைச் செய்யணும்—வேலையைக் கத்துக்கணும்னு யாருக்கு எண்ணம் இருக்குது? எல்லாரும் பல்லாக்கு சவாரி பண்ணனும். அப்போ தூக்கறவன் யாரு? என் பையனையும் சேர்த்துத்தான் சொல்றேன். இப்போ பாருங்க அவன் காலேஜிலே."—

"உனக்கென்னப்பா சேகர். நீ திருவோண நட்சத்திரத்துக்கு வேலையே தேட வேண்டாம். புறா மாதிரி தானே வந்து மடியில் விழும்" என்று கல்லூரி வாத்தியாரே அவனுக்குக் கை பார்த்துச் சொன்னதைப் பேச்சுவாக்கில் சேகர் என்னிடம் சொல்லி, சொன்னதை நானும் நம்பினேன். ஏன் நம்பக்கூடாது? 79. 5% குடும்பத்துக்கே எனக்கு நினைவு தெரிந்து சேகர்தான் முதல் degree.

ஆனால் காத்திருந்து காத்திருந்து மடியில் புறாவும் விழவில்லை. தேடித் தேடியும் புளியம்பழம்கூட உதிரவில்லை.

இப்போது சேகர் போய் வரும் இடத்தில் அவன் சம்பளத்தைப் பற்றிப் பேசுவதற்குமில்லை... புழுங்குவதற்குமில்லை. போக வர, கைசெலவு போக அவன் துணிமணிக்காவது ஆனால் சரி. அதற்குக்கூட இப்போ என்னிடம் வழியில்லை. இரண்டு வருடங்களாக wireless-க்குப் படித்து, போன வருடம் பூனாவுக்குப் போய் இரண்டு மாதங்கள் தங்கி பரீட்சை எழுதி பாஸூம் பண்ணியாச்சு. Good boy செலவுதான். சரியான செலவுதான். ஒரொரு புத்தகமும் நூறு ரூபாய். நோட்புக்குகள் செலவாணி புத்தகங்களின் விலையைத் தூக்கியெறிந்தது. பூனாவுக்குப் போய்த் தங்கி அங்கு ஏதோ ஸ்பெஷல் ட்ரெய்னிங், அதற்கு மட்டும் ஒரு பெரிய நோட் எகிறிற்று. தவிர வெளியூர் போனால் ட்ரஸ் வேண்டாமா? அவன் சொல்லணுமா? எனக்கே தெரியல்லையா? தெரிந்து என்ன செய்வது? காசுக்கு எந்த வழி போவேன்?

எனக்கும் நல்ல நட்சத்திரம்தான். வேளை நன்றாயிருந்தால் வேரிலும் காய்க்கும், நட்சத்திரமும் அப்போ நல்லாயிருக்கும். வேளை பொல்லாதானால் நாக்கே பாம்பாகி விடும். வேளையால் நட்சத்திரமா? நட்சத்திரத்தால் வேளையா? பூனாவிலிருந்து பையன் வந்த கையுடன் செலவோடு செலவாய்த் திருப்பதிக்கு அனுப்பி வைத்தேன். பாலாஜி குலதெய்வமல்ல. ஆனால் கொடுக்கும் தெய்வமாச்சே! கடைசியில் பார்க்கப் போனால் சுயநலம்தான் தெய்வம். திருவோண நட்சத்திரம் வாய் திறந்து பேசாவிட்டால் போகிறது. உதட்டையாவது அசைத்தால் சரி.

விதை நெல்லை வீசி இறை. விளைச்சலை அள்ளி அறுப்பாய்.

வெறுங்கையை வீசி வயல் பரப்பைக் காட்டினால் வயிறு நிரம்பிவிடுமா? என்றைக்கு இந்தப் பொய் எங்கள் முகத்தில் வெடிக்கப் போகிறதோ? அஸ்தியில் இதேதான் ஜூரம்.

இப்படியே இன்று போல் நாளை, நாளை போல் மறு நாள் என்று ஒரு நாளைப் போல் மறுநாள் மண்டையுள்ள வரை ஜலதோஷம்தான் வாழ்க்கை, கஸ்தூரிக்கு அலுத்துப் போனதில் ஆச்சரியமில்லை. அவன் என்னத்தை நினைத்துக் கொண்டு வந்தாளோ? நிச்சயமாய் அது அவளுக்கு என் னிடம் கிட்டவில்லை. அடிக்கடி சொல்வாள்: "you are no adventure"—(இலக்கணத்தைத் தூக்கி உடைப்பில் போடு.) நான் என்ன உங்கள் மாதிரி வாத்தியார் மகளா? நான் சொல்ல வந்ததை நீங்கள் புரிந்துகொண்டால் சரி. ஆனால் புரியவெச்சு என்ன பிரயோசனம்? நீங்கள் என்ன மாறப் போறேளா? எதைக் கேட்டாலும், இன்னிக்கு கரைச்சுட்டு நாளைக்கு என்ன செய்யறதுன்னு உங்கள் பல்லவியாப் போச்சு! வாழ்க்கையைப் பின் எப்பத்தான் அனுபவிக்கிறது!

"வயிற்றில் இப்படி வாரை இழுத்துக் கட்டறபோதே" இவ்வளவு இழுப்பாயிருக்கு. நீ என்னடான்னா சமுத்தி ரத்தைத் தாண்டனும் என்கிறாய்! உனக்கு என்ன வேண்டும்?

"உங்களுக்கு என்றைக்குமே புரியாது." பாவம் கடைசி வரை அவள் குழந்தைதான். கன்னங்களில் பாலசடு மாற வில்லை. அவள் வந்த இடம், வளர்ந்த இடம் அப்படி. கையை நீட்டவேண்டும் உடனே மாங்காய் விழவேண்டும் மனப்பான்மை. அண்டாவைத் தூக்கிச் செம்பில் போட்டு மாட்டைத் தூக்கி ஆட்டில் போட்டு இன்னிக்கு இந்த நகை மேல் ஆசைப்பட்டேனா" வாங்கு—

"முழுப்பணம் யாரு கேட்டுது? பங்காரு தல்லி ஒக்கப்பாதி லெக்காலு பெட்டினானு—ஸந்தோஷங்கா தீஸ் கோனி வெள்ளண்டி" மறுமாதம் பாக்கி கட்ட முடியாவிட் டால் வாங்கினவனிடமே வை. அவனே அடகும் பிடிக் கிறான். மீட்க முடியாமல் மூழ்கிப்போனால்—ஏதோ ஒரு மாதம்தானானாலும் பூட்டிண்டவரை சந்தோஷம்தானே!

மாதம் அத்தனை State லாட்டரிக்கும் ஒதுக்கிவிடுவோம். போனால் நஷ்டம் ஒரு ரூபாய்தானே! விழுந்தால் விட்டுடு வேளா? காயிலுக்கு எழுதி வெச்சுடுவேளா?!'

ஆசைகள் நிராசையில் முடிவது வியப்பல்ல. ஆனால் இதுவே வாழும் தத்துவமாக... அவளுக்கு மட்டுமென்ன? வாழ்க்கை முறையில் அவளே வேறு தலைமுறையாகிவிட்டாள்... இதுவே வாழும் தத்துவமாக அமைந்துவிடுவது ஆச்சரியமா இருந்தது.

''ஒன்று கேட்கிறேன். உங்களுக்கு உண்மையா என் மேல் ஆசையிருந்தால், கணக்கில் நல்லதா எனக்கு ஒரு பட்டுப்புடவெ வாங்கித்தர முடியாதா? நீங்கள் தலையை மட்டும் அசையுங்கள், உங்களால் முடியாட்டா நான் ஏற்பாடு பண்றேன். நீங்கள் வேணும்னு வேஷம் போடறேள்.''

பிச்சைக்காரனுக்கு அதிர்ஷ்டம் அடித்தால் அன்று அவனுக்கு இரண்டு ரூபாய்க்குப் பதிலாக அஞ்சு கிடைக்கலாம். ஐம்பதாயிரம் கிடைச்சுடுமா? சுக்ர திசையும் அவனவன் ஸ்திதிக்கு ஏற்றபடித்தான். ஆண்டவன் மனது வைத்தால் அவனால் ஆகாததல்ல என்பது வேறு விஷயம். அவன் மனது வைத்துத்தான் சந்திரமதியும் துடைப்பமெடுத்துப் பெருக்கினாள். கஸ்தூரியிடம் என்ன சொல்ல முடியும்? சினிமா, சினிமா போன்ற கதைகள் அவாளைப் பாருங்கள், இவாளைப் பாருங்கள், அங்கே fridge, இங்கே டைனிங்டேபிள் என்ற எரிச்சல்கள் அடைத்துக் கொண்டிருக்கும். மண்டையுள் என் வார்த்தை, என் நிலைமை என்ன ஏறும்?

''You are no advanture man!''

சேகரை கருத்தரித்தது நிச்சயமானதும் அடேயப்பா! அவள் பண்ணின ரகளை இன்னும் மறக்கவில்லை. காளியாக மாறிவிட்டாள். என் மார்பில் படபடவென்று மாறிமாறி இருகைகளாலும் குத்துகிறாள். என்ன பலம்! நினைத்

தால் இப்போக்கூட வலிக்கிறது (அதுவும் ஏதோ சினிமாக் காக்ஷிதான்.) தலைமயிரைப் பிய்த்துக்கொள்கிறாள். நெற்றிப் பொட்டில் அறைந்துகொள்கிறாள்.

நான் அலண்டுதான் போனேன். இதென்ன ஆஸ்பத்திரி கேஸா? ஏதாவது மறைச்சுவெச்சு என் தலையில் கட்டி விட்டார்களா?

''என்ன கஸ்தூரி இதென்ன கோலம்?''

''இருக்கிற கஷ்டம் போதாதுன்னு நீங்களே என்னை வாழவெக்க மாட்டேன்கறேளே?''

''என்ன உளர்றே? உன்னை யார் வாழ வைக்கவில்லை? எந்த மாமியாருக்குத் தவறாமல் பலகாரத்துக்கு தினம் தோசைக்கு அரைத்துப் போடுகிறாய்?'' எந்த குண்டுனி நாத்தனாருக்கு தலை பின்னி உனக்குக் கை ஒஞ்சு போறது? எந்த மச்சினனுக்கு பள்ளிக்கூடத்துக்கு நேரம் தப்பாமல் சமைத்துப் போடுகிறாய்''

''அதெல்லாம் கூட வேணுமா? இன்னும் பத்து மாதத்தில் நான் உருக்குலைஞ்சு, கையில் ஒண்ணை ஏந்திண்டு அது உதிரத்தை உறிஞ்சற வேகத்தில், கன்னம் ஒட்டி, அழகும் பொலிவும் இழந்து. பல்லும் பவிஷுமாய் கிழவியா என்னைப் பாத்துடுவேள். உங்களுக்குத் திருப்திதானே! அதுக்குள் என்ன அவசரம் உங்களுக்கு?''

நான் ஒன்றும் பேசவில்லை.

அப்போதே எங்கள் பேச்சு அனேகமாக அறுந்து போயிற்று.

பிள்ளைப்பேறுக்குப் பிறந்தகம் போனவள் ஆறு மாதம் எட்டு மாதம், பத்து மாதம்...... வருடமாகப் போகிறது. திரும்பவேயில்லை. கடிதாசுகளில் ஏதேதோ சாக்குப் போக்கு.

கடிதங்களும் நின்றுவிட்டன.

டால்ஸ்டாயின் Anna Karenina; நாவல் நான் படித்த தில்லை. தலையணையாக வைத்துக்கொள்ளலாம். எழுதின வனுக்கு இருந்த தென்பு படிப்பவனுக்கு எங்கேயிருக்கிறது? தலைமுறை தலைமுறையாக தென்பு தேய்ந்துகொண்டே வருவதற்கு நான் மட்டும் விதிவிலக்கா?

ஆனால் Anna Karenina படம் பார்த்தேன். Greta Carbo, Basie Rathbone.

அதற்குப் பல வருடங்களுக்குப்பின் இன்னொரு Anna karennina—Vivien Leigh Ralph Richardson.

பிறகு ஒரு Russ: an version.

ஆனால் முதல் படத்துக்கு மிஞ்சித்தான்.

தன் மனைவியெனும் முறையில், ஒரு குழந்தைக்குத் தாயாகவும் இருப்பதில் சமுதாயத்தில் அவளுக்குள்ள பொறுப்பைப்பற்றி Annaவிடம் karenin சங்கோசத்துடன் சொல்லிக் கொள்கையில், அவளுடைய மோக வெறி பற்றி எச்சரிக்கையில், Basil Rathbone அறையைச் சுற்றி நடந்து கொண்டே ஒடிக்கும் விரல் சொடுக்குகள் இப்பவும் காதில் உதிர்கின்றன.

நான் ஊருக்குப் போய்க் குழந்தையைக் கொண்டுவந்து விட்டேன். அப்பவும் அவள் சிணுங்கவில்லை. இதுமாதிரியும் உண்டோ? உண்டு போலும்.

அன்று நான் அவளைப் பார்த்ததோடு சரி.

Karenina தன் பிள்ளையிடம் சொல்கிறான்: "Sergei your mother is dead."

பாவம் சேகர் இன்னமும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறான். வேறு வழி? எனக்குத் தலை சுற்று கிறது. இந்தப் பச்சை மண்ணை எப்படிக் காப்பாற்றினேன்? எப்படிக் கெட்டிப்பட்டது? நானா காப்பாற்றினேன்? அந்தத்

தாயுமான சுவாமிக்குத்தான் வெளிச்சம். திரும்பிப் பார்க்கையில்தான் இந்த அந்தகாரத்திலிருந்து எப்படி வெளி வந்தோம்? பயம் தோன்றுகிறது...(Telescopeஐத் திருப்பி வைத்துக்கொண்டு பார்த்தாற்போல்) செருப்பைக் காலிலிருந்து உதறும் சப்தம் எங்கிருந்தோ கேட்கிறது.

நாடியைப் பார்த்துக் கொள்கிறேன். இரண்டு stumps down. ஒன்று மட்டும் ''கிர்ர்ர்...டக்...கிர்ர்ர்...டக்'' அதுவும் மெதுவாகிக் கொண்டிருக்கிறது.

சேகர் வந்தாச்சு. இனிமேல் என்ன? Poor Sekar! ஒரு முறை கண்ணால் பார்த்தாச்சு. ஒருமுறை எதுசாக்கிலேனும் அவனைத் தொடணும். இனிமேல் என்ன?

சேகர் என்னிடம் தந்தியை நீட்டுகிறான். சேகர் brooding type. அதிகமாகப் பேசமாட்டான். நாங்கள் இருவரும் தனியாக இருப்பதற்கு இன்னும் சகஜமாயிருக்கலாம். ''என்னப்பா இன்னும் படுத்திண்டிருக்கேள்' என்று கூடக் கேட்கமாட்டான். எனக்குத் தெரியும் உண்மையில் அவனுக்குக் கேட்கத் தோன்றாது. அவரவர் வந்தவழி,

''Report for Interview tomerrow 10 O' clock Bring all certts Ogls Scindia.''

''கப்பல் கம்பெனியிலிருந்து வந்திருக்கப்பா! நம் கஷ்டம் விடிஞ்சது.''

என் உட்சுவரில் நான்கு கற்கள் இடிந்து விழுகின்றன.

''ஏனப்பா இவ்வளவு லேட்?''

''கடன்காரன் நிறுத்தி வெச்சிண்டுட்டாம்பா. இரண்டு நாள் லீவு கேட்டு வாங்குவதற்குள் உன்பாடு என்பாடு ஆயிடுத்து. உண்மைக் காரணத்தையும் அவனிடம் சொல்ல முடிகிறதா? இருக்கிறவரை, செய்யறவரை செஞ்சிட்டுப் போன்னு கழுத்தையறுத்துட்டான். அப்பா நல்லவேளை

இருக்கிற ஒரு சூட்டை நேற்றுத்தான் சவுக்காரம் போட்டு இஸ்திரி போட்டேன். அப்பா, வண்டி மூணு மணிக்கு. இப்பவே ஒண்ணாயிடுத்து. நீங்கள் செக் வெட்டினால் இருக்கிற ஒண்ணுரெண்டை pack பண்ணிண்டு பாங்குக்கு போய் மாத்திண்டு அப்படியே ரயிலைப் பிடிக்கத்தான் சரியாயிருக்கும். இன்னும் சாப்பிடவில்லை, ரயில்வே Canteen இல் எதையானும் வாங்கிப் பிட்டுப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான்... அப்பா, are you alright?''

',Quite, ஏன்?''

''இல்லை என்னவோ மாதிரி...''

''என்ன மாதிரி.''

''எனக்குச் சொல்லத் தெரியல்லே.''

லஜ்ஜையுடன் புன்னகை புரிகிறான். கனிவாய் ஒரு வார்த்தை பரிமாறிக் கொள்ளக்கூட ஏன் இப்படி பயப்படு கிறோம்? செக்கில் கையெழுத்து திடமாய்த்தான் இருக் கிறது. கண்தான் மங்கிக்கொண்டு வருகிறது. ரொம்பச் சுருக்கில் நினைவுகொள், இதுதான் உன் கடைசி சோதனை. But what do matter now? என் பச்சை மூங்கில் மேல்தான் என் மகனுக்கு விடிவே என்றால் யார் என்ன செய்யமுடியும்? ரொட்டிக் கடைக்காரரே என்னை மன்னிச்சுடுங்க. மிச்சப் பொறுப்பு உங்கள் தலையில்தான் விடியுமோ என்னவோ?

இந்தச் செக்தான் அடிச்சுரண்டல். பிறகு நஹி. அந்த நாளில் பாட்டி கற்சட்டியில் பழையதும் மோரும் பிசைந்து கையில் போடப்போட, நாங்கள் குழந்தைகள் வாரிக் கப்பக் கப்ப, அப்பா என்ன ருசி! கடைசிப்பிடி அதிர்ஷ்டம் யாருக்கோ? பாட்டி சொல்லிக்கொண்டே போட்டு ஏனத்தை தலைமேல் சுற்றுவாள்: ''அடிக்குழம்பு ஆனைபோல!''

வாசற்படியில் frame போட்டாற்போல் நின்றவண்ணம் சேகர் என்னை ஒருமுறை திரும்பிப் பார்க்கிறான். எங்கள் கண்கள் சந்திக்கின்றன. ஆணுக்கு ஆண்கூட தொப்புள் கொடி உறவு உண்டோ?

சேகர் ஆஜானுபாகு (எனக்குத் தெரியாமல், அல்லது தெரியாது என்று நினைத்துக்கொண்டு எங்கோ குத்துச் சண்டை கத்துக்கொள்கிறான். ஓரம்படுத்த அந்த மீசை அவனுக்கு நன்கு அமைந்திருக்கிறது.

சேகர் பேரழகு, சிந்தனை மண்டலம் புகைசூழ்ந்த பெரு விழிகள்; லேசாய்ச் சோகம் பிடித்த கண்கள். என்ன இருந் தாலும் ஆண் வளர்த்த குழந்தைதானே!

சேகர், நீ என் விசுவரூபம். தாழி உடைந்தால் என்ன? வெண்ணெய் எடுத்தாச்சு.

என் வாழ்க்கையில் சாதிக்க முடியாதனவின் நிறைவை உன்னில் கண்டு உன் மூலம் என் நிறைவைப் பெறுகிறேன். ஜன்ம சாபல்யமே அதுதானே! விட்ட இடத்திலிருந்து தொட்டு தீவட்டியை வாங்கிக்கொண்டு ஓடணும்.

சேகர், நீ என் சட்டையுரிப்பு.

சேகர், நான் பச்சைப்புழு, நீ என் முதுகிலிருந்து வெடித்துப் புறப்பட்டுக்கொண்டிருக்கும் பட்டாம்பூச்சி.

சேகர், நான் தோல்வியானாலும் நீ என் வெற்றி.

சேகர், நீ எங்கிருந்தாலும் சௌக்யமாயிருக்கணும். நீ உன் பிரயாணத்தில் கிளம்பிவிட்டால் இதோ நானும் ஓடம் ஏறப்போகிறேன்.

சேகர்—அங்கு இல்லை. frame வெறிச்சிட்டுவிட்டது.

அறையில் புதிதாக ஒரு இருள் திரண்டுகொண்டிருக் கிறது. இது இரவின் இருள் அல்ல. எனக்கே தெரிகிறது. நாடியைப் பார்த்துக்கொள்கிறேன். அங்கு ஒன்றுமில்லை.

காத்திருக்கிறேன்.

# ராம ப்ரஸாதம்

ஸைகிள் மணியின் அலறல், யாரையும் விடிவேளையில் அழுத்திவிடும் (அல்ல அசர்த்திவிடுமா?) கண் செருகலி லிருந்து அவனை வெடுக்கென்று உதறிவிட்டது. ‘‘கழுத் தறுப்பு! கழுத்தறுப்பு! இதோ?வந்துட்டேன்!’’ (இது தினப் படிச் சடங்கு) —எழுந்து காலடியில் தயாராக வைத்திருந்த பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, வழியில் ப்ரகாஷ், அடுத்து கைக்குழந்தை, அப்புறம் மரவட்டைபோல் தலையோடு முழங்கால் சுருண்டு படுத்திருக்கும் செல்லம்மா, மற்றும் கால்கள் கைகள், கணக்கப்பிள்ளை மேஜையை இடறிக் கொண்டு—கள்ளபிரான் கைங்கரியம்—அதன்மேல் காலைப் போட்டுக்கொண்டால்தான் தூக்கம் வருமாம்—(‘‘நாசமாப் போக! கையை ஒடிக்கணும்!’’) அம்மா, ‘‘Factoryக்குப் போயிட்டு வரானோன்னோ உடம்பை அப்படி வலிக்கறதுங் கறான்’’—அப்புறம் அம்மா: கை, கால், காடு, மலை: வனாந்தரம் இருட்டில் தாண்டி, மாடியில் ஒரு படியேனும் தடுக்கி யிறங்கி—ஸைகிள் மணி மறுபடியும் அலறிற்று.

—‘‘சரி சரி, நீ ஊத்தற பச்சைத்தண்ணிக்கு இன்னிக் கென்னப்பா அவ—’’ வசை அப்படியே அறுபட்டு, காலைப் பனிக்காற்றில் நாடா அலைந்தது. தெருவிளக்கில் தெரிந்தது பால்காரன் அல்ல. வேற்றுமுகம்.

‘‘Mr. ஸேதுராமன் இங்கே இருக்காரா?’’

"நான்தான்."

"கையெழுத்துப் போடுங்க. No 36-"

சிட்டாய்ப் பறந்துவிட்டான்.

கவரை உடைத்துப் பிரிப்பதற்குள், உடல்பூரா வெட வெட... தந்தியென்ன வீட்டுக்குத் தினப்பழக்கமா? தோளுக்குப் பின்னிருந்து ஒட்டுப்படிப்பதற்கென்றே தந்தாற் போல் தெரு விளக்கின் மெர்க்குரி வெளிச்சத்தில்,

"Regret Lt. Ramaprasad lost in action. Feared Dead."

மாடிப்படி பிடிசுவர்மேல் ஸேது சாய்ந்தான்.

டீக்கடைக்கு ஓட்டிச்செல்லும் ஒன்றிரண்டு எருமைகள் தெருவில் தள்ளு நடை போட்டுக்கொண்டு உறுமிக்கொண்டு சென்றன.

தெருவில் அங்குமிங்குமாய் எட்ட எட்ட சாணி தெளிக்கும் சத்தம், இப்பவே கேட்க ஆரம்பித்துவிட்டது. இன்னும் சங்குகூட பிடிக்கவில்லை, இன்று வெள்ளிக் கிழமையுமதுவுமாய்-நேற்றே அம்மா, நாட்டுப்பெண்ணிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்: "எனக்கு நாளைக்குப் பகல் சாப்பாடு இங்கு இல்லை. சுமங்கலிப் பிரார்த்தனைக்கு அழைச்சிருக்கா" ஏதோ பேர்கூட சொன்னாள். ஆபீஸ் கவலை, வீட்டுக்கவலை ஆயிரத்தில் அதுதான் அவனுக்கு ஞாபகமா? இதெல்லாம் பொம்மனாட்டிகள் விவகாரம். அதுவும் அம்மாவுக்கு இங்கே கல்யாணம்—அங்கே நிச்சய தாம்பூலம்—இங்கே பூச்சூட்டல், இந்தாத்துலே சீமந்தம்—அரட்டைக்குப் போனவிடத்தில், முன்னே பின்னே கூடத் தெரியாது மூணாமாடியில் "என் குழந்தைக்குத் தொட்டி விடறேன். வெற்றிலைப்பாக்கு வாங்கிண்டு போங்களேன்" நவராத்ரி பூஜை—

அம்மாவுக்கு வரும் அழைப்புக்கு ஒரு குட்டி ஆபீஸே திறக்கலாம். சிலபேர் முகராசி அப்படி. கீரைக்கூடைக் காரிக்கு அம்மா கைப் போணி வேணும்.

"உனக்கோசரம் கீரை தினம் எத்தனை தரம் சமையல் பண்றது. கீரைப்பூச்சி வெச்சுடும்... பையன்கள் கரிச்சுக் கொட்றான்கள்."

"எனக்காச்சும் ஒரு கட்டு வாங்கிக்கோம்மா... ஒரே ஒரு கட்டு, மாட்டியா? கூடையை உன் கையாலே ஒரு தடவை தொடேன்..."

சிலபேர் கைராசி முகராசி அப்படி.

இதற்கெல்லாம் மனுஷன், இருந்தும் கெடுத்தான்னு இன்னிக்கு வேளை பார்த்து அம்மா தலையில் கல்லைப் போடணுமா?

அப்பா மேல் எழுந்த சீற்றத்தில் ஸேதுவுக்கு வயிற்றைக் குமட்டிற்று.

மாடியேறிப்போய், விடிந்ததும் விடியாததுமாய்—அம்மா கொஞ்சம் லேட்டாய்த்தான் எழுந்திருப்பாள்—அம்மாவை எழுப்பி இந்த சமாச்சாரத்தை அவளிடம் எப்படி உடைப்பேன்?

தானாடாவிட்டாலும் தன் சதையாடும் என்று சொல்கிறார்களே, வசனம் மெய்தானோ என்னவோ, அவனுக்கு இரண்டு ராத்ரியாகவே இருப்புக் கொள்ளவில்லை. படுக்கையில் புரள்வதோடு சரி. தூக்கமில்லை. சுவரில், விடி விளக்கின் சிம்னியில், கூரை தூலங்களிடையே அப்பா முகம் தோன்றித் தோன்றி மறைந்தது. "இரண்டு நாளா என்னவோ மாதிரியிருக்கேளே! யார்மேல் நினைப்பு?"

ஸேது பல்லை நெறநெறவென்று கடித்தான்.

"ஏன், நீ வேலை பார்க்கிற இடத்தில், Head Clerk உன்னிடம் பைலைக் கொடுக்கறப்போ அவன் கை உன் மேல் இடிச்சுதா? உன் boss உன்னை இன்று லஞ்சுக்கு அழைச்சுண்டு போனானா?" என்று திருப்பிக் கேட்க ரொம்ப நாழி ஆகிவிடாது.

செல்லம் பாதி வேடிக்கையாகக் கேட்டாலும் உள்ளூர அவளுக்குச் சந்தேகம்தான். அதுவும் இரண்டு பெற்ற பின்னருமா? என்ன படிப்பிருந்து என்ன பயன்? அந்தப் பின் புத்தி எங்கே போகும்?—

—"பால்!"

மணியடித்துக்கொண்டு, பெருமாள் ஸைகிளை மிடுக்காய் வாசலில் நிறுத்தினான்.

காப்பியை ஸ்ட்ராங்காப் போட்டுக் குடிச்சு, தைரியத்தை வரவழைச்சுண்டு அப்புறம்தான்—

—ஆனால் அப்புறம்கூடத் தைரியம் வரவில்லை. கண்ணன் வேலைக்குக் கிளம்பிவிட்டான். அவனைத் தடுத்து நிறுத்த 'தில்' இல்லை. கூடவே:

"இன்னிக்கு Night பண்ணிட்டு நாளைக் காலைதான் வருவேன்."

"என்னடா ஸேது உனக்கு உடம்பு சரியில்லையா?"

"ஏன்?"

"என்னவோ மாதிரியிருக்கியே!"

"என்ன மாதிரி?" கண்ணாடியில் பார்த்துக்கொண்டான்.

"என்னவோ பேயறைஞ்ச மாதிரி—"

"ஆமாம், கவனிக்கணும்— ஆபீஸில் யக்ஷிணி—மோஹினி" செல்லம் போகவரக் காது கேட்க முணுமுணுத்தாள்.

அவனுக்குக் கண் துளும்பிற்று. அசல் இடத்து சம்பந்தம் என்றால் இப்படித்தானிருக்குமோ. இரக்கமேயில்லாமல், 'அத்தை மகள், மாமன் மகள் என்று கட்டியிருந்தால் ரத்தபாசமேனும் இருக்கும். இதெல்லாம் உடல் வெறியோடு சரி. இல்லாவிட்டால் கலியாணமாகி அஞ்சு வருடத்துக்குள் இரண்டா? அவனுக்கும் அவளுக்கும் பூரா இரண்டு வயதுகூட வித்தியாசமில்லை, காரணம்? லபி அப்படி.

ஆனால் அதே ரத்தபாசம் அவனுக்கும் அப்பாவுக்கும் இடையில் இல்லை.

ஆபீஸில் ஏதோ கூட்டலைப் போட்டுக்கொண்டே அவன் கேள்விக்குப் பதிலைத் தேடிக் கொண்டிருந்தான்.

* * *

லெப்டினன்ட் ராமப்ரஸாத் குடும்பத்தில், தலைமுறைக்குத் தலைமுறை ஏதேனும் ஒரு பேர் ராம சப்தத்துடன் வழங்கும்... ராமப்ரஸாத், கொள்ளுத் தாத்தாவுக்குத் தாத்தா கோடி ராமநாமம் ஜபித்தவராம். அங்கிருந்தே பெயர்ப் பழக்கம் கடைபிடித்தாகிறது.

லெப்டினன்ட்—எப்போ பதவி உயர்ந்தது? களத்திலேயே ஆகியிருக்க வேண்டும். இந்த விஷயம்—தந்தி கூறும் விஷயம், அப்பட்டமாக, நினைக்கவே அச்சமாயிருந்தது. எங்கு எப்படி நேர்ந்திருக்கும்? பர்மாவிலா? மலேயாக் காடுகளிலா? நடுக்கடலிலா? இல்லை இந்தப் பக்கம் ஜெர்மனி, ரஷ்யா— அதுவும் யுத்தம் முடிவாட்டத்தில், வயித்தெரிச்சல்.

தந்தியில் என்ன தகவல் தெரிவிக்கின்றான்கள்? Lost in Action. முதலில் உடலே கிடையாது. தந்தி ஜேபியில் தேளாய்க் கொட்டிற்று. சாவுத் தீண்டல் சடங்குகள், பாபம், புண்ணியம், நரகம்—மூலைக்கொன்று அவைகளின் அரூபங்களில் பயமுறுத்தின. யாவற்றிற்கும் மேலாக, அம்மாவை மங்கலம் களைந்த நிலையில் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. No! இது அம்மாவுக்கு நேரக் கூடாது. நடக்கறது நடக்கட்டும். என்ன நடக்கப் போகிறது? மிலிடரி பென்ஷன் இதுவரைபோல் பாங்கில் அம்மா கணக்கில் சேர்ந்துவிடப் போகிறது. வராவிட்டாலும் அம்மாவுக்கு என்ன தெரியப் போறது? காண்பித்த இடத்தில் கையெழுத்து, கோணல் மாணலா ஏதோ ஒரு கோலம்—வேறென்ன?

நம் சமுதாயத்தில் இந்தச் சிவப்பையும் மஞ்சளையும் பெண்களுக்கு உயிர் நிலையா என்னம்மா 'ஜூல்' காட்டி யாறது? மற்ற நாகரிகங்களில் இந்தக் கொடுமை உண்டா? சில ஜாதிகளில் நடுவீட்டுத் தாலி இன்னும் பழக்கத்தில் இருக்கிறது. இதெல்லாம் அம்மாவிடம் சொல்ல முடியாது. "ராமா! ராமா!" என்று காதை பொத்திக்கொண்டு போனவா கரையேறணும்னு வேஷத்தை போட்டுக்கொண்டு விடுவாள். அம்மாவோ மூடநம்பிக்கை, தன்னம்பிக்கை, அசடு, சமர்த்து எல்லாம் ஒன்று சேர்ந்த ஒரு அவியல். சிக்கு கண்டுவிட்ட பூணூல் மாதிரி. நுனி கண்டுபிடிக்க முடியாது.

இப்போது இருக்கிறபடி நடக்கிறவரை நடக்கட்டுமே. நாளடைவில் தானாகவே நம்பிக்கை தளர்ந்து, ஆறின கஞ்சி பழங்கஞ்சியாகி, அந்தச் சமயத்தில் அதற்குரிய சடங்குகள் பிராயச்சித்தங்கள் நம் சாஸ்திரத்தில் எதற்குக் குறைச்சல்? வைதீக தர்மம் என்று எல்லாம் வயிற்றுப் பிழைப்புத்தான். எரிகிற வீட்டில் பிடுங்கியவரை—

"என்னப்பா balance ஆச்சா? what is this wool gathering?"

புத்தகத்தின் மேல் முஸ்திப்பாகக் குனிந்தான்.

நான் வயிற்றில் பூகம்பத்தைக் கட்டிக்கொண்டிருப்பதை இவன் என்ன கண்டான்? என்னிக்கும் ஒரே பாட்டுத்தானா?

தவிர, அம்மாவைக் கோரணி பண்ணுவதற்கு, அந்தத் தியாகத்தை அம்மா செய்வதற்கு என் அப்பன் தகுதியில்லை.

அப்பாவுக்கு fieldக்கு உத்தரவு வந்ததும், உள்ளூர வாய்விட்டுச் சொல்லிக்கொள்ள முடியாத பயம் வாட்டி னாலும், அதையும் தாண்டி, சுமையிறங்கினாற்போல் 'உஸ்' ஒன்று ஸேது உணர்ந்தான். இனி வீட்டில், அப்பாவுக்கும் அம்மாவுக்குமிடையில் நாள் தவறினாலும் தான் தவறாத சண்டைக்கு ஓய்வு காணலாம். அம்மாவுக்கு, அப்பாவின் வசவு, அடி, உதைகளினின்று நீண்ட விடுமுறை. வீட்டி லேயே மழை பெய்து ஓய்ந்தாற்போல் ஒரு நிம்மதி. மூர்க்கன்—பெரியவாள் சண்டையைக் குழந்தைகளுக் கெதிரில் போடலாமா என்று பார்க்கமாட்டான். சண்டை எப்போ, எப்படி மூளும் என்றே தெரியாது.

ஒரு தடவை அம்மாவைக் குண்டுகட்டாய் அலேக்காய் அப்படியே தூக்கி, சுவரில் வீசி எறிந்திருக்கிறான் பாரு, அவன் அறையுள் நுழைவதற்கும் அந்தக் காக்ஷிக்கு சாக்ஷியா வதற்கும் சரியாக இருந்தது. அந்தமாதிரி பந்தாடலுக்கு அகாத்ய பலம் வேண்டும். அம்மா ஒன்றும் பூஞ்சையில்லை.

ஆனால் அப்பா மட்டும் லேசா? அப்பா ராமனா? ராக்ஷ ஸன்னா! வாட்டசாட்டமா நல்ல உயரம். நல்ல சிவப்பு. கொத்து மீசை. அடர்ந்த சுருட்டை மயிர். அடர்ந்த புருவங்களினடியில் தழல் வீசும் மேட்டு விழிகள். அழகன். கம்பீரன். கோவில் மணிபோல் கார்வை கொண்டு குரலில் ஒரு அடிக்கனம்.

அன்று அவனுக்கு அவர்மேல் மூண்டெழுந்த கோபா வேசத்தில், ஓடிப்போய், சமையலறையிலிருந்து அரிவாள் மணையை எடுத்து வந்து தலையைச் சீவி, கையில் பிடித்துக் கொண்டு தெருவலம் வந்து அதுமாதிரி ஒரு சேதி இரண்டு நாட்களுக்கு முன்தான் பத்திரிகையில் படித்தான்—போலீஸில் சரண்—ஆனால் நினைப்போடு சரி, நாம் எல்லாம் என்ன இட்லி சாம்பார்தானே! முதலில் அவருடைய ஒரு முறைப்புக்கு அவன் காண்பானா? அது மாதிரிதான் மற்றும் ஒருமுறை அவர்களிடையே அவன் குறுக்கிடப் போய், அவர் காட்டுப் பன்றி போல் அவன்மேல் திரும்பியதும் அம்மா அலறிப் புடைத்துக்கொண்டு அவனைப் பொத்தி, அவன்மேல் விழவிருந்ததைத் தான் வாங்கிக் கொண்டு—

ராமா! ராமா!

அதற்கு அடுத்த தடவை அம்மாவே அவனைக் காலை வாரிவிட்டாள். ''எங்கள் சண்டையில் நீ யாரடா பூர? உன் கடையைக் கட்டிண்டு போய்ச்சேர்—மத்யஸ்தத்துக்கு உன்னை அழைக்கல்லே—''

அவ்வளவுதான். அதுவே அவனுக்கு அதிர்ச்சி. எதற்கும் மூன்று தரம் உண்டு. அத்தோடு சரி, அப்புறம் அவர்களிடை யில் புகைச்சல் காணும்போதே வீட்டைவிட்டு வெளியேறி விடுவான். அவனுக்குக் கலியாணம் ஆன மூணாம் நாள், அப்பா கிளம்பிப் போயாச்சு.

மனுஷன் குடிப்பானோ? சகவாசதோஷம் அப்படி யொன்றும் தெரியவில்லையே, சிகரெட் நெடிதான். அதுவும் எப்பவோதான்—

அப்பா, நீ அம்மாவைப் படுத்தின பாடுக்கு, உனக்குக் கிடைக்க வேண்டியதுதான் கிடைச்சிருக்கு, எந்த மரத்தடி

யில் குடல அறுந்து குற்றுயிராய்க் கிடந்தாயோ, எந்தக் கட்டெறும்புச்சாரி, உன் உடல் மேலேயும் உள்ளேயும் புகுந்து மொய்த்ததோ?

''சேதுராமன்!''

புத்தகத்தை மூடி வைத்துவிட்டு வெளியே சென்றான்...

நாட்கள் ஊர்கின்றன.

அப்பாவுக்கு அத்தனையும் வேணும் என்று தோன்றிய வேகத்தை நாளாக ஆகக் கடைப்பிடிக்க முடியவில்லை.

அந்தக் குத்து மீசைக்கிடையில், தேங்காயுடைத்தாற் போன்று, சிரிப்பில், புன்சிரிப்பில், வெளிப்படும் அந்தப் பல் வரிசை, அந்தத் தாடையிறுக்கம், நூல்கட்டிய ஜீயோமிதிக் கோடின் தூயசரிவில் அந்த நெற்றி விசாலம். ஆள் அழகன் மட்டுமல்ல, ஆளப்பிறந்த களை.

அதுதான் அம்மாவுக்கு அத்தனை உதை வாங்கியும், இத்தனை வயதாகியும் மயக்கம் தெளியவில்லையோ? அம்மா ஒரு அசடு. ரகளையானால் மூணு நாளாவது பேசாமல் இருக்கணும். அடுத்த அரை மணிக்குள் 'இன்னிக்கு உங்களுக்குப் பிடிச்ச டிபன் அடை. இன்னிக்கு ரேடியோவில் உங்களுக்குப் பிடிச்ச கச்சேரி—ஆலத்தூர் சகோதரர்கள்...'' கெக்கேக்கே, என்றால் மனுஷனுக்கு ஏன் மண்டைக்கு ஏறாது?

அப்பா, அம்மாவை ஏசியதில் அரைக்கால் பங்கு செல்லம் என்னிடம் கேட்டுப்பளா? 'உன்னோடு வாழ்ந்தது போதும்'னு எப்பவோ பிறந்த வீட்டுக்குக் கம்பி நீட்டியிருப்பாள். சொல்லவும் முடியவில்லை. மெல்லவும் முடியவில்லை. என்றைக்கு ஒருநாள் எனக்கும் செல்லத்துக்குமிடையில், எங்கே போய் முடியப்போகிறதோ? சிறிசுகளின் சச்சரவுகளைத் தீர்க்க, அவர்கள் சுபாவங்கள் படியும்வரை.

அவர்கள் தடுமாற்றத்தை ஒழுங்குபடுத்தப் பெரியவாள் வேண்டியிருக்கிறது. அதற்கு அம்மா பற்றாது. அப்பாவின் விழி வேண்டும், அவர் கர்ஜ்ஜனை வேண்டும், அதையே ஒரு வேளை செல்லம் விரும்புவாளோ?

இந்தப் படிப்பு, பண்பு எல்லாம் ஒரு ஸ்டேஜ்வரை தான், நம் தோலைச் சுரண்டினால் நாம் எல்லோருமே மாந்தாவிகள்தான். நான் இப்படிப் பாஷைப் படுத்தலை தான், அப்பா ஆரம்பத்திலிருந்தே செயல்படுத்தினாரோ?

"ஏண்டா ஸேது. ஒவ்வொருத்தரா திரும்பிண்டிருக்காப் போலிருக்கே! Black outஐக் கூட எடுத்துட்டான். நாள் ஆறது. அப்பா ஏன் இன்னும் வரல்லே?

"யுத்தம்னா, நீ என்ன கத்தரிக்காய்க் கடையில் சொத்தை பொறுக்கற மாதிரின்னு நினைச்சுண்டிருக்கையா? யுத்தம் சமுத்ரம்மா. யார் யார் எங்கெங்கேன்னு பிரிக்கறத் துக்கே நாளாகும்."

"அப்பாவுக்கு ஏதேனும் நேர்ந்திருக்குமோடா?"

உள் வேதனையில் அம்மாவுக்குப் புருவங்கள் நெரிகை யில், திடீரென அழகிட்டாள். "அப்படி ஏதேனும் ஆச் சுன்னா தகவல் தெரிவிப்பா. தகவல் தெரியல்லேன்னா, தெரியல்லேன்னு தெரிவிப்பா. நெஞ்சு முண்டை விழுங் கினான். நெஞ்சு முள் குத்திற்று. "ஏண்டா கண் கலங் கறது, என்னவாவது?" அம்மா னக, அவள் மார்க்குலையில் தவித்தது. "ஒண்ணுமில்லே. எண்ணெய் தேச்சுண்டு நாளாச்சு..." ஸேது அவசரமாய்க் கழன்றுகொண்டான். இந்தப் பொய் இவ்வளவு பெரிய சுமையாயிருக்குமென்று அவன் காணவில்லை. அதைக் கடைசிவரை சாதிக்கத் தனக்குத் தகுதி இல்லையென்று உணர்ந்ததும் திகிற்புகை கால் கட்டை விரலிலிருந்து உச்சி மண்டைவரை உள்ளே பரவிற்று.

அந்தத் தந்தியைக் கிழித்தெறிய அவனுக்குத் தைரியம் இல்லை. விஷயத்தை என்றேனும் அவிழ்த்துவிட நேர்ந்தால் அதுதானே சாக்ஷிக்கு வர வேண்டும்! அவன் எங்கு போனாலும் கூடவே அதுவும் சென்றது. எங்கேனும் அசதி மறதியாக வைத்துவிட்டால், கீரைக்காரிக்குச் சில்லரைக்காக செல்லம் hanger இல் தொங்கும் pant pocket இல் கைவிட்டு அங்கு அது அவள் கையைக் கடித்துவிட்டால்—

"என்னடா ஸேது, வீட்டுக்குள்ளே கூட சொக்காயைக் கழட்டமாட்டேன்கறே? என்ன தான் உனக்கு உடம்பு? மூகமே சரியாயில்லையே!"

"அவருக்குப் புதுசா அர்ச்சுன மச்சம் உண்டாயிருக்கு. அதான் யாருக்கும் காட்டமாட்டார்."

"என்னடா செல்லம் சொல்றாள். எனக்கு ஒண்ணும் புரியல்லியே!"

கதா காலக்ஷேபம்னு அம்மா போவதில் குறைச்ச லில்லை. ஆனால் யார் கதை கேட்கப்போறா?

அம்மாவுக்கு நாளுக்கு நாள் சோபனங்களுக்கு அழைப் புக்குக் குறைவே கிடையாது. நாளுக்கு நாள் அம்மாவுக்குக் களையும் அதிகரித்துக்கொண்டேயிருந்தது. அணையும் முன் கொழுந்து, அவள் கழுத்துக்கு, உலைக்கு, அந்தத் தேஜஸ்ஸே அத்தாக்ஷியோ? ஒருவரும் தன்னைச் சுற்றி யில்லாத சமயத்தில் காத்திருந்தாற்போல் அவனையறியா மலே விக்கி விக்கி அழுகை வரும்.

ராமா!

யார் கண்ணுக்கும் தெரியாமல் தனக்கு மட்டும் படும், இந்தத் தோள்மேல் குரங்கு சவாரி தாங்கமுடியவில்லை.

Electric train?

Lorry?

Level crossing?

யாருக்கும் அகஸ்மாத்தாய்ப் படணும்.

அப்புறம் அம்மா, செல்லம், குழந்தைகள்?

செல்லம் படித்த பெண், உத்தியோகம் பண்ற பெண், எப்படியும் பிழைத்துக்கொண்டு விடுவாள். அம்மாதான் பாவம்—எனக்கு ஏன் இப்படித் தோணறது? இந்த வீட்டுக்கு என்ன வந்துடுத்து? தப்பிக்கவே வழியில்லையா?

அம்மாதான் பாவம், பிரகாஷ் அப்படியே அவன் தாத்தாவை உரிச்சு வெச்சிருக்கான். அம்மா, என்னை மன்னிச்சுடு. நான் எல்லாம் நல்லதுக்குத்தான் நினைச்சேன்.

ரயில் தடதடவென்று அவன்மேல் பாய்ந்தோடிற்று. எப்படி நான் தண்டவாளத்திடையில் விழுந்தேன், விழ முடியும்? All over, இதென்ன புது உலகில் விழிப்பா?

விடிவிளக்கில் கூரையில் தூலங்கள் பாய்ந்தன.

அம்மாடி! மார் படபடப்பு இன்னும் அடங்கவில்லை. கனவே இப்படி இருந்தால் நனவு எப்படியிருக்கும்? அதுவும் அப்பா உங்களுக்கு—அப்பா! அப்பா! யாரோ தோளைப் பிடித்து உலுக்குகிறார்கள்.

"என்ன துக்கமாடி துர்க்கனாக் காண்றேள்? உங்களுக்கு இந்த நாலு மாஸமா என்னமோ பிடிச்சுண்டிருக்கு! சந்தேகமேயில்லை."

அன்று வெள்ளிக்கிழமை. பிற்பகல் அம்மா எங்கோ சுபாஷிணி பூஜையாம், இன்னும் திரும்பவில்லை. யார் எங்கே போனால், எங்கே வந்தால் என்ன?

அவன் நாற்காலியில் முழங்கால்களுக்கிடையே இரு கைகளையும் கோர்த்த வண்ணம், சுவரை வெறித்தபடி உட்கார்ந்திருந்தான்.

வாசலில் கார் நிற்கும் சப்தம்.

செல்லம் அவசரமாய் மேலே ஓடிவந்தாள். "உங்களை யாரோ பார்க்க வந்திருக்கா—" என்று சொல்லிக் கொண்டே. ஆனால் அதற்குள் அவளைத் துரத்திக்கொண்டு மாடியேறி வரும் பூட்ஸ் கதவை அதட்டலாய்த் திறந்தது.

"Hello son! how are you? வீட்டில் யாருமில்லே?"

ஸேதுவின் உடல் தானாக எழுந்தது. முகத்தில் மாறி மாறி சிவப்பு, நீலம், வெள்ளை—வாய்பிளந்து நாக்கே கூரையை முட்டிற்று. ஆனால் சத்தம் வரவில்லை. கை அவரைச் சுட்டிச் சுட்டிக் காண்பித்துத் தவித்தது.

what is the matter with you? Have you seen a ghost? Ah, இவள்தான் நாட்டுப் பெண்ணா, என்ன இந்த வயசிலேயே கிழவி ஆயிட்டையே? அவள் எங்கே? வழக்கப்ரகாரமா? என்ன சொன்னாலும் அவள் திருந்தமாட்டாளே!"

ஸேதுவின் கைகள் அவன் உடம்பில் எதையோ தேடித் தவித்தன. ஆ! தந்தியை உறையோடு நீட்டினான்.

உறையிலிருந்து எடுத்து, அக்கண்கள் தந்தியை வெள்ளோட்டம் விட்டன.

"A mistake. These things happen; you know. ஒரே பேர். அதே initial. ஒரே rank—இதைச் சூடாமணி மாதிரிக் காப்பாத்தி வெச்சிருந்தையா?"

தந்தி நாலு சுக்கல்களாய் அவர் காலடியில் விழுந்தது.

(அதுதான் முறை. சூடாமணிதான். தந்திக்குரியவர் அவர்தானே!" அப்பாடி!

திடீரென்று அந்த மேட்டு விழிகள் கோபத்தில் விரிந்தன.

"என்னடா தந்தியைப் பார்த்து உன் அம்மா வேஷம் போட்டுண்டுட்டாளா?"

அப்பா அப்படிக் கேட்டது அவனுக்கும் சிரிப்பும் அழுகையும் ஒரே சமயத்தில் பீறிட்டன. காலடியில் பூமி கிடுகிடென... அப்பா அவனைச் சட்டெனத் தாங்கிக்கொண்டார். என்ன தோள்கள்!

"He has fainted away! Bring some water."

செல்லம் சமையலறைக்கு ஓடினாள்.

ஆனால் ஸேதுவுக்கு உள் ப்ரக்ஞை மாறவில்லை. ஆம் இது ஒரு ஆச்சரியமில்லை. தந்தியை இத்தனை நாள் தாங்கிக்கொண்டிருந்தது ஒரு பக்கமிருக்கட்டும். முதலில் மறைத்துவிட வேண்டும் என்று தோன்றியதற்கே காரணம் என்ன?

அது அந்தக் குலராமனுக்குத்தான் வெளிச்சம். மேகங்களைப் பிளந்துகொண்டு சூரியன் கிளம்புவது போல் இத்தனை நாள் அப்பா மேல் பாஷாணம் பாலாய் மாறும் இன்பப் பயங்கரத்தில் அப்பாவைத் தரிசிக்கையில், அவர் வெறும் ராமப்ரஸாதாக இல்லை. தான் நினைக்காவிடினும் பரம்பரை, தன் அகண்ட கருணையில் வழங்கிய ராமப்ரஸாதமாகவே தெரிந்தார்.

அப்பா, உங்களை நான் முத்தமிடலாமா?

# கமலி

மலைகள் நடுநடுங்கும் கானல்.

தோட்டத்தில் வாழையும் கத்தாழையும் உச்சி வெய்யி லில் தனிப் பச்சை விட்டன.

வடக்கே பார்த்த வாசல். வீடு ரொட்டி அடுப்பாய் வெந்தது. ஆனால் கொல்லை ரேழி மட்டும் ஊட்டியோடு உறவாடிற்று. கொல்லை ரேழி மாமியாருக்கு மானியம். மதியம் அங்கு கட்டையை நீட்டிவிடுவார். நீட்டியாச்சு.

தூளிக் கயிறை பங்கா மாதிரி யிழுத்துக்கொண்டு சிவகாமி கூடத்தில் புழுங்கினாள். மின்விசிறி கூடத்தில் அனலைக் கடைந்தது.

அறையில், அனந்து, அண்டை வீட்டு, பின் வீட்டுக் குட்டிகள் தூங்கவொட்டாமல் ஏதோ கொட்டமடித்துக் கொண்டிருந்தன. அதுகளுக்கு வேளை கிடையாது. போது கிடையாது. எப்பவும் இங்கேதான் குடி. இவன் அங்கே தொலையட்டுமே! மாட்டான். துஷ்டத்தனம் சொல்லுபடி போகல்லே அத்தோடு அனந்து ஒரு 'ராஸக்ரீடை' மன்னன். எப்பவும் பொட்டைக்குட்டிகள்தான் அவனைச் சுற்றி. ஒன்றிரண்டு தாவணிகள்கூட. இந்த வயசுக்கே இப்படின்னா வயசுக்கு என்ன வம்பை இழுத்துண்டு வருவானோ?

அனந்து பொண்ணாய்ப் பிறந்திருந்தால் ஒரு எச்சி லாவது ஆடும். கன்னிப்பொண்ணுக்குத் தோஷமில்லேன்னு உலை நீருக்கு அடுப்பில் மடி ஜலம் ஏற்றச் சொல்லலாம். பொண்ணாப் பிறந்துடுத்துன்னு தனிக் கவலைப்படற நான் தான் போயிடுத்தே! அதுகளும் படிக்கிறதுகள், உத்யோகம் பண்றதுகள், கல்யாணத்துக்குச் சேர்த்து வெச்சுக்கறதுகள்! உத்யோகத்தோடே புக்ககத்துக்குப் போய்ச் சேர்ந் துடறதுகள்.

அனந்துக்கு எட்டு வருஷத்துக்குப்பின் தூளியில் தூக்க ணாங்குருவி—தூங்காத குருவிதான்—அதுவும் குஞ்சு மிள காய்தான். வயத்தில் ஒண்ணு புரள்றது, ஈசுவர சித்தம் எப்படியோ? எப்படாப்பா கயளப்போறதுன்னு இருக்கு. ஆனிக்கு மாசம், அப்பவும் அயட்டல்தான்; சிவாமி முனகி னாள். பல வேதனை.

ரேழியில், உண்ட மயக்கத்தில், பனி உடம்பின் அசதி யில் பாட்டிக்குக் கண் செருகிற்று.

இன்னிக்குக் காங்கை, கூடத்தான். ஒத்துக்கறேன். நிறை கர்ப்பிணிதான் ஒத்துக்கறேன். அதுக்காக இப்படி ஒரு முக்கலா? முக்கவே தனியா ஆள் போடலாம் போல இருக்கே! நாங்கள் எல்லாம் சுமந்ததில்லையா? இந்த வெயிலுக்கே இப்படி விண்டுபோறாளே, ஒரு டில்லி, ஒரு இந்தூர், ஒரு ஜப்பல்பூருக்கு இவள் என்ன ஜவாப் சொல்லு வாள்? எல்லாம் தஹிக்கிற வெய்யில்தான். ஸகிக்காத குளிர் தான். ஓரே அநாசாரம், அசுத்தம்தான். எல்லாரும் எல்லாத்தையும் எச்சில் பண்ணிக் குடிக்கிற இடம்தான். இது நடுவுலே வளைய வரணும். வளைய வந்தாச்சு.

'தொப்'பென்று தொப்பைமேல் யாரோ விழுந்ததும் வெடுக்கென விழித்துக்கொண்ட அந்த அதிர்ச்சியில் நினைவு கள் கொண்டு போய்விட்ட அரை மயக்கத்தில், திடீரெனத்

தன்னைச் சூழ்ந்துகொண்ட சிரிப்பின் கொந்தளிப்பு ஆர வாரத்தில் யாரிலிருந்து யார் என்று பிரிக்க முடியவில்லை. கண் சதை வளர்ந்ததால் கண் மங்கலில், கானல் வெய்யிலில் ரேழியின் குளுமையான இருட்டில்—தளர வாரிய வங்கிக் கூந்தல் நடுவகிடின்கீழ், ஸ்படிகம் போன்ற நெற்றி மத்தியில் பச்சை ஜிகினாப் பொட்டு, பச்சைப் பட்டுத் தாவணி, பச்சை ரவிக்கை, பச்சைப் பட்டுப் பாவாடை—

அவளின்று வெளிப்பட்ட வீறலில், குழந்தைகள் அரண்டு விட்டன.

விஷயம் புரியாமல் எதிர் அலறல் கொடுத்துக்கொண்டு சிவகாமி உடல் குலுங்க ஓடிவந்தாள். எல்லாரும் பாட்டி யைச் சூழ்ந்துகொண்டனர்.

''என்னம்மா? என்னம்மா?''

''கமலீ! கமலீ!!'' பாட்டி அலறினாள்.

''கமலியா?''

திகைத்துப்போய் சிவாமி திரும்பிப் பார்த்தாள். அனந்துக்குப் பெண் வேஷம் போட்டிருந்தது. அவளுடைய சவுரி பாழ். ஆனால் பயல் பெண்ணாகவே மாறிவிட்டான். பெண் இவ்வளவு அழகாயிருப்பாளோ, சந்தேகம்தான். பக்கத்தாத்து பாரதி, பின்னாத்து சித்ரா, எதிர்வீட்டு ஜாய்ஸ் எல்லாரும் சேர்ந்து பண்ணியிருக்கும் அலங்காரம். சின்னதா, ஒரே சைஸா மொட்டு மாதிரி இரண்டு கொட் டாங்கச்சிகூட இதுகளுக்கு எங்கே கிடைச்சுதோ? துஷ்டை கள் துஷ்டைகள்.

விசுவரூபமெடுத்தாற்போல், பாட்டிக்கு உருவமே பெரிதாகிவிட்டாற்போல் ஒரு ப்ரமை தட்டிற்று. பயமா யிருந்தது. முகத்தில் குங்குமம் கொதித்தது. கன்னங்கள் வெடித்துவிடும்போல் புடைத்துவிட்டன. விழிகள் ஏற் கெனவே பெரிசு. சற்று புலிக்கண்—இப்போ மேடிட்டு திரி

களை ஏற்றினாற்போல் எரிந்தன. அந்த வெறித் தோற்றத்தில், முகத்தில் ஓர் அற்புதமான அழகு—அதற்கு சொந்தமில்லாதது—குங்கிலியம்போல் குபீரிட்டது பயமாயிருந்தது. பேர் ஏன் கறிவேப்பிலை? தாழம்பூப் பாட்டி என்றால் முற்றிலும் தகும். இந்த வயசுக்கே இந்த மேனியானால் என் வயசுக்கு எப்படியிருந்திருப்பார்? சிவாமிக்கு அசூயை தட்டிற்று.

"அம்மா" கொஞ்சம் தீர்த்தம் குடிக்கறேளா? உடம்பு சரியாயிருக்கேளா?"

வாயோரம் வழிந்த எச்சிலை, பாட்டி முன்றானையால் இழுத்துத் துடைத்துக் கொண்டாள்.

"அம்மா, இந்தக் குட்டிகள் அனந்துவை என்னவோ கோலம் பண்ணி, விளையாட்டுக்கு உங்கல்மேல் தள்ளிவிட்டிருக்குகள்."

பாட்டி, புரிந்துகொண்ட முறையில் தலையை ஆட்டினார்.

"ஆனால் நீங்கள் கமலின்னு வேறே ஏதோ பேர் சொன்னேள்."

"என் பெண்."

"ஓ! எனக்கு இதுவரை தெரியாதே!"

"உன் ஆம்படையானுக்கு மூத்தவள்."

"ஓ, அப்படியா? என்ன ஆச்சு?"

"என்ன ஆகும்? செத்துப் போயிட்டா. இதென்ன கேள்வி?"

"அதுக்கில்லேம்மா, இந்தாத்துக்கு வந்து இதோ நான் மூணாவது பெக்கப்போறேன். இதுவரை அந்தப் பேர், வெறும் பேச்சுவாக்கில்கூட அடிபட்டதில்லே. அவரும் சொன்னதில்லே..."

''இதென்ன க்ராஸ்—வக்கீல் மாதிரி? எல்லாத்துக்கும் உனக்குக் கணக்கு ஒப்பிச்சாகணுமோ?

சரி, பாட்டிக்கு உடல் தன் நிலை திரும்பியாச்சுக்கு வேறு ருசு வேண்டாம். கூஜாவில் தீர்த்தம் தலைமாட்டில் வைத்துவிட்டு குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு, சுவாமி கூடத்துக்குப் போய்விட்டாள்.

எங்கோ ஒரு நாயின் குரைப்பு.

இந்த வேளைக்குத் தூக்கம் ஒரு சொர்க்கம். ஆனால் பாட்டிக்குத் தூக்கம் கலைந்துவிட்டது. முனகி முனகிப் புரண்டாள்.

''நீங்கள் கடவுளைக் கண்டிருக்கிறீர்களா?''

''நிச்சயமாக் கண்டிருக்கிறேன்.''

''எனக்குக் காட்டுவீர்களா?''

''கண்டிப்பாய்க் காண்பிக்கிறேன்.''

(ஏதோ போற வழிக்குப் புண்ணியம் தேட நானும் ஒண்ணு ரெண்டு ஏதேனும் படிக்கறேனே!)

மஹான்கள் வழிக்கு நாம் போக வேண்டாம். நம் சந்தேகங்கள், கசடுகள் நம்மோடேயே இருக்கட்டும். இருந்தாலும்—

ஒரு வானத்தின் நீலத்தில் அவள் நிறம்.

வாழையிலையின் பச்சையில், காற்றின் இலைப்பாளத்தின் அசைவில் அவள் பாவாடைக் கொசுவம், பஞ்சவர்ணக் கிளியின் சிறகில் அவள் ரவிக்கையின் கலர்.

மழையிருட்டில் அவள் கூந்தலின் கருமை. மேகத்தின் கனத்தில் அவள் கூந்தலின் அலை.

—இதுபோல் அம்சம் அம்சமாய், அல்லது உபமானமாய் அவரவர் மனப்பக்குவத்துக்கேற்றபடி அவள் சிருஷ்டியின் அழகில் அவளுடைய மட்டிலாத பெருமையின் தன்மையை ஒருவாறு அனுமானித்துக் கொள்ளலாமோ என்னவோ (இந்தச் சமயத்தில் இந்தப் பாஷைகூட என்னுடைய தில்லை)—வானவில்லை இந்திர தனுஸ் என்கலியா, அது மாதிரி—ஆனால் நேருக்கு நேர், அந்தப் பூரண ஸ்வரூபத்தை நேருக்கு நேர் என்னிக்கேனும், எந்த ஜன்மத்திலேனும் கூடத் தரிசிப்பது சாத்தியமோ? முதலில் அதுபோல் ஒரு பூரணமே இருக்கோ? ஒண்ணுமில்லே. கோவிலுக்குப் போகும்போதெல்லாம் காணும் மூலவிக்ரஹத்தை, வீட்டில் தினப்படி ஸ்தோத்திரத்தைச் சொல்லிண்டே, மனசில் கூட்டி மனக்கண் முன் எழுப்பப் பார்த்தாலே கிடைக்க மாட்டேன்கிறது. அதென்னவோடி அம்மா... எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கு.

சத்யம் கடைசியில் ஜயிக்கலாம்.

ஆனால் சந்தேகத்துக்குத்தான் பலர் ஜாஸ்தி.

ஆனால் கமலியை நினைக்கறப்போ, துளிக்கூடச் சந்தேகமேயில்லை. இதோ வயிற்றுக்குலையிலிருந்து அன்னிக்குக் கடைசியாக் கண்டபடி அப்படியே எழறாள்.

அன்னிக்கென்ன? வெள்ளிக்கிழமை. அந்தி வேளைக்குக் குத்துவிளக்கை ஏத்திட்டு விளக்கு முகப்புக்குச் சூட்ட ரெண்டு மல்லி பறிச்சுண்டு வரேனம்மான்னு புழைக்கடைப் பக்கம் போனவள்தான்!

இப்போ அவளுக்கென்ன வயசிருக்கும்? சாமாவுக்கு இப்போ 32 ஆறது. அத்தோடு அஞ்சைக் கூட்டிக்கோ. காணாமல் போனப்போ வயசு 17. அப்படின்னா ஐயோடி கமலி இப்போ நீயே பேரன் பேத்தி எடுத்திருப்பாயே! அன்னிக்குப் பார்த்தபடியே அழியாமேனிக்கு மனசு நினைச்சுண்டிருந்தால் அது உன் தப்பா?

எப்பவுமே வீடு நெருப்பு பத்திண்டால், தெருவில் போற வாளுக்குத்தான் முதலில் தெரியறது. வீட்டில் இருப்ப வாளுக்கல்ல. அதுவும் ராத்ரி வேளையாயிருந்துட்டா. தலகாணி புடிச்சுண்டப்புறம்தான் அலறிப் புடைச்சுண்டு எழுந்திருக்கோம். அப்போன்னு தூக்கமும் நம்மைத் தனியா அசத்திடறது. அது மாதிரி கமலி, உன் விஷயத்தில் நாங்கள் ஏமாந்து போயிட்டோமா? இல்லே உன்னை மை வெச்சு யாரேனும் கடத்திண்டு போயிட்டாளா?

மனுஷாள் இருக்காளே! பாதிப்பேருக்கு விஷ நாக்கு. மறு பாதிக்குப் பொய்யிலேயே புழுத்த நாக்கு. கொண் டாடும் உறவுக்கு அடிப்படி அசூயை. அப்படியே ஒருத்தர். ரெண்டுபேர் உண்மையைச் சொன்னால், நமக்கு உடம் பெரிச்சல். இந்த நிலைமையில் எது நிஜம், எது பொய்? என் செய்வேன் இப்போ?

''உங்கள் கிணற்றடியில் ஒரு ஆள் காத்திருந்தான்— அகஸ்மாத்தா நான் ஜலமெடுக்க எங்காத்துக் கிணத்துக்கு வந்திருந்தேன். ரெண்டுபேருமா கொல்லைப்புறத் தோப்பு வழியாகவே நடந்து போயிட்டா. இருட்டில் அப்போ நான் யாருன்னு கண்டேன்? இப்போ உங்கள் பரவாட்டலைப் பார்த்தால் உங்கள் பொண்தானோன்னு நினைக்க வேண்டி யிருக்கு.''

கமலி, அப்படி நீ கடிவாளத்தைத் தெறிச்சுக்கிற மாதிரியா உன்னை அளவுக்கு மீறி அடக்கி ஆண்டோமா? நீ அப்படிப்பட்ட பொண்ணும் இல்லையே! அடங்கின சரக்குத்தானே! பள்ளிக்கூடத்து நேரத்துக்குப் போய் நேரத் துக்கு வந்துடுவையே! ஒரு சாக்குப் போக்குச் சொன்ன தில்லையே! இல்லே, பருவத்தின் கோளாறென்று சொல்லும் படி, உன் முகத்தில் மருந்துக்குக்கூட ஒரு பரு நாங்கள் கண்டதில்லையே! அந்த மாசு மறு இல்லாத முகத்தில், மோவாயில் உனக்குப் பிறவியிலேயே இருந்த திருஷ்டி

மச்சம், நீ சிரிக்கறப்போ, உசிர் கண்டு அசையற அழகே தனியாச்சே! உன்னை நாங்கள் எப்படிச் சந்தேகப்படுவோம்?

"மாமி, நான் சொல்றேனேன்னு நினைக்காதேங்கோ. இது ஏதோ ப்ளானாத்தான் நடந்திருக்கு. இல்லாட்டா நீங்க சொன்னதை வெச்சுண்டே, ஒண்ணு கேக்கறேன். அன்னிக்குன்னு உங்கள் பொண் அவளுடைய நகை அத்தனையும் பூட்டிக்க வேண்டிய அவசியம் என்ன?—கால் கொலுசு உட்பட."

—அட ராமா, ஒரு வெள்ளிக்கிழமை குழந்தை அலங்காரம் பண்ணிக்க ஆசைப்படப்படாதா? அதுவே ஒரு குத்தமா ஆயிடணுமா?

"எல்லாம் போறாத வேளை. புத்தி தெளிஞ்சா தானா கழுதை வந்து சேர்றது விட்டுத் தள்ளுங்கோ. நாம் கவலைப்பட்டுத்தான் என்ன பிரயோசனம்?"

"அடி கமலி, வயிறு கொதிக்கறதுடீ, நீ போனதுகூடப் பெரிசாயில்லேடி. என்னிடத்திலேயே என் குழந்தையைத் திட்ட, நான் எதிர் பேச முடியாமல் கேட்டுண்டிருக்க இடம் கொடுத்துப் போச்சே, அது தாங்கல்லேடி!

"உங்கள் பெண் கட்டாயம், இன்னிக்குப் பதினஞ்சாம் நாள் எந்த வழியாப் போனாளோ, அந்த வழியாவே, அதே வேளையில் திரும்பிடுவா. எனக்கு சோழி சொல்றது."

"அங்கே பார்த்தேன்; இங்கே பார்த்தேன்; அவனோடு பார்த்தேன்; இவனோடு பார்த்தேன்."

"தூரத்தான் பார்த்தேன். உங்கள் பொண்ணுதானா தெரியாது. ஆனால் நிச்சயமாப் பார்த்தேன்."

ராமா! ராமா! ராமா!

காதைப் பொத்திண்டால் ஆயிடுத்தா...? செவி ஜவ்வில் வார்த்தைகள் ஒட்டிக்கொண்டு கழல முடியாமல் தும்பி யடிச்சுக்கறதே!

ஊரை விட்டே மாத்திண்டு ஓடி வந்துட்டால் ஆயிடுத்தா? எங்கே போனால் வயிற்றில் கூடவே சுமக்கும் அஸ்திப் பானையை என்ன செய்யறது? உள்ளே தணல் திடீர் திடீர் பகீர் பகீர்-வயிறு சுட்ட மண்ணா மாறிடுத்து அஞ்சு வருஷம் கழிச்சு எந்த முன்னோர் வழிப் புண்ணியமோ, மறு படியும் எப்படி ஈரம் கண்டு கசிஞ்சுதோ? பூச்சி வெச்சு சாமாவும் பிறந்து ஆளும் ஆயிட்டான். ஆயுசோடு இருக் கணும்.

கமலி, கடைசியா கேக்கறேன்... இது எத்தனாவது கடைசியோ?... நீ பறிபோனையா, துரோகம் பண்ணி னையா? ஆனால் நீ எப்படி பதில் சொல்லுவே? பேசா மடந்தையா, புரியாத புதிரா சாகாவரம் வாங்கிண்டு என் தொண்டையில் மாட்டிண்ட மயிராய் சுத்திச் சுததிவரே! கடைசியா நானும் உனக்கு ஒண்ணு சொல்றேன். போன கையோடு மானம் பெரிசா, உன் கையாலோ பிறர் கையாலோ நீ செத்திருந்தால் நிம்மதி. இல்லே, இன்னும் உசிரோடு இருக்கேன்னா, குடிசையில் வாழறையோ, மாடியில் அட்டம் செலுத்தறையோ, எங்கிருந்தாலும் சரி நல்லபடியா, சௌக்கியமாயிருந்தால் சரி.

# வித்துக்கள்

"போஸ்ட்!"

அம்புஜம் எழுந்து மேலாக்கை அள்ளிப் போட்டுக் கொண்டு வாசலுக்கு ஓடினாள்.

கொழுகொழுவென்று பசுப்போல் உடம்பு, வயிறு எல்லாம் 'லொங்கு லொங்கு' என்று ஆடின.

தாளைத் தள்ளி கதவைத் திறப்பதற்குள் தபால்காரன் மூன்றாம் முறையும் கூவிவிட்டான். அவள் கையில் ஒரு கவரைத் திணித்துவிட்டுச் சென்றான். அவனுக்குச் சற்றுச் சிடுசிடுப்புத்தான்.

கடிதத்தை முன்னும் பின்னும் திருப்பிப் பார்த்துவிட்டு ப்ளாங்கு-தபால் முத்திரையைக் கணிக்க முயன்று தோற்றுப் போய், திறந்து பிரித்தாள்.

Dear Parent,

இந்தக் கடிதம் கண்ட சுருக்கில் பள்ளிக்குத் தயவு செய்து வரவும். உங்கள் பையன் ஸ்ரீதரைப் பற்றிப் பேச வேண்டும்.

—கிறுக்கல்—

தலைமை உபாத்யாயினி.

இது இரண்டாவது முறை.

இதற்கு முன், பக்கத்து ஸீட் பெண்ணின் பின்னலை, அவளுடைய கத்திரிக்கோலைக் கொண்டே கத்தரித்துவிட்டான். அம்புஜத்துக்குத் திகிலெடுத்தது. இந்த சமயம் என்னவோ?

வாசலிலிருந்தே கண்ணோட்டத்தில் கூடத்தில் சுவர்க் கடியாரம் மணி இரண்டு காட்டிற்று.

உள்ளே வந்தாள். நரேஷ், கைகால்களை விரித்தபடி, வாய் மொக்கு லேசாய்த் திறக்க, அரைக் கண்ணில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். அவளுக்குப் புன்னகை அரும்பிற்று. குழந்தைகள் கொடுத்து வைத்தவர்கள். நரேஷ் தூங்கும் நேரம், மாருதியும் ஸ்ரீதரும் பள்ளிக்குப் போயிருக்கும் நேரம்தான் அவளுக்கு ஓய்வு நேரம். நாள் பூரா உழைத்துவிட்டுப் பகலில் தூக்கத்தைத் திருடும் நேரம் ஆனால் இன்று இனிமேல் வழியில்லை. பாதியில் கலைந்த தால் உடம்பு முறித்துப் போட்டாற்போல் வலித்தது.

இன்னும் அரைமணி நேரத்தில் கிளம்பி, பள்ளிக்கூடத் துக்குப் போய், திரும்பியும் ஆகணும், டிபன் பண்ண, 'வெங்கட்'கு இது போன்ற கம்பன்ஸுக்கெல்லாம் நேரம். கிடையாது. தினமே வீடு திரும்ப இரவு எட்டு. அப்புறம், டிபன். அப்புறம் 9-30, பத்துமணிக்குச் சாப்பாடு. அப்புறம் பற்றை ஒழித்துப் போட்டுவிட்டு, படுக்கையில் அவள் விழுகையில் ஸ்—பதினொண்ணு!

"பால்!"

அட, விடிஞ்சேபோச்சே! இப்போத்தான் கண் மூடினாற்போல் இருந்தது.

இந்த நியதி இப்படியே படிஞ்சு போச்சு, இது மாறினால் கூட சரிப்படாது எனுமளவுக்கு.

அம்புஜம் உட்கார்ந்து தலைவாரிக்கொள்ள ஆரம்பித்தாள். கூந்தல் நீர்வீழ்ச்சி போல் முதுகில் இறங்கி, தரையில்

புரண்டது. அவள் பாராட்டாத பலங்களில் அவள் கூந்தல் ஒன்று. அவள் எவ்வளவோ விஷயங்கள் பாராட்டுவ தில்லை. தனக்கு ஒரு பெரும் அழகு உண்டு என்று அவளுக்குத் தெரியும். ஆனால் அவள் அதைப் பேணுவ தில்லை. அவள் பி.ஏ. லிட்... ஃபஸ்ட் க்ளாஸ். ஆனால் பிடிவாதமாகத் தமிழிலேயேதான் பேசுவாள். கலியாணத் துக்கு முன் ஏ.ஜி. ஆபீஸில் உத்யோகம் பார்த்துக்கொண் டிருந்தாள். இந்தக் காலத்தில் பெண் பார்க்கும் உத்யோ கமும் அவள் கலியாணச் சீரில் ஒன்றாச்சே!

ஆனால், திருமணம் ஆனதும், வெங்கட் அவள் வேலைக்குப் போவதை நிறுத்திவிட்டான்.

"புருஷன் கொண்டு வந்து போடுவதில் குடித்தனம் பண்ணி, வீட்டை ஒழுங்காக வைத்துக்கொண்டால் போதும்."

"நீங்கள் ஆபீஸர் ஆனாலும், நான் மாஸம் ரூ. 600 வீட்டுக்குக் கொண்டு வந்தால், இந்த விலைவாசி நாளில் கசக்குமா? எனக்கு ஒரு பௌடர், ஸ்னோ, விகோ-டர்மரிக்குக்கு உங்களிடம் கை நீட்டிக்கொண்டு நிற்கணுமா?" என்றெல்லாம் அம்புஜம் வாதாடவில்லை.

"நீங்கள் சொல்றபடியே."

அதிலெல்லாம் அவளுக்கு ஆசையில்லை. அவள் முகத்தில் ஒரு மாசு மறு கிடையாது. கில்ட் அணியமாட் டாள். இருந்தால் அசல், அயன், கிடைக்காவிட்டால் போலி வேண்டாம். மொழு மொழுவென்று வெறுங்கைகளே அவளுக்கு அழகாயிருக்கும்.

வெங்கட் லக்கி ஃபெலோ.

குழந்தைகள் சுருக்கவே வந்துவிட்டன.

மாருதி. (அவன் பெயர் அல்ல.)

ஸிஸரீயன் கேஸ்.

குறை ப்ரசவம்.

இன்கயூபேட்டர் பேபி. இங்க் ஃபில்லர் மூலம் உணவு. ஏகப்பட்ட மாத்திரைகள், சத்துக்கள் தாய் செத்துப் பிழைத்தாள்.

அப்புறம் இரண்டு அபார்ஷன்கள்.

பிறகு ஸ்ரீதர்.

இன்க்யூபேட்டர், இங்க் ஃபில்லர் ஃபீடிங் மாத்திரை. ஊசி, இத்யாதி.

பெரிய உசிர் ஊசலாடுகையில், சின்னதை என்ன கவனிக்க முடியும்?

டாக்டர், வெங்கிட்டுவை எச்சரித்துவிட்டார்: "மிஸ்டர் உங்கள் மனைவி இனிக் கருத்தரிக்க லாயக்கில்லை. அப்படி நேர்ந்தால், அவள் உயிருக்கே ஆபத்து. அப்புறம் நாங்கள் பொறுப்பு இல்லை."

நாலு வருடங்களுக்குப்பின் அப்படித்தான் நேர்ந்தது. ("பெண்ணுக்கு ஆசைப்பட்டேன். பிள்ளையா? சரி, பெருமாள் சித்தம் அப்படியானால் நாம் என்ன செய்ய முடியும்?" நீங்கள் ஒண்ணும் செய்யவேண்டாம். கட்டாயமாகக் கருத்தடை ஆபரேஷன் செய்துகொண்டே ஆகவேண்டும். உங்களுடைய பரீக்ஷைகள் இத்தோடு போதும்.")

நரேஷ், முழு மாதம் முறையாகத் தாங்கி நார்மல் பிரசவம் கடைசியில் ஆயுதப்ரயோகம், அவ்வளவுதான்.

பிரஹஸ்பதிகள் (அல்லது தன்வந்தரிகளா?) பொய்த்துப் போனார்கள். குழந்தைகள், தெய்வம் தந்த வரங்கள். பெற்றோர்களின் நல்லம்சங்கள். ஒவ்வொருத்தனிடமும் விதம் விதமாகக்கூடி, மூன்றுபேரும் மூன்று சிவகுமாரர்கள்.

பாட்டியிருந்தால், வியாழனுக்கு வியாழன் மாலை மூவரையும் உட்கார்த்தி வைத்து ''நாட்டுப்பொண்ணா நீயும் உட்கார்'' கொட்டாங்கச்சியை மூணு தரம் சுத்தி குடு குடுவென்று ஓடி, மிளகாயை அடுப்பில் கொட்டுவாள். ஆனால் இங்கே காஸ் அடுப்பு. பாட்டியும் இல்லை. அம்புஜத்தால் முடிந்தது, மாலை விளக்கையேற்றினதும், உதிரி விபூதியை மூவருக்கும் இடுவாள்.

ஆனால் அவளுக்குத்தான் இந்த வயதிலேயே உடம்பு ஏகமாய்த் தடித்துவிட்டது. இரண்டு ஸிஸரீயன். கருத் தடைக்குப் பின் வேறு எப்படியிருக்கும்? முன், பின் எல்லாம் எக்கண்டமாய்... தளர்ந்து சரிந்துவிட்டது.

அப்புறம் இந்தக் குழந்தைகள்—ஓ மை காட்!

மாருதி— எதிர்வீட்டு ராயர் மாமா வெச்ச பேர் அப்படியே தொற்றிக்கொண்டுவிட்டது. சஞ்சீவி மலையைத் தாங்கிக்கொண்டு கனத்தில் பறந்து வரும் ஆஞ்சநேயர் போல் அவனிடம் எப்பவும் ஒரு ஆக்ரோஷம் இருந்தது. நடையே கிடையாது, பாய்ச்சல்தான். காலடியில் எது பட்டாலும் நரேஷ் உள்பட, உதைத்துத் தள்ள வேண்டியது தான். பள்ளிக்கூடத்திலிருந்து உள்ளே நுழைந்ததும், தொட்டி முற்றத்தைப் பார்த்து வீசும் டிபன் டப்பா அங்கே விழுந்தால் போச்சு. எப்படியேனும் குறி பிசகி, பாதி அந்தரத்தில்... மூடி திறந்துவிட்டால் உள்ளேயிருக்கும் மிச்சம் மீதாரி (கண்டிப்பாய் இருக்கும்) சமயலறை பூரா சிதறி ஒரே அலமாரிதான். வேலைக்காரி, வண்ணாத்தி, ரிக்ஷாக் காரன், அவன் நிலைத்து நாலு மாதம் நிற்பதில்லை. ''அவங்க வீட்டிலே உடை மாத்தர மாதிரின்னா, ஆள் மாத்தறாங்க!'' அதுவே ஒரு 'ஜோக்' எல்லோரோடேயும் குஸ்தி. அண்டை வீட்டுப் பையன்களை வலுச்சண்டை சண்டையில்லாமல் இருந்தாலே அவனுக்குச் சண்டைக்கு ஒரு காரணமாய் அமையும். (மரியாதையா என்னோ

விளையாட வரையா இல்லே? அவ்வளவுதான், சண்டை) வெங்கட் ஸ்கூட்டரில் ஆபிசுக்குக் கிளம்பும் சமயத்தில் திடீரென்று காற்று இறங்கியிருக்கும், அல்லது ஏதேனும் ஒரு முக்யமான பாகத்தைப் பிடுங்கிவிட்டிருக்கும். அடி, உதை— சிணுங்கினால்தானே!

கொடுப்பதுபோலவே, வெளியிலிருந்து வாங்கிக் கொண்டும் வருவான். நெற்றிப் பொட்டில் ரத்தம் ஒழுகும். அதையே அவன் உணர்ந்தானோ இல்லையோ?

அப்புறம் அந்த உடம்பில் அசாத்திய பலம். மிருக பலம். ஆசையோடு ஓடிவந்து கட்டிக்கொண்டாலும் சரி, ஆத்திரத்தில் தலையால் வயிற்றில் முட்டினாலும் சரி. அம்புஜத்துக்குக் குலை நடுங்கும். காரோ ரயிலோ மோதினால் இப்படித்தானோ?

மூத்தது பற்றி இவ்வளவு சொன்னபின் ஸ்ரீதரைப் பற்றித் தனி ஆவர்த்தனம் தேவையில்லை. அத்தனையும் தவிர, ஒன்றிரண்டு, அம்சங்கள் கூடயிருக்குமே தவிர குறையாது.

இவர்களின் பயங்கர சுறுசுறுப்பு தாங்க முடியாமல் டாக்டரிடம் யோசனை கேட்கும் அளவுக்குக் கொண்டு போய்விட்டது. 'வெங்கட்'கு இதற்கெல்லாம் நேரம் கிடையாது.

டாக்டர் புன்னகை புரிந்தவர், மாதத்துக்கு முன்னாலேயே பிறந்துவிட்ட கேஸ்களிலேயே இது ஒரு "பிராப்ளம். ஹைபர் சென்சிடிவிடி. டோன்ட் ஒர்ரி. நாளாவட்டத்தில் சரியாய்ப் போய்விடும்."

"நாளாவட்டத்தில் என்றால் எப்போ டாக்டர்?" அம்புஜத்துக்குக் கண் துளும்பிற்று. தொட்டதற்கெல்லாம் கண்ணீர் உகுக்கும் ஆசாமி அல்லள் அவள்.

டாக்டர் கையை விரித்தார். "என்னைக் கேட்டால்? நாளாவட்டத்தில் என்றால் நாளாவட்டத்தில்தான்— வேணுமானால் 'ட்ராங்குலைசர் ஷாட்' ஒண்ணு கொடுக்க லாம்."

"கொடுங்களேன் டாக்டர்!"

"நோ. ஏன் கொடுக்கணும்? பையன்களிடம் பொறுமை யாயிருங்கள். பிரியமாயிருங்கள். பெற்றவர்களுக்கு அதை விட என்ன வேலை!"

நரேஷ் குறைப் பிரசவத்தில் பிறக்காவிட்டாலும் முன்னதுகளின் சகவாசம், அவனும் ஹைப்பர்.

இந்த மூவரிடையிலேயே வீடு நித்ய யுத்தகளமாகி விட்டது.

"டேய், இன்னிக்கு நீ கொலைதான்."

"தொட்டுப் பாரேன், உன்னை ஒழிச்சுக் கட்டிடு வேன்."

ஒருத்தன் கையில் கிரிக்கட் மட்டை. மற்றவன் கையில் சாக்கடை குத்தும் இரும்புக் கழி.

இவர்கள் ஆடும் சிலம்பத்தில், நடுவில் உட்கார்ந்து கொண்டிருக்கும் நரேஷ் மண்டையில் பட்டு, மூளைத்து விடும். வீல்—

அம்புஜம் அமைதியாகப் படித்துக்கொண்டிருப்பாள்.

"அத்திம்பேரே இதுவரை குறைஞ்சது இருபது தடவை படித்திருப்பேன். இந்த விஹார் ஆஃப்வேஃப்பீல்ட், அப்புறம் டேல் ஆஃப் டு சிடிஸ்— இது ரெண்டும் அலுக்கவே மாட்டேன்கிறதே! ஏன் அப்படி?

அதைவிட ஆச்சரியம், இந்தப் பூகம்பத்துல் நீ எப்படிப் படிக்கிறாய்?''

புன்னகை புரிந்தாள். ''நீங்களேதான் பார்த்துண்டிருக்கேளே! நான் என்ன பண்ண முடியறது? இவர்களாலேயே, ஒரு சினிமா, டிராமா, பொழுதுபோக்கு, கச்சேரி—சங்கீதம் என்றால் எனக்கு உயிர்—எல்லாத்தையும் மறந்தாச்சு. முகமாற்றமாய் பக்கத்து வீட்டுக்குப் போய் ரெண்டு நிமிஷம் பேசலாமா என்கிற ஆசையோடு சரி. அதற்குள் வீடு என்ன ஆகிறதோ என்று அடிவயிற்றில் நெருப்பு. காலைப் பிடுங்கிவிட்டார்களோ? எந்த பிளக்கில் கை வைக்கிறான்களோ? அண்டை வீட்டுக்காரர்கள் இங்கே வரமாட்டேன்கிறார்கள். என் பிறந்த வீட்டார் அஞ்சுகிறார்கள். அம்மாவுக்கு ஹை பிளட்பிரஷர்—தெருவிலேயே இவர்களைக் கண்டால் ஒரு அச்சம். ''பாவம் அப்புஜ மாமி அவ்வளவு நல்லவள்!'' என்று அவர்கள் அங்கலாய்க்கையிலேயே எனக்கு எரிச்சல் வரது.''

ஆழ்ந்த யோசனையுடன் தனக்கே ''பையன்கள் துஷ்டைகள் என்பதால் நம் கசப்பை அவர்களிடம் காட்டலாமா? எல்லாரும் கரித்தும் பெத்தவாளும் கரித்தால் அதுகள் என்னத்துக்குத்தான் ஆறது? அதுகளுக்கும் நாம் நல்ல ஸ்டார்ட் கொடுக்கணும்.''

மாருதியையும் ஸ்ரீதரையும் சேர்த்த பள்ளிக்கூடம் வட்டாரத்திலேயே, ஏன் பட்டினத்திலேயே பேர் போனது. இடம் கிடைத்ததே பெரிசு. சம்பளம் ரிக்ஷா, அவ்வப்போது அங்கே எக்ஸ்கர்ஷன், இங்கே கேம்ப், இந்த சேரிட்டி அந்த டொனேஷன் என்று சராசரி இருவருக்கும் சேர்த்து மாதம் ஒரு பச்சை நோட்டு எகிறிற்று. இதனாலேயே சொல் இடி வேறு: ''அவளுக்கென்னடி...''

பஸ்ஸை விட்டு இறங்கினதும் பையனைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு நடந்தாள். பையனுக்கு இவ்வளவு எலும்புக்கனமா? அவனை அதிகமாகத் தூக்கின தில்லை. பள்ளியை அடைந்து மாடியேறி எச்.எம் அறையைச் சேர்வதற்குள் மூச்சு சிலிர்த்து முகம் முத்திட்டு, நெற்றியில் இரண்டு பிரிகலைந்து அலைய ஆரம்பித்து விட்டன.

"ஆ! தட்பாய்-கம் இன்- இல்லை, என்னோடு வாங்க-ஐ வில் ஷோ யு ஃபர்ஸ்ட் எச்.எம். வாட்டசாட்டம். நடையும் ராணுவ ஆணவ நடை. நரேஷைத் தூக்கிக்கொண்டு பாதி ஓட்டம். பாதி நடையாகப் பின்தொடர்வதே பெரும் பாடாயிருந்தது.

நேரே எச்.எம். குழந்தைகளின் பாத்ரூமுக்குச் சென்று வாஷ்பேஸினைக் காட்டினார்: மின்னல்போல் ஒரு விரிசல் ஓடிற்று.

"உங்கள் பையன் கல் எங்கிருந்து எடுத்து வந்தான்? எப்படி உடைக்க முடிஞ்சது? இன்னும் திகைப்பாயிருக்கு. அவன்தான்; சந்தேகமே வேணாம். கையும் பிடியுமா அகப் பட்டுக்கிட்டான். நேற்று நடந்தது. உங்களிடம் ஏதேனும் சொன்னானா?"

அம்புஜம் இல்லையென்று தலையை ஆட்டினாள்.

"அவன் எங்கே சொல்லப் போறான்? அவனுக்கு முக்ய மாக்கூடப் பட்டிருக்காது. துளிக்கூட பயமே கிடையாது."

எச்.எம். ஏதோ சொல்லிக்கொண்டே முன் நடக்க அம்புஜம் இடுப்பில் நரேஷுடன் பின்தொடர்ந்தாள். அவள் மனம் தீவிரமாக ஒரு மனக்கணக்கை முடைந்து கொண்டிருந்தது.

குறைஞ்சது 350 இருக்கும். அவரைச் செக் வெட்டச் சொன்னால், கணக்கில் இடங்கொடுக்கிறதோ இல்லையோ? முதலில் சொல்லியாகணும். இன்னிக்குக் குழந்தை பலி தான். பயம்மாயிருக்கு. ஒரு வளையலை வெச்சால் போதுமா? மோதிரமும் வெக்கணுமா? அதுக்கும் எனக்குப் பழக்கமில்லையே! அவர்தானே செய்யணும்! அவரிடம் எதையும் சொல்லாமல் இதுவரை இருந்ததில்லை. சொல் லாமல் இருக்கமாட்டேன். ஆனால் எப்படி?

எச். எம். தன் அறையை அடைந்ததும் ஸ்ரீதரை அழைத்து வர ப்யூனை அனுப்பினாள்.

"பாய்ஸ் வில் பி பாய்ஸ். வி. நோ. அவங்களுக்கே ஒரு நாசபுத்தி உண்டு. அதுவும் தெரியும். முக்கால்வாசி பெற் றோர்கள் வீட்டில் தொந்தரவு பொறுக்காமல் எங்கேச் சானும் அடைச்சுவெக்கத்தான் பையன்களைப் பள்ளிக்கு அனுப்புறாங்க. இதுக்காகவே நாங்கள் எங்கள் ரேட், டிஸிப்ளின் நிபந்தனைகள் எல்லாம் ஸ்டிரிக்டா வெச்சிருக் கோம். பசங்களின் சேட்டைக்கும் நாங்கள் ஒரு மார்ஜின் தர்றோம். ஆனால் அப்படியும் அதையும்மீறி—ஆ! பையன் இதோ வந்திருக்கான்!"

எதிர்பாராமல் அம்மாவைப் பார்த்ததும் ஸ்ரீதர் முகத்தில் ஆச்சரியம், சந்தோஷம், அப்புறம் ஒரு பயம்— இந்தக் கலவையில் உருவாய ஒரு ப்ரக்ஞை எல்லாம் சேர்ந்து முகம் தனி அழகிட்டது. அம்புஜத்துக்கு அவனை அப்படியே அணைத்துக்கொள்ள மனம் தவித்தது. துஷ்டை துஷ்டை யென்று கரிக்கிறோமே. குழந்தைகள் எவ்வளவு நிஷ்களங்க மானவர்கள்! பெற்றோர்கள் நாம் நம் சுயநலத்தில் திடீ ரென்று அவர்களைப் பிறவியில் தூக்கியெறிந்துவிட்டு, அதுகள் மூச்சுத் திணறித் தத்தளித்துக் கொண்டிருக்கையில் மேலே கல்லை விட்டும் எறிகிறோம். கொடுமை நாமா? அவர்களா?

எச். எம். என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாள்?

''எங்களுடைய சட்ட விதிப்படி, இந்த சொத்தழிப் புக்கும் உங்கள் பையனை வீட்டுக்கு அனுப்பிச்சுடலாம்—''

அம்புஜத்துக்கு வயிற்றைக் கலக்கிற்று. பிள்ளையாரே! உண்டியிலே கால்ரூபா போடறேன்—

ஆனால் அதில் ஒரு சிக்கல்—''

பிள்ளையார் சக்தி வாய்ந்தவர்தான்.

''மூணாவது வகுப்புலே ஒரு பையன் இருக்கான். உங்கள் பையனை இப்பிடியே விட்டுவெச்சா, இவனுடைய விசுவரூபம் எப்படியிருக்கும் அதுதான் அவன். அவனைக் கண்டால் க்ளாஸே நடுங்குது. ஸ்டூடண்ட்ஸ், டீச்சர் எல்லா ரையும் ஒரு டென்ஷன்லேயே வெச்சு அந்த டென்ஷன் நடு வுலேதான் இருக்கறதுதான் அவனுக்குச் சரியாயிருக்கு. வேறு மாதிரியாவே அவனால் இருக்க முடியல்லே. அவனை என்ன செய்யறதுன்னு தெரியாமலே முழிச்சுக்கிட்டுருக்கோம். முதல்லே அவன் மேலே ஒழுங்குமுறையா ஆக்ஷன் எடுத் துட்டுன்னா உங்கள் பையன்மேல் நடவடிக்கை டிசைட் பண்ண முடியும்? ஆமாம் இந்தப் பெற்றோர்கள் எல்லாம் என்ன செய்யறாங்க? பெத்துட்டு, பட்சி மாதிரி பறக்க விட்டுடறாங்களா?''

அம்புஜம் ஆச்சர்யமுற்றாள்.

''அப்படி என் பையனையும்விட ஒரு வால் இருக்கானா என்ன?''

எச்.எம். எழுந்தாள். ''கம் வித் மி!''

ஸ்ரீதரும் தொடர்ந்தான்.

வகுப்பில் பாடம் நடந்துகொண்டிருந்தது. அவர்களைக் கண்டதும் ஓசை சட்டென அடங்கிற்று.

எச். எம். கணீரென்று:

"கார்த்திகேயன்! ஸ்டாண்ட் அப்!"

மாருதி ஒரு தினுசாய், மனமில்லாமல் அலட்சியமாய், கம்பீரமாய், மெதுவாக எழுந்து நின்றான். கூட்டிலடைத்த விலங்குபோல் குமுறும் சீற்றம் அவன் கண்களில் சிந்திற்று.

அவனைக் கண்டதும் தாயின் கண்கள் கனிந்தன.

"இவன் என் பையன்தான்—"

"வாட்?" எச். எம். கைமறதியாக எடுத்து வந்துவிட்ட பேப்பர் வெய்ட் விழுந்து தரையில் உருண்டது.

"எஸ் லுக்"—அம்புஜம் நரேஷை இடுப்பிலிருந்து இறக்கி 'ணக்'கென்று கீழே நிறுத்தினாள். நரேஷ் வாயில் விரலைச் சப்பிக்கொண்டு நின்றான்.

"அதோ அவன்—" மாருதியைக் காட்டி, "இதோ இவன்.." ஸ்ரீதரைக் காட்டி "இவங்க இங்கேதான் முழுக்க படிச்சி முடிக்கப் போறான்கள். அடுத்த வருஷம் அதோ இவனையும்"—நரேஷை முதுகில் தட்டி... "இங்கேதான் சேர்க்கப் போறேன்."

எச். எம். முகத்தை இரு கைகளிலும் பிடித்துக்கொண்டாள். அவளுக்குக் கன்னங்கள் கதுப்பாயின. அவளுடைய பி.ஏ., பி.டி., எம்.பில்., இதுவரை தோரணை, பேச்சில் த்வனித்த ஆணவம் எல்லாம் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போயின.

"ஏன் மாமி, நீங்கள் பிள்ளையாண்டிருக்கேளா?"



